# திருக்கோயில்கள் வழிகாட்டி

## கன்னியாகுமரி மாவட்டம்





தமிழ்நாடு அரசு
இந்து சமய அறநிலையத்துறை

# திருக்கோயில்கள் வழிகாட்டி

## கன்னியாகுமரி மாவட்டம்





தமிழ்நாடு அரசு
இந்து சமய அறநிலையத்துறை

| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | ஜூலை 2015 |
| முன் அட்டை | : | கன்னியாகுமரி அருள்மிகு பகவதி அம்மன் |
| உள் பக்கம் | : | சுசீந்திரம் அருள்மிகு தாணுமாலயன் திருக்கோயில் ஆஞ்சநேயர் |
| பின் அட்டை | : | சுசீந்திரம் அருள்மிகு தாணுமாலயன் திருக்கோயில் இராஜகோபுரம் |
| அச்சிட்டோர் | : | பிரிண்ட் பாய்ண்ட் ஆப்செட், நாகர்கோவில். |
| தொகுப்பு | : | முனைவர். அ. கா. பெருமாள் |
| பக்கம் | : | 304 |
| விலை | : | ₹ 200 |
| வெளியிட்டோர் | : | தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையத்துறை |
| உரிமை | : | தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையத்துறை |

## அமைதி – வளர்ச்சி – வளமை



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

புரட்சித்தலைவி **அம்மா** அவர்கள்

**இரா. காமராஜ்**
உணவுத்துறை,
இந்து சமயம் (ம)
அறநிலையத்துறை அமைச்சர்.



தலைமைச் செயலகம்,
புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை - 600 009.

# வாழ்த்துச் செய்தி

**மாண்புமிகு தமிழக முதல் அமைச்சர் இதய தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா** அவர்களது ஆட்சியின் சாதனைகளின் வைரக்கல்லில் ஒன்றாக, வண்ணமும், எண்ணமும் இணைந்து எழில் சேர்க்கும் விதமாக இவ்வழிகாட்டி புத்தகம் அமைந்துள்ளது.

பிறவி எடுத்ததன் பலனை ஒவ்வொரு மனிதனும் அடைய வேண்டும் என்றால் ஆன்மாவைப்பற்றி அறிய வேண்டும். ஆன்மாவைப் பற்றி அறிய ஒரே வழி திருக்கோயில்களுக்குச் சென்று வழிபடுவதே. மனித மனம் உயரவும் சமூக வாழ்க்கை சிறக்கவும் அனைவருக்கும் வழிகாட்டியாகத் திகழ்வது திருக்கோயில்களே.

தமிழகத்தின் பெருமையே திருக்கோயில்களைச் சார்ந்துதான் அமைகிறது. தமிழகத்தில் "**கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி**" என்ற இந்தப் புத்தகம் பக்தர்களுக்கும், பக்திச் சுற்றுலாப் பயணிகளுக்கும் கருத்துப் பெட்டகமாகவும் கருவூலமாகவும் திகழும் என்பதில் ஐயம் இல்லை.

இவ்வழிகாட்டி புத்தகம் எல்லா வகையிலும் மின்னி மிளிர்கிறது. இதனை நேர்த்தியோடு உருவாக்கிய அனைத்து நெஞ்சங்களுக்கும் வாங்கிப் பயன்பெறும் உள்ளங்களுக்கும், என் அன்பையும், நெஞ்சம் நிறைந்த வாழ்த்துக்களையும் நெகிழ்வோடு பதிவு செய்கிறேன்.

இரா. காமராஜ்

**முனைவர். ரா. கண்ணன், இ.ஆ.ப.**
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்,
சுற்றுலா பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை.



தலைமைச் செயலகம்,
சென்னை- 600 009.
☎: 044- 25670820

## வாழ்த்துரை

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாகவுள்ளது. இதனை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்
திருக்கோவிலில்லாத திருவிலூர்
....... ஊரல்ல அடவி காடே ......"

என்னும் கருத்தாழம் தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கைச் சூழல் மற்றும் கால வளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ளத் துணியும் போது ஏற்படும் மனச்சலனம் ஆன்மீகத் தேடல்களை நோக்கி நடக்கிறது. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத் தலங்கள், மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருக்கோயில்கள், இராசித்தலங்கள் என மக்கள் தங்களின் தேவைகளுக்கேற்ப திருத்தலங்களை நோக்கிப் பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோயிலைப்பார்க்கும் போது அதில் உள்ள கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டை ஓவியங்கள் அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கே எவரும் இலர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் வரும் புராண வரலாற்றுக் காலத்தில், இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்துவதன் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றன. உதாரணமாக சுசீந்திரம் அருள்மிகு தாணுமாலய சுவாமி திருக்கோயில் இராஜகோபுரம் ஓவியங்கள், திருப்புடைமருதூர் இராஜகோபுர ஓவியங்கள், திருக்குற்றாலச்

சித்ரசபை ஓவியங்கள் போன்றவை. ஆதலால் அதிகார பூர்வமாக வெளியிடப்படும் இவ்வழிகாட்டி நூல் பக்தர்கள் தாம் செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது.

மேலும் வெளிநாட்டு உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள், குறிப்பாக இந்து மதத்தின் மீதும் இந்தியாவின் பண்டைய காலசாரத்தை அறியவும் தங்கள் பயணத்திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டி நூல் நல்ல உறுதுணையாக அமையும்.

இந்து சமய அறநிலையத்துறையினரால் மாவட்ட வாரியாக வெளியிடப்படும் வழிகாட்டி நூல்கள் வருவது குறித்து என் மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும் மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்த்துகிறேன்.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பது அவ்வைப் பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத்தமிழ் மன்னர்கள் அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி, தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும் பொருளும் வழங்கி அவற்றைப் பண்புக்களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வியந்து போற்றும் கவின்கலைச் சிற்பங்களையும் ஓவியக்கலைகளையும் ஒவ்வொருவரும் கண்டு பேருவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாரக் கண்டு நெஞ்சுருக நின்று நினைத்ததை வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தலவரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு ஓர் வரப்பிரசாதம்.

இக்கையேடு வெளியிடுவதற்குத் தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில்களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

**முனைவர் ரா. கண்ணன்**

முனைவர். மா. வீர சண்முக மணி,
இ.ஆ.ப.

ஆணையர்,
இந்து சமய அறநிலையத்துறை



119, உத்தமர் காந்தி சாலை
நுங்கம்பாக்கம்
சென்னை - 600 034.
☎: 044- 28334816

## வாழ்த்துரை

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது திருக்கோயில்கள் தொடர்பான பழமொழி ஆகும்.

கோயில்களை மையமாகக் கொண்டே தம்முடைய வசிப்பிடங்களை நம் முன்னோர்கள் அமைத்துக்கொண்டனர்.

இரையைத் தேடுவது இவ்வுலக வாழ்க்கைக்கு
இறையைத் தேடுவது அவ்வுலக வாழ்க்கைக்கு

என்னும் இவ்வரிகளை தம் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் நம் முன்னோர்கள். இறைவன் எல்லா இடங்களிலும் நிறைந்திருப்பான். அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் விளங்குபவன் அவன். அவனது திருவருளைத் திருக்கோயில்களின் வழியே பெற்றனர் நம் மூதாதையர்கள்.

பசுவின் உடல் முழுவதும் பால் சத்து பரவியிருப்பினும் அப்பால் சத்தினைப் பசுவின் திருமடியிலிருந்தே நாம் பெறுகிறோம் அல்லவா ? நம் திருக்கோயில்களின் தத்துவம் இதுவே.

*வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி*
*ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்*
*கோனாகி யான்எனது என்றவ ரவரைக் கூத்தாட்டு*
*வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே*

என்று மணிவாசகரின் மணிமொழிக்கேற்ப எல்லாம் வல்ல அந்த இறைவனைத் திருக்கோயில்களில் கண்டுகளித்தனர்; வாழ்த்தினர், வழுத்தினர்.

திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் கடவுளர் மீது இப்பெருமக்கள் கொண்டிருந்த அன்பிற்கு எல்லையே இல்லை.

தங்களது வசிப்பிடங்களாகிய இல்லங்களை அழியக் கூடிய தென்னங்கீற்றுக்களையும், பனையோலைகளையும், செங்கற் களையும் கொண்டு அமைத்த நம் முன்னோர்கள் இறைவனின் வசிப்பிடமான கோயில்களை மட்டும் அழிவில்லாத கருங்கற்களால் அமைத்ததை என் சொல்லிப் புகழ ?

அழிவில்லாத ஆதிக்கு அழிவில்லாத கற்றளிகள், கற்கோயில்கள்.

இத்தகு சிறப்பு மிக்க திருக்கோயில்களைப் பற்றிய விவரங்கள் அடங்கிய திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் வெளியிடுவது சாலச்சிறந்த ஒரு பணியாகும்.

இந்நூல் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள புகழ் பெற்ற ஆலயங்களைப் பற்றிய குறிப்புகளை அடிப்படையாக கொண்டது.

இந்நூல் வெளிவர உறுதுணை புரிந்த அனைவர்க்கும் நல்வாழ்த்துக்கள்.

மா. வீர சண்முக மணி

# முகவுரை

இந்தியாவிற்குத் தமிழகத்தின் நன்கொடை கோயில்களும் அவை தொடர்பான பண்பாடும் என்று கூறுவது மிகையானதல்ல. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் கோயில்கள் இருந்தன என்பதற்குச் சங்க இலக்கியங்களில் சான்று உண்டு. தொல்லியல் சான்றுகளும் இக்கருத்தை உறுதிப்படுத்துகின்றன. ஆரம்பகாலத்தில் செங்கலாலும், மரத்தாலும் கோயில் பணி செய்தனர். பின்னர் சிறு குன்றுகளில் கல்லைக் குடைந்து குடைவரைக் கோயில்கள் உருவாக்கினர்.

பல்லவர்கள் காலத்தில் கல்லின் மேல் கல்லை அடுக்கிக் கோயில் கட்டும் வழக்கம் உருவானது. பிற்காலச் சோழர்கள் கோயில் பணிகள் நிறையவே செய்தனர். இப்பணி பிற்காலப் பாண்டியர், மதுரை நாயக்க அரசர்கள் காலத்திலும் தொடர்ந்தது. சோழர்கள் கோயில்களுக்குச் செப்புத்திருமேனிகளையும் கொடுத்துள்ளனர்.

தமிழகக் கோயில்கள் பற்றி பொதுவான நூற்களும், தனித்தனியான நூற்களும் உள்ளன என்றாலும் மாவட்ட வாரியாக தெரிவு செய்த கோயில்கள் பற்றிய நூல் வர வேண்டும் என்ற தமிழக அரசின் ஆணைக்கிணங்க "கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்கள்" என்ற வழிகாட்டி நூல் எழுதப்பட்டது. இது திருக்கோயில்கள் பற்றிய கையேடு. சாதாரண பக்தன் இந்நூலைப் படித்து விட்டு திருக்கோயிலுக்குச் சென்று தரிசிக்க வேண்டும், கோயில்கள் பற்றிய தலபுராணத்தையும், வரலாற்றையும் அறிய வேண்டும் என்ற நோக்கில் உருவாக்கப்பட்டது. தெரிவு செய்யப்பட்ட படங்களும் இந்நூலில் உள்ளன.

கன்னியாகுமரி மாவட்டம் 1956–ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31–ஆம் தேதி வரை கேரள மாநிலத்துடன் இருந்தது. திருவனந்தபுரம் மாவட்டத்தின் ஒரு பகுதியாக இருந்த தென்திருவிதாங்கூர் என்ற இன்றைய கன்னியாகுமரி மாவட்டத்தின் வரலாறும் பண்பாடும் தமிழகத்தின் பிற மாவட்டங்களிலிருந்து வேறுபட்டது. இந்த மாவட்டம் 1684 கி.மீ பரப்புடையது. 68 கி.மீ நீளமுடைய கடற்கரையை உடையது. இந்த மாவட்டத்தின் மக்கள்தொகை 2011 கணக்கின்படி 18,63,174 ஆகும்.

குமரி மாவட்டம் கேரளத்துடன் பல ஆண்டுகள் இணைந்திருந்ததால் கொல்லம் வருஷம் (மலையாள ஆண்டு) இன்னும் நடைமுறையில் உள்ளது. திருக்கோயில்களின் கல் வெட்டுகளிலும் ஆவணங்களிலும் மலையாளம் ஆண்டு குறிப்பிடப் பட்டுள்ளது. இம்மாவட்டத்தின் அகஸ்தீஸ்வரம், தோவாளை வட்டங்கள் நாஞ்சில்நாடு என்றும், கல்குளம், விளவங்கோடு வட்டங்கள் இடநாடு என்றும் அழைக்கப்படும். இரு பகுதிகளுக்கும் திருக்கோயில் வழிபாடு, விழாக்களில் நுட்பமான வேறுபாடுகள் உள்ளன.

இடநாட்டில் கருவறைப்பகுதியை ஸ்ரீகோயில் என்பர். நாஞ்சில்நாட்டில் இந்த வழக்கு இல்லை. வட்டமான கருவறை உலோகத்தகடு வேய்ந்த கூரை, நாலம்பலம், ஒற்றைக்கல் மண்டபம், நமஸ்கார மண்டபம் எல்லாம் நாஞ்சில்நாட்டுக் கோயில்களில் இல்லை. இடநாட்டில் உண்டு.

நாஞ்சில்நாட்டுக் கோயில்களில் தேர், தெப்பத் திருவிழாக்கள் அதிகம். இந்த மாவட்ட கோயில்களில் உள்ள 24 தேர்களில் 18 தேர்கள் நாஞ்சில்நாட்டிலேயே உள்ளன. இடநாட்டை விட நாஞ்சில்நாட்டுக் கோயில்களில் கல்வெட்டுகள் அதிகம் காணப்படுகின்றன. தமிழ்நாட்டின் கோயில்களின் ஆகமங்களிலிருந்து இந்த மாவட்டக் கோயில்களைப் பிரித்துக் காட்டுவது தாந்திரிக ஆகமம். “தாந்திரா” என்பது எளிய வழி. இதன் வேர் வேதங்களில் தொடங்குகிறது.

பரசுராமர் கேரளத்தை உருவாக்கிய பின்பு தரணநல்லூர் நம்பூதிரி காலத்தில் தாந்திரீக வழிபாடு பரவலானது என்பர். இந்த ஆகமத்தில் முத்திரை முக்கியம். மந்திரங்களைச் சப்தமாய் வெளிப்படுத்துவது அல்ல, தாந்திரீகமானது முத்திரைகள் வழி எல்லாவற்றையும் வெளிப்படுத்துபவை. இந்த மாவட்டத்தில் கோயில் வழிபாட்டில் தாந்திரீக ஆகமம் இருந்தாலும் சிவாச்சாரிய மரபுக் கோயில்களும் உள்ளன. இம்மரபானது விழாக்களிலும் குடமுழுக்குகளிலும் பின்பற்றப்படுகின்றன.

கன்னியாகுமரி மாவட்டத்தில் 398 திருக்கோயில்களும் உள்ளன. திருநெல்வேலி மாவட்டம் செங்கோட்டை வட்டத்தில் 92 கோயில்களும் கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்கள் நிர்வாகத்தில் அடங்கும். ஆக மொத்தமாக உள்ள 490 திருக்கோயில்களில் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள 47 கோயில்களும், செங்கோட்டை வட்டத்தில் 7 கோயில்களும் தெரிவு செய்யப்பட்டு இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன.

இக்கோயில்கள் பற்றிய எல்லா விவரங்களும் சுருக்கமாக இந்நூலில் தரப்பட்டுள்ளன. இது சாதாரண பக்தனுக்காக எழுதப்பட்ட பொதுவான கையேடு. குறிப்பிட்ட கோயிலுக்குப் பேருந்தில் செல்வது எப்படி என்ற விபரத்திலிருந்து தலபுராணம், கல்வெட்டுகள், சிற்பங்கள் என எல்லா விபரங்களும் இந்நூலில் உள்ளன. திருக்கோயில்கள் திறந்திருக்கும் நேரம், பூஜை நேரம் போன்ற விபரங்களும் இந்நூலில் உள்ளன. 130க்கு மேற்பட்ட வண்ணப் புகைப்படங்களும் இதில் கொடுக்கப்பட்டுள்ளன.

பக்தர்களுக்கும் பயணிகளுக்கும் உதவும் வகையில் உருவாக்கப்பட்ட இந்த நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய மாண்புமிகு இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு காமராஜர் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவிக்கிறேன்.

இந்நூலுக்கு நல்லதொரு வாழ்த்துரை வழங்கிய சுற்றுலா பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறை அரசு கூடுதல் தலைமைச் செயலர் முனைவர். திரு. ரா. கண்ணன், இ. ஆ. ப. அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தக் கையேடு சிறப்பாக வெளியிடுவதற்குப் பல நிலைகளில் ஆலோசனைகள் வழங்கி ஊக்கப்படுத்திய இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் உயர்திரு. மா. வீர சண்முக மணி, இ. ஆ. ப., அவர்களுக்கு என் மனம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலின் பணி செயல்படுத்தப்பட்ட காலத்தில் பல நிலைகளில் உதவிய திரு. இரா. ஞானசேகர் கூடுதல் ஆணையர் (பொது) அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை எழுதும்போது தகவல்கள் கொடுத்தும், பிற நிலைகளிலும் உதவிய இந்த மாவட்ட அறநிலையத்துறை பணியாளர்களுக்கும் நன்றி.

இந்த நூலை எழுத வேண்டும் என்று கேட்டுக்கொண்ட போது மகிழ்வுடன் அதை ஒப்புக்கொண்டார் டாக்டர். அ. கா. பெருமாள். இதற்காக கேள்விப்பட்டியல் தயாரித்து கோயில் பணியாளர்களை அணுகி பதிலைப் பெற்றுக்கொண்டும், புத்தகம் வழி செய்திகளைச் சேகரித்தும், எல்லா கோயில்களுக்கும் நேரடியாகச் சென்று பார்வையிட்டும் இந்த நூலை மிகுந்த சிரத்தையுடன் அவர் எழுதியுள்ளார். பெருமளவு புகைப்படங்களை எடுத்தவரும் அவரே. அவருக்கும் என் அன்பு கலந்த நன்றி. நூலை அச்சிட்ட நாகர்கோவில் பிரிண்ட் பாயின்ட் அச்சகத்தாருக்கும் நன்றி.

இந்த நூலைப் பக்தர்களும் தெய்வீக சுற்றுலா வருபவர்களும் வாங்கிப் படித்து பயன் அடையுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

**இரா. பொன்சுவாமிநாதன்**
இணை ஆணையர் / செயல் அலுவலர்,
(கூடுதல் பொறுப்பு)
கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்கள்.



**சுசீந்திரம் கோபுர சுவரோவியம்**

## உள்ளுறை

## I. அகஸ்தீஸ்வரம் வட்டம்



## II. தோவாளை வட்டம்

## III. கல்குளம் வட்டம்



## IV. விளவங்கோடு வட்டம்



## V. நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்த தலங்கள்



## VI. பன்னிரு சிவாலயங்கள்

## VII. செங்கோட்டை வட்டக் கோயில்கள்



## VIII. பின்னிணைப்புகள்



# 1. அருள்மிகு பகவதியம்மன் திருக்கோயில்

## கன்னியாகுமரி, அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவி | – | பகவதி அம்மன் |
| தீர்த்தம் | – | பாபநாச தீர்த்தம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

### அமைவிடம்

இந்தியாவின் தென்கோடியில் இருப்பது கன்னியாகுமரி. இது திருவனந்தபுரம் விமான நிலையத்திலிருந்து 75 கி.மீ, நாகர்கோவில் ரயில் நிலையத்திலிருந்து 18 கி.மீ, கன்னியாகுமரி ரயில் நிலையத்திலிருந்து 1 கி.மீ, நாகர்கோவில் பேருந்து நிலையத்திலிருந்து 20 கி.மீ தொலைவில் உள்ள ஊர். கன்னியாகுமரி பேருந்து நிலையத்திலிருந்து 1/2 கி.மீ தொலைவில் இருப்பது திருக்கோயில், பேருந்து நிறுத்தத்திலிருந்து நடந்து செல்லலாம். கோயிலின் முன் வாகனங்களை நிறுத்துவது சிரமம். இது இந்தியாவின் முக்கிய சுற்றுலா மையம். 300க்கு மேற்பட்ட தங்கும் விடுதிகள் உள்ளன. திருக்கோயில் அலைமகள் தங்கும் விடுதி, அரசு பயணியர் விடுதி, விவேகானந்தா கேந்திரா தங்கும்

விடுதி என பல உள்ளன. உணவு விடுதிகளும் ஏராளம் உள்ளன. உயர்ரக விடுதிகளும் உணவகங்களும் உண்டு. உள்ளூரில் சுற்றிப் பார்ப்பதற்கு ஆட்டோ, கார் வசதி உண்டு. முதலில் திருக்கோயிலைத் தரிசித்து விட்டு பின் பிற இடங்களுக்குச் செல்லலாம்.

## தலபுராணம்:

கன்னியாகுமரி பகவதியம்மன் கோயில் பற்றிய தலபுராணம் சமஸ்கிருதம், தமிழ், மலையாளம் ஆகிய மூன்று மொழிகளிலும் உள்ளது. சமஸ்கிருத மூலத்தின் அடிப்படையில் சங்கர நாவலர் என்பவர் தமிழ் தலபுராணத்தை எழுதியிருக்கிறார். இது சுசீந்திரம் தலபுராணத்தைப் பின்பற்றியது. இந்நூலில் ஒரு இடத்தில் ''சூதரிடம் அருளிச் செய்த சிவபுராணம் பத்தினுள் ஒன்றாகிய காந்தம் என்னும் புராணத்தில் இருந்து சுசீந்திரம் புராணம் கூறினீர்,'' என முனிவர்கள் கூறியதாக வருகிறது. சுசீந்திரம் தலபுராணம் 1857ல் இயற்றப்பட்டு 1895ல் அச்சில் வந்தது. எனவே கன்னியாகுமரி தமிழ் தலபுராணம் 1857க்குப் பின் இயற்றப்பட்டது எனக் கருதலாம்.

கன்னியாகுமரி தலபுராணத்தில் கன்னி பகவதி தோன்றியது, தாணுமாலயனை மணம் செய்ய தடை வந்தது, அகத்தியர் இமயமலையைச் சமன் செய்யத் தென்குமரிக்கு வந்தது என புராணக்கதைகளும் வட்டாரரீதியான சில கதைகளும் உள்ளன.

கன்னியாகுமரி தலபுராணம் சூதர்கள் கூறுவதைப் போன்ற அமைப்புடையது. முனிவர்களும் சூதர்களிடம்

*ஒற்றையால் காலில் உள்ள*
*ஒருபெரு விரலை ஊன்றி*
*மற்றையோர் காண முழந்தாள்*
*மடக்க நீர் குறங்கில் வைத்து*
*பற்றிரு கரமும் கூப்பிப்*
*பரந்தவிழ் சடையினோடும்*
*சற்று முன் நின்று*
*தவம் செய்வர் அனேக கோடி*

எனக் கதையை ஆரம்பிக்கிறார்.

நாவலன் தீவு அரசன் ஆக்கினேந்திரன். இவனது ஒன்பது மக்களில் பரதன் ஆண்ட இடம் பரத கண்டம். இவனுக்கு எட்டு ஆண் மக்கள், ஒரு புதல்வி. அவள் தென்குமரி தென் துறையில் இருந்தாள். இராமன் இலங்கை செல்லும் முன் அவளிடம் ஆசி பெற்றுச் சென்றான். அப்போது அவன் ஆதிசேது எனக் கன்னியாகுமரியை அழைத்தான். இந்திரன் தன் பாவம் தீர குமரியிலும் தவம் செய்தான். இமயமலையில் சிவன், பார்வதி திருமணம் நடந்த போது இமயம் உயர்ந்தது. இதைச் சமன் செய்ய அகத்தியர் தென்குமரிக்கு வந்து கன்னிகுமரியை வணங்கி விட்டு பொதிகை மலை சென்றார்.

அசுரர்களின் அரசன் பாணாசுரன். அவன் தேவர்களுக்கும் பூவுலக மக்களுக்கும் பெருந்துன்பம் செய்தான். அவனை அழிக்க பராசக்தியால் மட்டுமே முடியும் என்றார் திருமால். தேவர்கள் சக்தியை வேண்டினர். சக்தி அசுரனை அழிக்க கன்னியாகுமரியில் வந்து தவம் செய்தாள். கன்னியாக இருந்த அவளைத் திருமணம் செய்ய தாணுமாலயன் வந்தார். கன்னி, மணம் செய்தால் பாணாசுரனை வதைக்க முடியாது என்பதால் அந்தத் திருமணத்தைத் தடை செய்ய நாரதரைத் தூண்டினார் திருமால். நாரதர் தாணுமாலயனிடம் கன்னி பகவதியைச் சூரிய உதயத்திற்கு முன்பு மணம் செய்வது உகந்தது. இல்லையென்றால் மணம் நிகழாது என்றார். சிவனும் அதற்கு இசைந்தார். சிவன் மணநாளில் சூரியோதத்திற்கு முன்பு புறப்பட்டு வந்தபோது நாரதர் வழுக்கம்பாறை கிராமத்தில் இருந்து சேவல் போல் கூவினார். தாணுமாலயன், விடிந்து விட்டது என்று திரும்பி விட்டார். இதனால் பகவதி கன்னியாக இருந்தாள். இதன் பிறகு பாணாசுரன் கன்னிகுமரியின் அழகைக் கேள்வியுற்று அவளை அடைய வந்தான். தேவி இது தான் தருணம் என நினைத்து வாளை வீசினாள். பாணாசுரனைக் கொன்றாள்.

அசுரர்களின் கொடுமையைப் பொறுக்க முடியாத தேவர்கள் காசி விஸ்வநாதரை அணுகினர். அவர் இரண்டு பெண்களைப் படைத்தார். ஒருத்தி கொல்கத்தாவில் காளியாக அமர்ந்தாள்.

இன்னொருத்தி கன்னியாகுமரியில் இருந்தாள். இப்படியொரு கதை தலபுராணத்தில் வழங்குகிறது.

பகவதி நிலைபெற்ற இத்தலத்தில் சக்கர தீர்த்தம், கணேச தீர்த்தம், தாணு தீர்த்தம், பீம தீர்த்தம், பிதுர் தீர்த்தம், மாத்ரு தீர்த்தம் ஆகிய தீர்த்தங்கள் உள்ளன. பிராமணி, மகேஸ்வரி, கௌமாரி, வராகி, இந்திராணி, சாமுண்டி ஆகியோர் பெயரிலும் தீர்த்தங்கள் உள்ளன. இந்திரன் தன் பாவம் தீர நீராடிய பாபநாச தீர்த்தம் இங்கே உள்ளது. சூதாடிய தர்மரின் கையில் நெருப்பை வைப்பேன் என்று சொன்னதால் சாபம் பெற்ற பீமன் விமோசனம் பெற கன்னியாகுமரிக்கு வந்து நீராடினான். அவன் நீராடிய இடம் பீம தீர்த்தம் ஆயிற்று. பரசுராமர் இங்கே வந்து கணேசனைப் பூஜித்தார். அந்த இடம் கணேச தீர்த்தம் ஆயிற்று. இப்படியாக இங்கு பாபவிமோசனம் பெற்றவர் பலர்.

## திருக்கோயில் அமைப்பு:

கருவறை கிழக்கு நோக்கியதாயினும் வடக்கு வாசலே பொதுமக்களின் பயன்பாட்டிற்குள்ளதாய் இருக்கிறது. 19 ஆம் நூற்றாண்டில் கிழக்கு வாசல் வழி பக்தர்கள் சென்றதைப் பற்றி கன்னியாகுமரி களவு மாலை நூல் கூறும். இதன் பிறகு சில காரணங்களால் இந்தக்கதவு நிரந்தரமாய் அடைக்கப்பட்டு விட்டது.

கன்னியாகுமரி பகவதி அம்மன் கோயில் வெளிப்பிரகாரம், முகமண்டபம், நவராத்திரி மண்டபம், தியான மண்டபம், உள் பிரகாரம், கருவறையைச் சுற்றிய சிறு பிரகாரம், அர்த்த மண்டபம், கருவறை என அமைந்தது. கோயில் செவ்வக வடிவினது. செப்புக்கொடிமரம், திராவிட வகை விமானம், பரிவார கோயில்கள், சிறு பிரகாரம் என அமைந்தது.

கோயிலின் முன்மண்டபத்தில் மேலே கஜலெட்சுமி உருவம், இம்மண்டபத்தின் மேற்கே கொலு மண்டபம் எனப்படும் நவராத்திரி மண்டபமும் கிழக்கில் பயணிகள் உட்கார்ந்து இளைப்பாற சிறுமண்டபமும் உள்ளன.

இந்த முன் மண்டபத்தின் முன்பகுதியில் பக்தர்கள் கோயில் குறித்த விபரங்களைக் கேட்கும் தகவல் மையம் அறை உள்ளது. எட்டு தூண்கள் கொண்ட இந்த மண்டபத்தில் இரண்டு யாளித்தூண்கள் உள்ளன. இந்த மண்டபம் 17 அல்லது 18 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம். இம்மண்டபத்தின் மேற்கில் உள்ள நவராத்திரி மண்டபத்தில் நவராத்திரி விழா கொலு வைக்கும் நிகழ்வு நடக்கும். இம்மண்டபத்தின் மேற்கே 4 சிறு தூண்கள் கொண்ட ஊஞ்சல் மேடை உள்ளது. இவ்வூஞ்சலில் அம்மனது விழாப்படிமத்தை வைத்து ஆட்டுவது உண்டு. இக்கொலுமண்டபத்தில் புராண இதிகாச எண்ணெய்ச்சாய ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இவை அண்மைக்காலத்தவை. முகமண்டபத்தில் கிழக்கில் நீண்டு கிடக்கும் பக்கவாட்டு மண்டபம் ஒரு காலத்தில் பயணிகள் தங்குமிடமாக இருந்தது. இதற்கேற்ற திண்ணை உண்டு.

முன்மண்டபத்தை அடுத்து இருக்கும் முகமண்டபத்தின் வடக்கே தெற்கு நோக்கி காலபைரவர் இருக்கிறார். இந்த மண்டபத்தை மணிமண்டபம் என்கின்றனர். மண்டபத்தின் மேற்கூரை ஜன்னல் வழி கருவறை விமானத்தைத் தரிசிக்கலாம். இதையடுத்து வடக்குப் பிரகாரம், இப்பிரகாரத்தில் திருக்கிணறு உள்ளது. இக்கிணற்றிற்கு கருவறையில் இருந்து அடிவரை இறங்கிச்செல்ல சுரங்கப்பாதை உண்டு. வடக்குப்பிரகாரத்தில் ஒரு தூணில் உள்ள ஆஞ்சநேயர் வழிபாட்டிற்குரியவராக இருக்கிறார்.

கிழக்குப்பிரகாரத்தில் கொடிமரம், பலிபீடம் உள்ளன. செம்பு போர்த்தப்பட்ட இக்கொடிமரம் 19 ஆம் நூற்றாண்டினது. இந்த பிரகாரத்தில் அர்த்த மண்டபத்திற்கு நுழையும் வாசலில் இரு துவாரபாலகிகள் உள்ளனர். இடது துவார பாலகி ஒரு கையில் கதை ஏந்தி உள்ளாள். வலது கை விஷ்மயா வலதுபுறம் இருக்கும் துவாரபாலகியின் இடது கையில் கதை; வலது கை சூசி உறஸ்தமாய் உள்ளது.

தெற்கு பிரகாரத்தின் தென்புறம் நீண்ட திண்ணை. இதன் வடபுறம் மடப்பள்ளி. இம்மண்டபத்தின் மேற்கு ஒரத்தில் தியான

மண்டபம். இது அமைதியான சூழ்நிலையுடன் பக்தர்கள் அமர்ந்து தியானம் செய்வதற்கு ஏற்றதாய் அமைந்தது.

கிழக்குப்பிரகாரத்தில் கோயில் மணி இருப்பதால் இது மணி மண்டபம் என பொதுவாக அழைக்கப்படுகிறது. எட்டு தூண்கள் கொண்ட இந்த மண்டபத்தின் மேல் விதானம் வேலைப்பாடுடையது.

கிழக்குப்பிரகாரம் பலிபீடம் கொடிமரத்தைக் கடந்து அர்த்த மண்டபம் உள்ளது. எட்டு தூண்கள். எல்லாம் பளப்பளப்பான செம்புத்தகடு வேயப்பட்டது. இம்மண்டபத்தின் தென்மேற்கே தியாக சவுந்தரி சன்னதி உள்ளது. இம்மண்டப வடக்கில் வாசல் உண்டு. அர்த்த மண்டபத்தின் தெற்குவாசல் வழி உட்பிரகாரம் செல்லலாம். இது மூன்றாம் பிரகாரம். மிகச் சிறியது. இங்கு கன்னி விநாயகர் சன்னதி உண்டு.

கருவறையும் அர்த்தமண்டபமும் தரைமட்டத்தை விட உயர்ந்தவை. கருவறை அந்தராளம் என்னும் பகுதியினை உடையது. இந்த மண்டபச்சுவர்களில் முழுக்க பழந்தமிழ் வட்டெழுத்துக் கல் வெட்டுகள் உள்ளன. கருவறை அதிஷ்டானம், விமானம், ஜகதி, முப்பட்டை குமுதம், கண்டம், பட்டி, வேதிகை என முறைப்படி அமைந்தது பழைய கட்டுமானம்.

கருவறையின் மேலும் பரிவார தெய்வங்கள் இருக்கும் மண்டபங்களின் மேலும் விமானம் உண்டு. குமரியின் விமானம் திராவிடம். 2013 குடமுழுக்கின்போது புதுப்பிக்கப்பட்டது. விமானத்தின் நான்கு புறங்களிலும் தேவி உருவங்கள். சங்கு, சக்கரம், அபய வரத உறஸ்தம், சங்கு, சக்கரம் கொடி அக்னி ஏந்தி, பாசம், கமண்டலம், வரத முத்திரை. விமானம் கிழக்கே கன்னியாகுமரி அம்மனின் சிற்பம் உள்ளது.

## கருவறை இறைவி:

கருவறை சிறியது. அர்த்த மண்டபத்தில் இருந்து அம்மனைத் தரிசிப்பவர்களுக்கு நேராக பார்க்கமுடியும். பிற கோயில்களில் இருந்து வேறுபடும் இடம் இது. சாதாரண பக்தன் கருவறை தெய்வத்தை அருகில் நின்று தரிசிப்பது போன்ற

அமைப்புடையது. கல்படிமம் நின்ற கோலம். ஒரு கையில் உத்திராட்சத்தைப் பிடித்திருப்பது போன்ற அமைப்பு. விரல்கள் வளைந்திருக்கின்றன. ஏகபந்தம், ஒரு கை வரதமுத்திரை காட்டுகிறது. கழுத்தில் அணிகள்; தமிழகத்தின் வசீகரமான கலை நுட்பமுடைய கல்படிமங்களில் ஒன்று. அம்மன் கன்னியாதலால் ஒப்பனை அது போன்று இருக்கும். அம்மனின் மூக்கில் உள்ள மூக்குத்தியின் கல் நாகம் உமிழ்ந்தது. அந்த வைரத்தின் ஒளி கிழக்கு வாசல் வழி வீசியதால் கடலில் சென்ற கப்பல் வழி தவறி வந்தது என்ற ஒரு கதையும் உண்டு.

## பரிவார தெய்வங்கள்:

வெளிப்பிரகாரத்தில் கிழக்கு பார்த்து மரத்தடி சாஸ்தா. இவருடன் நாகர் உருவங்கள் உள்ளன. இதே பிரகாரத்தில் குரு பகவான், நாகர்கள் உள்ளனர். பிற்கால கட்டுமானம். முகமண்டபத்தில் வடக்கே தெற்கு நோக்கி காலபைரவர். இரண்டு கைகள்; நின்ற கோலம். கல்படிமம். உள்பிரகாரம் கன்னி மூலையில் விநாயகர். அர்த்த மண்டபம் தென்மேற்கில் தியாக சௌந்தரி அம்மன். செப்புப்படிமம் கிழமேற்கு மூலைப்பிரகாரத்தில் பால சௌந்தரி. கிழக்கு நோக்கி உள்ளது செப்புப்படிமம். இரண்டு கைகள் ஒரு கை வரதம்; மறு கை கடிஹஸ்தம். இந்த விக்கிரகத்தை மதுரை நாயக்க அரசி ராணி மங்கம்மாள் செய்து வைத்தார். இதற்கு நிபந்தமும் கொடுத்துள்ளார். இந்த அம்மனைக் கோட்டை அம்மன் என பொதுவாகக் கூறும் வழக்கம் இருந்திருக்கிறது.

## சிற்பங்கள்:

இக்கோயிலின் முன்மண்டபத்தில் உள்ள தூண்களில் குறைவான புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. இங்குள்ள இரண்டு யாளி சிற்பங்களும் அருமையானவை. யாளி நீண்ட துதிக்கையின் கீழ் குட்டி யானை யாளியின் வாயில் கல் உருண்டை உள்ளது. கை விட்டு உருட்ட முடியும். ஆனால் அதை வெளியில் எடுக்க முடியாது. இங்கே உள்ள தூண்களில் கங்காளநாதர், யட்சி, வாள், கேடயம் தாங்கிய வீரன், வில்லுடன் இராமன், சங்கு சக்கரம் ஏந்திய அபய வரத ஹஸ்தம் தாங்கிய விஷ்ணு ஆகிய சிற்பங்கள் உள்ளன.

அர்த்த மண்டபத்தில் விதானம் பகுதியில் நான்கு புறமும் அழகிய சிறிய சிற்பங்கள் உள்ளன. கிழக்கு விதானத்தில் வாலி சுக்கிரீவன் சண்டை இராமன், இலட்சுமணன் வில்லுடன் இருக்கும் காட்சி, வாமன அனுத்தி , அசோகவனத்தில் அனுமன், நரசிம்மன், கிருஷ்ணன், கொக்கரக்களைக் கொல்லுதல், கிருஷ்ணன் கம்சன் சண்டை என சில சிற்பங்கள். அர்த்தமண்டபம், தியாக சௌந்தரி அம்மன் கோயில் முன்பு மிகச்சிறிய பாவை விளக்கு, கல்சிற்பம், கையில் விளக்கேந்திய கொண்டையமைப்பு தமிழகத்தை நினைவூட்டுகிறது.

கருவறையைச் சுற்றிய அதிஷ்டானப்பகுதியில் சிறிய புடைப்புச்சிற்பங்கள் உள்ளன. கிருஷ்ணன் காளிங்க நர்த்தனம். நரசிம்மன், விஷ்ணு, சங்கு, சக்கரத்துடன் மூன்று பெண்கள், தலைக்கு மேல் கையைக் குவித்து தொழும் காட்சி (சுசீந்திரம் கோவில் தலபுராணக்கதை தொடர்பாய் இருக்கலாம்) எனச் சில சிற்பங்கள் உள்ளன.

## கல்வெட்டுகள்:

கன்னியாகுமரி மாவட்டத்துக் கோயில்களில் அதிகம் கல் வெட்டுகள் உள்ள கோயில்களில் சுசீந்திரத்திற்கு முதலிடம். அடுத்து கன்னியாகுமரி கோயிலுக்கு. இங்கு 84 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை கி.பி 10ம் நூற்றாண்டில் இருந்து 19ம் நூற்றாண்டு வரை உள்ள காலத்தவை. கிரந்தம், வட்டெழுத்து மலையாளம், சமஸ்கிருதம், தமிழ் என்னும் மொழி வடிவில் உள்ளவை.

இங்குள்ள கல்வெட்டுகளில் பெரும்பாலானவை நிபந்தக் கல்வெட்டுகள். 1325 ஆம் ஆண்டு கல்வெட்டு கோயிலுக்கு ஓராண்டுக்குச் செலவு 5324/– ரூபாய் எனக் கூறும். 1671ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலின் கீரிடம், கண்மலர், மார்புக் கவசம், வைர இரத்தினக் கவசம், மலையாந்தாலி, கைவங்கி, உண்டைமாலை என பல அணிகலன்கள் இருந்ததைப் பட்டியலிடும். 1750 ஆம் ஆண்டு செப்பேடு இக்கோயிலில் பொக்கிஷ அறையில் 4,87,494/– ரூபாய்க்குத் தங்க, வெள்ளிப் பாத்திரங்கள்

இருந்ததைப் பட்டியலிடும். அப்போது வெள்ளிக்குடங்கள் மட்டும் 400 இருந்தனவாம். கன்னியாகுமரி கோயில் பெரும்பாலும் பாண்டி நாட்டு கட்டுப்பாட்டில் இருந்ததை இக்கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

## பூஜை விவரம்

காலை 4.30 மணி திருநடைதிறப்பு
காலை 5.00 மணி அபிஷேகம்
காலை 6.00 மணி தீபாராதனை
காலை 10.00 மணி அபிஷேகம்
காலை 11.30 மணி உச்சகால பூஜை
பகல் 12.30 மணி திருநடை அடைப்பு
மாலை 4.00 மணி திருநடைதிறப்பு
மாலை 6.30 மணி சாயராட்சை தீபாராதனை
இரவு 8.15 மணி ஸ்ரீபலி
இரவு 8.25 மணி ஏகாந்த தீபாராதனை
இரவு 8.30 மணி திருநடை அடைப்பு

## விழா:

புரட்டாசி நவராத்திரி பத்து நாள் விழா, வைகாசி விசாகத் திருவிழா பத்து நாள், 9 ஆம் நாள் தேரோட்டம். பத்தாம் நாள் தெப்பவிழா. அம்மனுக்குப் புடவை சார்த்தல் அன்னதானம் செய்தல் முக்கிய நேர்ச்சை. ஆடி அமாவாசை, தை அமாவாசை சிறப்பு பூஜைகள். இக்கோயிலின் பத்து நாள் திருவிழா விசாக நட்சத்திரத்தில் முடிய வேண்டும் என்பது நியதி. பத்தாம் நாள் ஆறாட்டு விழா. நிறைவு நாளன்று நவராத்திரி விழாவில் அம்மன் வெள்ளிக்குதிரை வாகனத்தில் மகாதானபுரம் வரை பரிவேட்டைக்குச் செல்வாள். இங்கு அசுரனை அழிக்கும் நிகழ்ச்சி நடத்திக்காட்டப்படும். அப்போது காரியக்காரர் மடத்தில் தங்கி இளைப்பாறிச் செல்வாள். பின்னர் ஆறாட்டு மண்டபத்தில் நீராடி திருக்கோயிலினுள் செல்வாள். இவ்விழா ஒவ்வொரு வருட நவராத்திரியின் போதும் வெகு விமரிசையாக கொண்டாடப்பட்டு வருகிறது.

கன்னியாகுமரியில் பக்தர்கள் பார்க்க வேண்டிய இடங்களில் விவேகானந்தர் பாறை, காந்தி மண்டபம், ஆகியவை முக்கியமானவை.

## விவேகானந்தா கேந்திரம்:

சுவாமி விவேகானந்தர் இந்தியா முழுக்கப் பயணம் செய்த போது பாரதத்தின் தென்கோடியில் உள்ள கன்னியாகுமரிக்கும் வந்தார் (1882). அவர் குமரிக்கடலில் இருந்த ஸ்ரீ பாதபாறை என்ற பாறையில் தவமிருந்தார். இப்பாறைக்கு நீந்தியே சென்றார். அப்போது கன்னி பகவதி பாறை விவேகானந்தர் பெயரால் வழங்கியது. சுவாமி 1882 டிசம்பர் 24, 25, 26 ஆகிய மூன்று நாட்கள் இங்கே அமர்ந்து தவம் செய்தார்.

கடற்கரையிலிருந்து நேராக 1350 அடி தூரத்தில் இருக்கும் இரண்டு பாறைகளில் பெரிய பாறையே இப்போது விவேகானந்தா பாறை என அழைக்கப்படுகிறது. கன்னியாகுமரி தேவசத்திற்குச் சொந்தமான இருந்த இந்த ஸ்ரீ பாதம் பாறையில் விவேகானந்தரின் நினைவாக ஒரு மண்டபம் கட்டவேண்டும் என்ற திட்டத்தை ஏகநாத் ரானடே (1914–1982) கொண்டு வந்தார். இத்திட்டம் 1964ல் செயல்பட ஆரம்பித்தது. இந்த வேலை 1970ல் முடிந்தது.

விவேகானந்த மண்டபம், தியான மண்டபம், நூல் நிலையம், சபா மண்டம், முன்மண்டபம் எனப் பல பகுதிகளைக் கொண்டது. விவேகானந்தரின் 2.18 மீட்டர் உயர வெண்கலச் சிலை இங்கே உள்ளது. இராமகிருஷ்ண பரமஹம்சர், சாரதா தேவியார் ஆகியோரின் ஓவியங்களும் இங்கு உள்ளன.

இந்த மண்டபம் உச்சி வடிவமைப்பு மேலூர் இராமகிருஷ்ண ஆலயத்தை ஒத்தது. விவேகானந்த மண்டபத்தின் எதிரே ஸ்ரீபாத மண்டபம் உள்ளது. இது கர்ப்பக்கிரகம், உள்பிரகாரம், வெளிப் பிரகாரம் என அமைந்தது. இம்மண்டபத்தை அன்றைய குடியரசுத் தலைவர் வி. வி. கிரி 1970 செப்டம்பர் 2ல் திறந்து வைத்தார்.

கன்னியாகுமரி அருகேயுள்ள விவேகானந்தபுரம் விவேகானந்தா கேந்திரத்தின் தலைமையிடமாகும்.

காலங்காலமாக ஆன்மீகத்துறவிகளும், சித்தர்களும் சிந்தனை யாளர்களும் வருகை தந்த இந்தக் கடற்கரை மண்ணில் இந்து தர்மத்தை உலகில் பரப்பும் பணியை இந்தக் கேந்திரம் செய்கிறது.

## மகாத்மாவின் ஸ்தூபி:

வங்கக்கவிஞர் தாகூர் 1922ல் கன்னியாகுமரிக்கு வந்திருக்கிறார். சி.ஆர்.தாஸ் (1921), லாலாலஜபதிராய் (1927) ,கவிக்குயில் சரோஜினி நாயிடு (1921) போன்ற பலரும் இந்த மண்ணுக்கு வந்துள்ளனர். 1925 மார்ச் 14ல் மகாத்மாகாந்தி கன்னியாகுமரிக்கு வந்தார். குமரி தீர்த்தக்கட்டத்தில் நீராடினார். சூரிய அஸ்தனமத்தைப் பார்த்தார். சங்கிலித்துறை கல் மண்டபத்தில் அமர்ந்து உரையாடினார். 1935 ஜனவரியில் ஒரு முறை கன்னியாகுமரிக்கு வந்தார். அப்போது அவருடன் மீராபென் இருந்தார். 1937 ஆம் ஆண்டிலும் மகாத்மா கன்னியாகுமரிக்கு வந்தார். சன்னத்திதெருவில் பஜனை பாடிக்கொண்டே போனார்.

மகாத்மாவின் அஸ்தி வைத்த இடத்தில் ஒரு நினைவுச் சின்னம் எழுப்பி உள்ளனர். அவரது வயது 79. அதை நினைவு படுத்த திருக்கோயிலுக்குச் சொந்தமான இடத்தில் 79 அடி உயரத்தில் ஒரு கட்டிடம் கடற்கரையில் உள்ளது. மகாத்மா பிறந்த தினமான அக்டோபர் 2 ஆம் நாளில், சூரிய ஒளி மகாத்மாவின் அஸ்தி வைக்கப்பட்ட இடத்தில் விழுகிறது. சுற்றுலாப் பயணிகள் பார்க்க வேண்டிய இடம் இது.

## திருவள்ளுவர் சிலை:

விவேகானந்தா பாறைக்கருகில் உள்ள திருவள்ளுவர் சிலையும் பார்க்க வேண்டிய இடம். இச்சிலை நிறுவ முதலில் அன்றைய பிரதமர் மொரார்ஜிதேசாய் அவர்கள் அடிக்கல் நாட்டினார். (1979) இது 133 அடி உயரம் என முடிவு செய்யப் பட்டது. ஆதார பீடம் 38 அடி, சிலை 95 அடி, ஆக 133 அடி உயரம். இப்பணி 1999ல் முடிந்தது. 2000 ஜனுவரி 1 ஆம் நாள் சிலை திறக்கப்பட்டது.

விவேகானந்தா பாறையிலிருந்து படகு வழி திருவள்ளுவர் பாறைக்குச் செல்லலாம்.





அன்னதானம்

திருக்கோயில் தொலைபேசி : 04652 – 246223
இணையதளம் : www. kanyakumaritemples.org
மின்னஞ்சல் : kumariamman@gmail.com



# 2. அருள்மிகு தாணுமாலயன் திருக்கோயில்

## சுசீந்திரம், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | தாணுமாலயன் |
| இறைவி | – | அறம்வளர்த்த அம்மன் |
| தீர்த்தம் | – | பிரபஞ்ச தீர்த்தம் |
| தலவிருட்சம் | – | கொன்றை மரம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

### அமைவிடம்

நாகர்கோவில் கன்னியாகுமரி சாலையில் 5 கி.மீ. தொலைவில் சுசீந்திரம் கோயில் உள்ளது. திருவனந்தபுரம் விமான நிலையத்திலிருந்து 75 கி.மீ. நாகர்கோவில் ரயில் நிலையத்திலிருந்து 4 கி.மீ. கன்னியாகுமரி ரயில் நிலையத்திலிருந்து 14 கி.மீ. தொலைவில் இருப்பது. நாகர்கோவில் பேருந்து நிலையத்திலிருந்து 5 நிமிடங்களுக்கு ஒருமுறை பஸ் வசதி உண்டு. ஆட்டோவில் /வாகனத்தில் வர 20 நிமிடங்கள் ஆகும்.

சுசீந்திரம் பழையாற்றின் கரையில் இருப்பது. நகரப்பஞ்சாயத்து. முக்கிய சாலையிலிருந்து கூப்பிடுதூரம். பஸ் நிறுத்தத்தில் நின்று பார்த்தால் கோயில் இராஜகோபுரம் தெரியும். முதலில் தெப்பமண்டபம் கூடிய தெப்பக்குளம். அடுத்து இருப்பது

கோயில். நிறைய சிற்றுண்டி நிலையங்களும் பெரிய உணவகம் ஒன்றும் உண்டு. வாகனங்களைக் கோயிலின்முன் நிறுத்த வசதி உண்டு. கன்னியாகுமரிக்கு வரும் பயணிகள் அனைவரும் இக்கோயிலுக்கும் வருகின்றனர். இதனால் எப்போதும் கூட்டம் நிறைந்திருக்கும். பெரிய, சிறிய வாகனங்கள் ஊருக்குள் நுழைய பஞ்சாயத்தார் கட்டணம் வசூலிக்கின்றனர். கோயிலை ஒட்டி இருக்கும் தெப்பக்குளத்தில் பயணிகள் கவனமாக இறங்க வேண்டும். கோயிலின் வடக்கு வளாகத்தில் கட்டணக் கழிப்பறை வசதி உண்டு.

## தலபுராணம்:

கன்னியாகுமரி மாவட்டத்தில் எழுத்து வடிவில் இருக்கின்ற தலபுராணங்களில் பழமையானது சுசீந்திரம் தலபுராணம். இக்கோயில் தொடர்பாக 4 கதைகள் உள்ளன. அவை 1. அத்ரி அனுசூயை கதை, 2. இந்திரன் விமோசனம் பெற்ற கதை, 3. அறம் வளர்த்த அம்மன் கதை, 4. கன்னியாகுமரி அம்மன் – தாணுமாலயன் மணம் தடைபட்ட கதை ஆகியன. முதலிரண்டு கதைகளும் புராணம் தொடர்பானவை. எழுத்து வடிவில் இருப்பவை. மூன்றாம் கதை வட்டாரச் சார்புடையது. ஆவணச்சான்று உண்டு. நான்காம் கதை வாய்மொழி மரபில் பேசப்படுவது.

பிரம்மனின் கண்களில் பிறந்தவர் அத்ரி முனிவர். வனவாசத்தின்போது இராமன் இவரது ஆசிரமத்தில் தங்கிச் சென்றான் என ராமாயணம் கூறும். அத்ரியின் பத்தினி அனுசூயை. இருவருக்கும் நீண்ட நாட்கள் குழந்தை இல்லை. பரந்தாமனை நோக்கித் தவம் இருந்தனர். பத்மநாபன் "யாருக்கும் கிடைக்காத பாக்கியம் உமக்கு கிடைக்கும். பொதிகைமலையின் அருகே ஞானகான வனம் உள்ளது, அங்கே நீங்கள் தவம் செய்து பலன் பெறுங்கள்" என்றார்.

இருவரும் ஞானகான வனம் சென்றனர். இந்தச் சமயத்தில் அத்ரி இந்திரனின் வேண்டுகோளால் இந்திரலோகம் சென்று விட்டார். அனுசூயை தனியே இருந்து தவம் செய்தாள். அவளைச் சோதிக்க விரும்பிய மும்மூர்த்திகளும் ஞானகானவனத்தில்

மழையில்லாமல் ஆக்கினர். வனம் வறண்டது. தவம் செய்பக்கூட நீர் இல்லை. அனுசூயை கணவனின் கமண்டல நீரை ஞானகான வனத்தில் தெளித்தாள். மழை பெய்தது.

இப்படி இருக்கும்போது மும்மூர்த்திகள் அனுசூயையைச் சோதிக்க எண்ணி யாசகர்களாக அவளிடம் வந்தனர். அவள் வீட்டின் முன் நின்று யாசகம் கேட்டனர். அவள் அவர்களை உபசரித்து அழைத்தாள். மூர்த்திகள் 'நீ ஆடை இன்றி உணவு படைக்க வேண்டும் எனக் கட்டளை இட்டனர். அனுசூயை தன் கற்பின் மகிமையால் அவர்களைக் குழந்தையாக்கி தொட்டிலில் கிடத்தினாள். இதை அறிந்த மூன்று தேவிகளும் ஞானகான வனம் வந்து தவம் இருந்து அவர்களை மீட்டனர். அத்ரி, அனுசூயை வேண்டுகோள்படி மும்மூர்த்திகளும் சந்திரன், தாத்ரேயமுனிவர், துர்வாசராகப் பிறந்தனர். அத்தகு சிறப்புடைய தலம் சுசீந்திரம்.

இந்திரன் விமோசனம் பெற்ற கதையும் இக்கோயில் தலபுராணத்துடன் தொடர்புடையது. அது கௌதமர் அகலிகை இந்திரன் தொடர்பான கதை ராமாயணத்தில் வருவது. அகலிகையிடம் ஆசைப்பட்டதால் இந்திரன் சாபம் பெற்றான். சாபவிமோசனம் பெற ஞானகான வனத்திற்கு வந்தான். அவனது தேர் ஞானகான வனத்தின் ஒருபுறம் நின்றது. அது தேரூர் எனப்பட்டது. ஐராவதம் யானை மருந்துவாழ்மலைக்கு வந்தது. அது தன் கொம்பால் தரையைக் கீறி ஆற்றை உற்பத்தி செய்தது. அது கோட்டாறு எனப்பட்டது. இந்திரனின் தவம் பலித்தது. தாணுமாலயன் அவன் முன் தோன்றினான். இந்திரன் விரும்பிய (சுசீந்திரம்) இடம் சுசீந்திரம் ஆயிற்று.

இக்கோயிலில் இறைவியாகக் கருதப்படும் அறம்வளர்த்த அம்மன் கதை ஒன்று உண்டு. சுசீந்திரம் ஊரை அடுத்த தேரூர் என்ற ஊரில் வாழ்ந்த பள்ளியறை நாச்சியார் என்ற கன்னி தாணுமாலயன் கோயிலுக்கு வந்தாள். கோயிலைச் சுற்றி வந்தபோது அவள் மாயமாக மறைந்தாள். இறைவன் அவளை ஆட்கொண்டான். இந்த நிகழ்ச்சி 1444–ஆம் ஆண்டு நடந்தாக புராணக்கதை தெரிவிக்கிறது. இதன் நினைவாக மாசிமாதம் திருக்கல்யாணம் நடக்கிறது.

இக்கோயில் தொடர்பாக இன்னொரு கதை உண்டு. பாணாசுரனை அழிக்க தேவி கன்னியாகுமரியாகப் பிறந்தாள். அவள் கன்னியாக இருக்கும்போது மட்டுமே அசுரனை வெல்ல முடியும் என்பது வரம். தாணு குமரியைக் கல்யாணம் செய்ய விரும்பினார். சூரியன் தோன்றும் முன் மணம் செய்ய வேண்டும். அதை நடக்காமல் நாரதர் பார்த்துக்கொண்டார்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் ஒரே காலத்தில் கட்டப்பட்டதல்ல. இதன் பழமை கி.பி.9–ஆம் நூற்றாண்டு ஆரம்பம்வரை செல்கிறது. கடைசியாக 1888–ல் இராஜகோபுரம் கட்டி முடிக்கப்பட்டது. 1000 ஆண்டுகாலம் கட்டுமானப்பணி. ஏறத்தாழ 4 ஏக்கர் பரப்புடைய இக்கோயிலில் 3 ½ ஏக்கர் பரப்பில் கோயில் வியாபித்திருக்கிறது. முற்காலப் பாண்டியர், பிற்காலச் சோழர், பிற்காலப்பாண்டியர், வேணாட்டார், விஜயநகர நாயக்கர், திருவிதாங்கூர் ஆகிய அரசர்களின் காலத்தில் கட்டுமானம் நடந்திருக்கிறது. திராவிட கட்டிடக்கலை மரபில் அமைந்த இக்கோயிலில் பாண்டியர் நாயக்கர் பாணியைக் காணமுடியும்.

இக்கோயில் நாடகசாலை, கோபுரவாசல் வெளிப் பிரகாரம், ஊஞ்சல் மண்டபம், வசந்த மண்டபம், குலசேகரமண்டபம், சித்திரசபை, ஆதித்ய மண்டபம், செண்பகராமன் மண்டபம், வீரபாண்டியன் மண்டபம், உதயமார்த்தாண்ட மண்டபம், ரிஷப மண்டபம், வடக்கேடம் கருவறை, தெக்கேடம் கருவறை, உள்பிரகாரம் என்னும் மண்டபங்களை உடையது.

இக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்தது. நாடகசாலையைக் கோயில் முன்மண்டபம் எனலாம். திருக்கோயில் அலுவலகம் இங்கே உள்ளது. இம்மண்டபம் 1797–1819–ஆம் ஆண்டுகளில் 8 தேவதாசிகளால் கட்டப்பட்டது. நம்பூதிரிப்பெண் ஒருத்தியும் கட்டுமானத்திற்கு உதவியிருக்கிறாள்.

இக்கோயிலின் இராஜகோபுரம் விஜயநகரப்பாணி. 7 நிலை, 7 தூபிகள், தரைமட்டத்திலிருந்து கோபுரம் 41 மீட்டர்

உயரம். விட்டலர் என்ற விஜயநகரப் படைத்தலைவர் 1544–ல் கோபுர அதிஸ்தானத்தைக் கட்டினார். திருவிதாங்கூர் அரசர் மூலந்திருநாள் கோபுரத்தைக் கட்டினார். கோபுர வேலை 1888–ல் முடிந்தது. கோபுரத்தின் 7 நிலைகளிலும் தாவரச்சாய ஓவியங்கள் உள்ளன.

கோபுரத்தை அடுத்த ஊஞ்சல் மண்டபம் 1584–ல் கட்டப்பட்டது. இங்கு அற்புதமான சிற்பங்கள் உள்ளன. அறம்வளர்த்த அம்மன் திருமணம் இம்மண்டபத்தில் நடக்கும். வசந்த மண்டபம், தெற்கு வெளிப்பிரகாரத்தைத் தொட்டு இருப்பது. இங்கு மேற்கூரையில் நவக்கிரகச் சிற்பங்கள் உள்ளன. இம்மண்டபம் 1835–ல் கட்டப்பட்டது. இம்மண்டபத்தின் நடுவில் உள்ள சந்திரகாந்தக்கல்லில் செப்பு பஞ்சலோக படிமங்களை வைத்து குளிரூட்டப்படும் நிகழ்வு முந்தைய காலத்தில் நடந்தது.

குலசேகர மண்டபத்தில் செப்புப்படிமங்களை வைத்து அலங்காரம் செய்வர். இதனருகே இருப்பது அலங்கார மண்டபம். இங்கு இசைத்தூண்கள் உள்ளன. இவ்விரு மண்டபங்களும் 1758–1798 ஆம் ஆண்டுகளில் கட்டப்பட்டவை. வடக்கு பிரகார மூலையில் இருப்பது சித்திர சபை. எட்டுதூண்கள் கொண்டது. எட்டிலும் அருமையான சிற்பங்கள் உள்ளன. இம்மண்டபம் ஆரம்பத்தில் மரப்பணியால் ஆனது. 1835–ல் கல்லால் கட்டப்பட்டது.

கிழக்கு வெளிப்பிரகாரத்தில் இருப்பது ஆதித்ய மண்டபம். இங்கு பெருமாளின் கொடிமரமும், தாணுமாலயனின் கொடிமரமும் பலிபீடங்களும் உள்ளன. இம்மண்டபம் 1479 – 1494 ஆண்டுகளில் கட்டப்பட்டிருக்கலாம். செண்பகராமன் மண்டபம் இக்கோயிலுக்கு பெருமை சேர்ப்பது. இது கைமுக்கு மண்டபம் எனப்படும். 33 மீ நீளம் 26மீ அகலம் உடையது. 36 தூண்கள் கொண்ட இம்மண்டபத்தில் 500–க்கு மேற்பட்ட சிற்பங்கள் உள்ளன. இந்த மண்டப வேலை 1478–ல் முடிந்தது. இம்மண்டபத்தை அடுத்து வீரபாண்டியன் மண்டபம். இதையடுத்து இருக்கும் உதயமார்த்தாண்டன் மண்டபம் 12–ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. இதை அடுத்த ரிஷப மண்டபமும் இதே காலத்தது. விஷ்ணு, சிவன் ஆகிய இரு தெய்வங்கள் இருக்கும் கருவறையைச் சுற்றி தனியேயும் பொதுவாகவும் உட்பிரகாரங்கள் உள்ளன.

## கருவறைகள்:

இக்கோயிலில் மூலவராக தாணு(சிவன்), மால் (விஷ்ணு), அயன் (பிரம்மா) மூவரும் இங்கு இருப்பதாக ஐதீகம். ஆனால் இது சிவன் கோயிலாகவே கொள்ளப்படுகிறது. மூலவரை 'சுசீந்திரமுடையார் பரமசிவன்' எனக் கல்வெட்டுகள் குறிப் பிடுகின்றன. இக்கோயிலின் வடபகுதியில் சிவனுக்கும், தெற்கே விஷ்ணுவிற்கும் கருவறைகள் உள்ளன. பிரம்மாவிற்கு வழிபாடு இல்லை. சிவனின் கருவறையின் வெளிக்கட்டுமான அமைப்பு பல்லவர் பாணி. இதன் விமானத் தூபி தங்கத்தகட்டால் வேயப்பட்டது. இக்கருவறை கி.பி.9–ஆம் நூற்றாண்டுக்கு முன் கட்டப்பட்டது.

இங்குள்ள மகாதேவர் லிங்கவடிவினர். ஆவுடையில் இருக்கிறார். இந்த லிங்கத்தின் மேல் வபதான ரிஷியின் உருவ முடைய தங்கக்கவசம் சார்த்தப்பட்டிருக்கிறது. தென்பகுதியில் விஷ்ணுவின் கருவறை உள்ளது. இக்கருவறைக்கு அர்த்தமண்டபம் உண்டு. இங்குள்ள மூலவர் திருவேங்கிட விண்ணவப்பெருமாள் எனப்படுகிறார். கடுசர்க்கரை படிமம். 210 செ.மீ.உயரம், நின்ற கோலம், 4 கைகள், சங்கு சக்கரம் ஏந்தியவை, ஒன்று அபயம், முன் இடது கை கட்யவலம்பிதா முத்திரை, பிரபாமண்டிலம் உண்டு. திருமலைநாயக்கர் இந்த விஷ்ணுவிற்குத் தங்கக்கவசம் கொடுத்திருக்கிறார். இந்தக் கடுசர்க்கரை படிமம் 17–ஆம் நூற்றாண்டினது. கருவறை 11–ஆம் நூற்றாண்டினது. அப்போதே இங்கு விஷ்ணுவிற்கு ஒரு படிமம் இருந்திருக்க வேண்டும்.

## பரிவார தெய்வங்கள்:

கோபுரவாசலில் வடபுறத் திண்ணையில் நடராஜர், காளி, நர்த்தனகாளி,சித்திரபுத்திரர் ஆகியோர் உள்ளனர். ஊஞ்சல்மண்டபம் அருகே ஞானதட்சணா மூர்த்தி; கல்படிமம், சுகாசனம். வசந்த மண்டபம் அருகே நீலகண்ட விநாயகர் சன்னதி, கிழக்கு நோக்கியது. முக்குறுணி விநாயகர் என்பது வழக்காறு; அமர்ந்த கோலம், 10 கைகள். மடியில் சக்தி தேவி. 180 செ.மீ. கல்படிமம். இக்கோயிலை அடுத்து கங்காளநாதர் கோவில். பிற்கால செப்புப்படிமம்,

கோயில் பிற்காலத்தது. 6 மீட்டர் உயரப் பாறையில் கைலாசநாதர் கோயில் உள்ளது. கருவறை அர்த்தமண்டபம் திறந்த வெளிப் பிரகாரம் என அமைந்தது. கருவறை மூலவர் லிங்க படிமம், 30 செ.மீ. உயரம் ஆவுடையும், லிங்கமும் தாய்ப்பாறையில் கொத்தப்பட்டது. உச்சிப்பகுதி கூம்பு வடிவு. இச்சிவன் மேற்கு நோக்கியவர்.

தெற்கு பிரகாரத்தில் சேரவாதல் சாஸ்தா இருக்கிறார். வெளிப்பிரகாரம் வாயுமூலையில் ராமசாமிகோயில். ராமன், சீதை கல்படிமங்கள். இதே பிரகாரம் தெற்கு துர்க்கை, மகாதேவர், ராமேஸ்வரத்து, மகாதேவர், ஸ்ரீசக்கரம், கிருஷ்ணன் ஆகியோரின் கோயில்கள் உள்ளன. ஜெயந்தீஸ்வரத்துக் கோயில்கள் என இவற்றை அழைக்கின்றனர். இவற்றின் அருகே சுப்பிரமணியசுவாமி கோவில், வள்ளி தெய்வானையுடன் சுப்பிரமணியன்.

வடக்கு வெளிப்பிரகாரம் நடுவில் காலபைரவர் இருக்கிறார். இவரை க்ஷேத்திரபாலன் என்கின்றனர். இக்கோயிலருகே அறம்வளர்த்த அம்மன்கோயில் உள்ளது. இதில் கோயில் இறைவியாக அம்மன் இருக்கிறாள். இக்கோயில் 1758–ல் கட்டப்பட்டது. இங்குள்ள செப்புப்படிமம் சமபங்கவடிவு. இரண்டு கைகள், தெற்கு வெளிப்பிரகாரத்தில் 5 மீட்டர் உயரமுள்ள கல்படிம ஆஞ்சநேயர் அஞ்சலிஹஸ்தமனாய் நிற்கிறார். இது 1930–ல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இப்படிமம் 1872–ல் பூமியிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டது.

சித்ரசபையில் சிதம்பரேஸ்வரரின் தஞ்சைப்பாணி ஓவியம் உள்ளது. இதன் கிழக்கே இந்திரவிநாயகர் கோவில் உள்ளது. கிழக்கு வெளிப்பிரகாரத்தில் இருக்கும் கொன்றையடிநாதர் கோயில் மூலவர் எனப்படுகிறார். லிங்கவடிவினர். சுயம்புலிங்கம், அருகே பழைய கொன்றை மரம். இது மும்மூர்த்திகளின் வடிவம். இது முதல் யுகத்தில் அரசமரம்; இரண்டாம் யுகத்தில் துளாமரம்; மூன்றாம் யுகத்தில் வில்வமரம். நான்காம் யுகத்தில் கொன்றை மரம் என்பது தலபுராணம். மூன்று முக வெள்ளிக்கவசம் இதன் மேல் உள்ளன. இக்கோயிலுக்குத் தமிழ் சிவாச்சாரிய மரபினரே பூஜை செய்கின்றனர்.

இக்கோயிலின் அருகே மிகப்பெரிய நந்தியும் (மாக்காளை) கருடாழ்வார் சிற்பமும் உள்ளன. செண்பகராமன் மண்டபத்தில் விக்னேஸ்வரி (பெண்ணுருவ விநாயகர்) சிற்பம் வழிபாடு பெறுகிறது. இதற்கு 4 கைகள், அமர்ந்த கோலம், இரண்டு மார்புகள், துதிக்கை. உட்பிரகாரத்தில் துர்க்கை, மூடுகணபதி, சங்கரநாராயணர், பள்ளிகொண்ட பெருமாள், சண்டேஸ்வரர் ஆகியோருக்குக் கோயில்கள் உள்ளன. கருவறை எதிரே ரிஷப மண்டபத்தில் நடராஜர் சிவகாமி செப்புப்படிமங்கள் உள்ளன.

## தேரும் தெப்பக்குளமும்:

இக்கோயிலில் சுவாமி தேர், அம்மன் தேர், பிள்ளையார் தேர், இந்திரன் தேர் என நான்கு தேர்கள் உள்ளன. பெரிய தேர் 60 அடி உயரம். 1740–ல் செய்யப்பட்டது. விழாவில் இத்தேரில் 84 தூண்கள் நடப்பட்டு அலங்கரிக்கப்படும். அம்மன் தேர் 40 அடி உயரமுடையது. இவ்விரு தேர்களும் ஐந்து தட்டுகள் கொண்டவை.

இக்கோயிலின் தெப்பக்குளம் 4 ஏக்கர் பரப்புடையது. இது கோயிலின் வடபுறம் உள்ளது. 13 தூண்களும், கோபுரமும் கொண்டது தெப்ப மண்டபம். இந்த குளத்தை முதலில் தோண்டி படிகள் கட்டியவன் வீரமார்த்தாண்டவர்மா குலசேகர பெருமாள். திருக் குளத்தின் படிக்கட்டு 1471–ல் கட்டப்பட்டது. தெப்பமண்டபத்தைக் கட்டியவர் திரு மலை நாயக்கரின் தம்பி செவ்வந்தி நாயக்கர். இது 1622 – 1651 ஆம் ஆண்டிற்குள் கட்டப்பட்டிருக்கலாம்.

## கல்வெட்டுக்கள்:

இக்கோயிலில் தமிழ் மொழியில் 130 கல்வெட்டுக்களும், வட்டெழுத்து வரிவடிவில் 15 கல்வெட்டுக்களும், கிரந்த எழுத்தில் 5 கல்வெட்டுக்களும் ஆக 150 கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இக்கல்வெட்டுக்களில் பழையது 9–ஆம் நூற்றாண்டு, 17–18 ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் அதிகம். கல்வெட்டுக்களில் பெரும்பாலானவை நிபந்தம் பற்றியவை. கோயில் கட்டுமானம் பற்றிய செய்திகள். நிபந்தங்களைக் கொடுத்த

பொதுமக்களில் தேவதாசிகளும் உண்டு. இக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் 820 ஏக்கர்கள் அளவில் இருந்தன. 10–15–ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலங்களில் 575 ஆடுகள், 35 பசுக்கள், 5 எருமைகள் கொடுக்கப்பட்டன.

## சிற்பங்கள்:

இக்கோயிலுக்கு வருகைதரும் பயணிகள் கோயில் சிற்பங்களை நிதானமாக பார்த்து ரசித்துச் செல்லலாம். கோயிலின் எல்லா பகுதிகளிலும் காடு, மலை போன்ற இயற்கை காட்சி சிற்பங்கள், இராமாயண பாரத பாகவத சிற்பங்கள், பறவை விலங்கு சிற்பங்கள், கடவுளரின் சிற்பங்கள் என 2000–க்கு மேற்பட்டவை உள்ளன. சைவ நாயன்மார்களின் சிற்பங்கள் இங்கே முழுதும் இல்லை. ஆனால் பன்னிரு ஆழ்வார்களின் சிற்பங்கள் உள்ளன.

ஊஞ்சல் மண்டபத்தில் ஆளுயர சிற்பங்கள் உள்ளன. மன்மதன், ரதி, கர்ணன், அர்ச்சுனன் என்பவை முக்கியமானவை. மன்மதன் கிளி இழுத்துச்செல்லும் தேரில் இருக்கிறான். மன் மதனின் இடது வலது புறங்களில் ரதி, ப்ரீத்தி என இரு தோழிகள் உள்ளனர். ரதி அன்னவாகனத்தில் கால்களை இருபுறமும் தொங்க விட்டபடி இருக்கிறாள். ரதியின் இடதுபுறம் உள்ள மரத்தின் இலைகளும் கிளைகளும் ஆடுவதுபோல் காட்சி அளிக்கின்றன. ரதியுடன் மூன்று பெண்கள். ஒருத்தி அஞ்சலி ஹஸ்தமாய் இருப்பவள், இருவர் வெண்சாமரை வீசுபவர்கள். இம்மண்டபத்திலும் கர்ணன் நின்றகோலம், இடது கரத்தில் வில், வலது கரத்தில் நாகபாணம். கர்ணனின் அருகே ஒரு பெண்; இரண்டு கைகளிலும் பூமாலையை ஏந்தியபடி நிற்கிறாள். இவள் கர்ணனின் மனைவி சுலோச்சனா. இங்கு குறவன் இளவரசியைக் கவர்ந்து செல்லும் சிற்பம் உள்ளது. குறவனின் உயரத்திற்கு ஒப்ப இளவரசி சிற்பம் காட்டப்பட்டுள்ளது.

சித்ரசபை வாசலில் கங்காள நாதரும், வேணுகோபாலரும் நிற்கின்றனர். கங்காளநாதர் உயரமானவர். கூர்மபுராணம் தொடர்பான கதை. அருகே குண்டோதரன்; அகப்பையுடன் ஆடை நெகிழ பெண். சித்ரசபையினுள் எட்டு தூண்களிலும் ஊர்த்துவ

தாண்டவம், வில்லேந்திய ராமன், அல்லிமலர் தாங்கிய சீதை, சேகண்டி அடிக்கும் அனுமன், வியாக்ரபாதர், பீமன் ஆகியோர் உள்ளனர். இங்குள்ள சிற்பங்களில் காரைக்கால் அம்மையார் சிற்பம் முக்கியமானது. அம்மை வயது முதிர்ந்த பெண்ணாக காட்டப்பட்டுள்ளார். இவளது முதிர்ச்சி எலும்பு வடிவில் தெரிகிறது.

இக்கோயிலில் பக்தர்கள் பார்க்கவேண்டிய மண்டபம் செண்பகராமன் மண்டபம். ராமாயணம், பாரதம், பாகவதம், புராணங்கள் குறித்து 500–க்கு மேற்பட்ட அருமையான சிற்பங்கள் உள்ளன. சிவன், விஷ்ணு கருவறைகளின் எதிரே இருப்பது இம்மண்டபம். சிவன் கருவறை எதிரே உள்ள பகுதிகளில் சிவபுராணச் சிற்பங்களும், விஷ்ணு கருவறை எதிரே உள்ள பகுதிகளில் இராமாயணச் சிற்பங்களும் உள்ளன. ராமன் மறைந்து நின்று வாலிமீது அம்பெய்யும் காட்சி சிற்பம் இங்கே உள்ளது. சிவலிங்கத்தை வாலால் சுற்றி இழுக்கும் வாய்மொழிக்கதை அடிப்படையிலான சிற்பம் உண்டு.

கோபுர அதிஷ்டானத்தின் வடக்கிலிருந்து தொடங்கி தொடர்ந்து 35 சிற்பங்கள் உள்ளன. சுரதேவர் சிற்பம் அபூர்வமானது. இரண்டு தலைகள், ஆறு கண்கள், மூன்று கைகள், மூன்று கால்கள் என அமைந்தது. இவரை அடுத்து திருவிக்கிரமர், மகாபலி சக்கரவர்த்தியிடம் மண்தானம் கேட்கும் முழு கதையும் ஒரே சிற்பமாக உள்ளது. அர்ஜுனனுக்குக் கீதையை உபதேசிக்க விஷ்ணு எடுத்த விஸ்வரூபம் பார்த்தசாரதி சிற்பம் உள்ளது.

இக்கோயில் கோபுரத்தின் ஏழு நிலைகளிலும் நூற்றி பதினைந்து தாவரசாய ஓவியங்கள் உள்ளன. இராமாயணம், கோயில் தலபுராணம், திருவிதாங்கூர் அரசர்கள் குறித்தவை இவை. இவை கதை ஒழுங்கின்படி இல்லை. தசாவதாரம், இயற்கை காட்சி, அன்றைய நடைமுறை ஓவியங்களும் இங்கு உள்ளன.

## பூஜை

காலை 4.00 மணி திருநடை திறப்பு

காலை 4.40 மணி நிர்மால்ய அபிஷேகம்

காலை 6.00 மணி  தாரை அல்லது  சங்காபிஷேகம்
காலை 6.45 மணி  ஸ்ரீபலி
காலை 10.30  மணி  உச்சகால அபிஷேகம்
பகல்  11.15 மணி  உச்சகால தீபாராதனை
பகல்  11.30 மணி  ஸ்ரீபலி
பகல்  11.45 மணி   கருவறை திருநடை அடைப்பு
பகல்  12.30 மணி   திருக்கோயில்நடை அடைப்பு
மாலை 5.00 மணி திருநடை திறப்பு
மாலை 6.30 மணி  சாயரட்சை தீபாராதனை
இரவு 7.45 மணி  நைவேத்யம், ஸ்ரீபலி
இரவு 8.15 மணி  திருநடை அடைப்பு

## விழாக்கள்:

சித்திரை, ஆவணி, மார்கழி, மாசித் திருவிழாக்கள். சித்திரை விஷு, கார்த்திகை சொக்கப்பனை, ஆடி களப பூஜை, ஆஞ்சநேயர் ஜெயந்தி ஆகியன முக்கிய திருவிழாக்கள். மார்கழி திருவிழா பெரியது. 9–ஆம் நாள் தேரோட்டம். 6–ஆம் நாள் விழா சம்பந்தர் பார்வதியிடம் பால் குடிக்கும் நிகழ்வு, சித்திரை திருவிழாவில் 10–ஆம் நாள் தெப்பவிழா.

## அன்னதானம்:

தினமும் 150 நபர்களுக்கு பகல் 11.30 மணிக்கு அன்னதானம் நடைபெறுகிறது.

திருக்கோயில் தொலைபேசி : 04652 – 241421
இணையதளம் : www. kanyakumaritemples.org
மின்னஞ்சல் : thanumalayantemple@gmail.com



# 3. அருள்மிகு நாகராஜா திருக்கோயில்

## நாகர்கோவில், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | அனந்தகிருஷ்ணன், நாகராஜா |
| தீர்த்தம் | – | நாகதீர்த்தம் |
| தலவிருட்சம் | – | ஓடவள்ளி |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

நாகர்கோவில் நகரத்தின் மத்தியில் உள்ளது. கோயில் கிழக்கு பார்த்தது என்றாலும் தெற்கு திசையில் உள்ள கோபுர வாசல் வழியே செல்லும் வழக்கம் காலம் காலமாய் நடக்கிறது. வாகனங்களில் செல்பவர்கள் தெற்கு முகப்பு வழி மட்டுமே செல்ல முடியும். கோயிலின் முன்பகுதியில் வாகனங்களை நிறுத்த வசதி உண்டு. கோயிலின் அருகே திருக்கோயில் அலுவலகம் உள்ளது. கோயிலின் பூஜை/வழிபாடு குறித்த விவரங்களை இங்கு கேட்டுக்கொள்ளலாம். கோயிலின் அருகே அமைந்துள்ள சிறிய குளம், பெரிய அரசமரங்கள், பெரிய வளாகம் எல்லாம் இக்கோயிலுக்குச் சிறப்பைக் கொடுப்பன. கிழக்கு வாசல் வழியும் நடந்து நேராக கோயிலுக்கு வரமுடியும்.

## தலபுராணமும் வரலாறும்:

இக்கோயிலுக்கு என்று தனியாக தலபுராணம் கிடையாது. இது சமணக் கோயிலாக இருந்தது. கி.பி 16–ஆம் நூற்றாண்டு வரை சமணப்பள்ளியாக இருந்த இக்கோயிலின் வழிபாட்டு பழமை பற்றிய சான்றுகள் கிடைக்கவில்லை. கல்குளம் வட்டம் சிதறால் கோயில் ஒரு சமண ஸ்தலம். இதன் காலம் 8–ஆம் நூற்றாண்டுக்கு முன் உள்ளது.

ஆரம்பகாலத்தில் நாகராஜா என்னும் தர்ணேந்திரன் இக்கோயிலின் முக்கிய தெய்வமாக இருந்தது. 16–ஆம் நூற்றாண்டு கல்வெட்டு குண வீரபண்டிதன், கமலவாக பண்டிதன் இருவரும் நாகராஜா பூஜையை மேற்பார்வையிட்ட சமணர்கள் எனத் தெரி விக்கிறது. இவர்கள் ஆச்சாரியர்கள். இது ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு சமண தெய்வமாகவும், பாமர தெய்வமாகவும் இக்கோயிலில் இருந்திருக்கிறது. நாகர் வழிபாடு/கதைகள் அப்போதே பரவலாயிருக்கலாம். இந்த நாகராஜா பற்றிய சமண கதைகள் உண்டு.

சமணத்தின் 23–ஆம் தீர்த்தங்கரர் பார்சுவநாதர். இவருக்கு பிறவிகள் தோறும் துன்பமளித்தவன் சமடன். இவன் கடைசி பிறவியில் மகிபாலன் என்னும் பெயரில் பிறக்கிறான். அப்போது பாசுவநாதருக்கு தாத்தா முறை. மகிபாலன் ஒரு மரக்கட்டையை நெருப்பிலிட்டான். பார்சுவநாதனாக இருந்த சிறுவன் அந்த கட்டையில் இரு பாம்புகள் உள்ளன. அவற்றை நெருப்பில் போடாதே என்கிறான். ஆனால் மகிபாலன் கேட்கவில்லை. அதனால் பாம்புகள் இறக்கின்றன. பார்சுவன் ஓதிய மந்திர மகிமையால் ஆண் பாம்பு நாகராஜனாகவும் (தர்ணேந்திரன்) பெண்பாம்பு நாகராணியாகவும் (பத்மாவதி) பிறக்கின்றனர்.

தீர்த்தங்கரர்கள் ஒவ்வொருவருக்கும் யட்சனும் யட்சியும் பணிவிடையாளர்களாக இருப்பர். பார்சுவநாதருக்கு தர்ணேந்திரனும், பத்மாவதியும், யட்சனும் யட்சியுமாக இருந்தனர் என்பது ஸ்ரீபுராணம். இதன்படி இக்கோயில் தெற்கு கருவறையில்

இருப்பது தர்ணேந்திரன். நெல்லை மாவட்டத்திலுள்ள ஒரு கல்வெட்டு (கி.பி.1588) கருங்குள வளநாட்டு கும்பிகுளத்து திருக்குருகை பெருமாள் இக்கோயிலுக்கு நிபந்தம் கொடுத்துள்ளார். இந்த கல்வெட்டில் தார்வனந்தாள்வார் என்ற பெயர் முதலில் வருகிறது.

அனந்தன் ஆதிசேஷனின் பெயர். இவன் ஆயிரம் தலைகளை உடையவன். பார்சுவநாதர் புராணத்தில் இடம் பெறும் ஆயிரம் தலையுடைய நாகராஜனுக்கு இணையான தெய்வம் திருமாலை தாங்கும் ஆதிசேஷன்.

இதனால் இக்கோயில் வைணவ கோயில் ஆனது. 1643–ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலை ஸ்ரீகிருஷ்ணன் கோயில் எனக் கூறும். இப்போது மூலவரின் எதிரே உள்ள கொடி மரத்தின் பட்டத்தில் ஆமை படம் இடம் பெறுகிறது. ஆமை கொடி நாகராஜருக்கு, பலராமனின் கொடியிலும் ஆமை இருக்கும். எனவே இக்கோயிலின் மூல புராணமாக சமணத்தின் ஸ்ரீ புராணத்தையும் இந்துக்களின் பாகவதத்தையும் கொள்ளலாம்.

இந்தக் கோயில் கட்டுமானம் தொடர்பாக ஒரு கதை வழங்குகிறது. இக்கோயிலை முதலில் வைஷ்ணவ கோயிலாக கட்ட ஆரம்பித்தவன் சிறைவாய் மூத்த தம்புரான் ஆன ஜெயதுங்க நாட்டு சங்கரநாராயணர் வென்று மண்கொண்ட பூதலவீர வீர உதய மார்த்தாண்டன் என்பவன் ஆவான். இவன் சோழகுல வல்லிபுரம் என்ற களக்காட்டை (திருநெல்வேலி மாவட்டம்) தலைநகராகக் கொண்டு தன் புதிய அரண்மனையில் இருந்து வேணாட்டை ஆண்டவன். (1516 முதல் 1585 வரை)

இந்த அரசனுக்கு தீர்க்க முடியாத சரும வியாதி வந்தது. தொழுநோய் என ஒரு வைத்தியன் சொன்னான். மன்னன் தன் உடலைப் பட்டால் மூடிக்கொண்டுதான் அமைச்சர்களையே சந்தித்தான். சோதிடர்கள் அவனது சரும வியாதி நாகதோஷத்தால் வந்தது. நாஞ்சில் நாட்டு நாகராஜாகோயிலில் வழிபட்டால் இந்த வியாதி தீரும் என்றான். மன்னனும் அப்படியே செய்தான். இந்தக் கோயிலின் தலவிருட்சம் என்று கூறப்படும் ஓடவள்ளி செடியைத் தன் உடம்பில் தேய்த்துக்கொண்டு 41 மண்டலங்கள்

இக்கோயிலில் இருந்தான். இவன் இக்கோயிலில் சில பகுதிகளைக் கட்டினான் என்பதும் ஒரு கதை.

## கோயில் அமைப்பு:

நாகராஜா திருக்கோயிலின் இன்றைய கட்டிட அமைப்பு குறிப்பிட்ட காலத்தில் வடிவமைக்கப்பட்டதல்ல. கி.பி.15–ஆம் நூற்றாண்டிலிருந்து 20–ஆம் நூற்றாண்டு வரை 400 ஆண்டுகளில் படிப்படியாகக் கட்டப்பட்டது. ஆரம்பகாலத்தில் உள்ள கட்டுமானம் பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் இல்லை. இப்போதுள்ள கருவறைப் பகுதியும் அர்த்தமண்டபமும் முன்பு இருந்திருக்கலாம். உள் பிரகாரம், வெளிப்பிரகாரம், மதில், முன் பகுதிக் கோபுரம் ஆகியன பிற்கால வளர்ச்சிகள்.

இந்த கோயில் இருக்கின்ற இடத்தைச் சுற்றி வயல்களும் குளங்களும் இருந்தன என்னும் செய்தியை 50 ஆண்டுகளுக்கு முன்பு வரை வாய்மொழியாகக் கேட்டவர்கள் இருக்கிறார்கள். இப்போது கோயில் இருக்கும் இடத்தைச் சுற்றி சிறிய பெரிய குளங்கள் இருந்தன. கோயிலின் மேற்கே இப்போது இருக்கும் ஸ்டேடியம் 35 ஆண்டுகளுக்கு முன்புவரை கள்ளர் குளம் என்ற பெயரில் அழைக்கப்பட்டது. கோயிலின் தெற்குப் பகுதியில் உள்ள நாகராஜா திடல் கூட 40 ஆண்டுகளுக்கு முன்பு குளமாக இருந்தது. இதன் பழைய பெயர் உமைபங்கன் ஏரி. கோயிலின் கிழக்கு பகுதி இப்போதும் குளமாகவே உள்ளது. ஒரு சாலை கோயிலையும் குளத்தையும் பிரிக்கிறது. இப்படியான நீராதாரங்களின் நடுவில் இக்கோயில் இருந்தது. இது 20–ஆம் நூற்றாண்டு ஆரம்பகால நிலை.

இன்றும் இக்கோயிலின் பொலிவுக்குக் கோயிலின் கிழக்கு, தெற்கு பகுதியில் உள்ள வளாகமும், கிழக்கில் உயர்ந்து நிற்கும் அரச மரம் வடக்கில் இருக்கும் சிறிய குளம் போன்றவையும் காரணம். கோயிலின் தெற்கு பக்கம் உள்ள வாயில் மகாமேரு. பக்தர்கள் பொதுவாக இந்த வாயிலைப் பெரிதும் பயன்படுத்துகின்றனர். மகாமேரு கேரளபாணி கட்டிடம். கிழக்கு வாசல் உமபங்கன் வாயில்

எனப்படும். இக்கோயிலின் கோபுரமாகக் கருதப்படும் வாயிலின் முகப்பு ஓட்டுக்கூரை.

மொத்தக் கோயில் 72 செண்ட் நிலப்பரப்பில் உள்ளது. அனந்தகிருஷ்ணன் சன்னதிக்கும், நாகராஜர் சன்னதிக்கும் இரண்டு வாசல்கள் உள்ளன. அனந்தகிருஷ்ணன் சன்னதி வாசலில் கொடிமரம், பெரிய மணி மண்டபம், (ஒரு காலத்தில் யானை கட்டப்பட்ட இடம்), ஓட்டுப்பணி கூரை. இது கிழக்கு பிரகாரம், பிற மூன்று பிரகாரங்களும் வெட்டவெளியில் அமைந்தவை.

கோயிலினுள் செல்வதற்கு இரண்டு வாசல்கள். நாகராஜர் சன்னதி வாசலில் இரண்டு பெரிய நாகர் சிற்பங்கள் தர்ணேந்திரன், பத்மாவதி இருவரும் இந்த நாகர்கள். பார்சுவநாதரின் யட்சன், யட்சிகள். இவ்வாசலைக் கடந்ததும் காண்பது மகாமண்டபம்.

மகா மண்டபம் 29 தூண்களைக் கொண்ட பெரிய மண்டபம். இதன் வடபகுதியில் நாகராஜனின் கோயிலும் தென் பகுதியில் அனந்தகிருஷ்ணன் கோயிலும், நடுவில் சிவனின் சிறு கருவறையும் உள்ளன. இவை மூன்றும் கிழக்கு நோக்கியவை. இம்மூன்று கோயில்களைச் சுற்றிலும் மேல்கூரையுள்ள பிரகாரம் உண்டு. இந்த உட்பிரகாரத்தில் சுற்றிலும் உயர்ந்த திண்ணை உண்டு. நாகராஜர் கருவறையை உட்பிரகாரத்திலிருந்து பார்க்கும் வசதி உண்டு.

## இரண்டு கருவறைகள்:

நாகராஜர் இருக்கும் கருவறை இரண்டு அறைகளைக் கொண்டது. ஓலைவேய்ந்த கூரையால் ஆனது. இத்தகு அமைப்புடைய குமரி மாவட்ட கருவறை இது ஒன்றுதான் பழமை மரபையும் பாதுகாப்பதன் தொடர்ச்சி. மூலவர் ஐந்து தலைகளைக்கொண்ட ஐம்பொன் கவசத்தால் பொதியப்பட்ட நாகர். இது கல்படிமம்.இது சுயம்புவாக உருவானது என்பது ஐதீகம்.

அனந்தகிருஷ்ணன் கோயில் கருவறை அந்தராளம், அர்த்தமண்டபம் என அமைந்தது. அர்த்தமண்டபத்திலிருந்து

பக்தர்கள் வழிபடலாம். கருவறை தெய்வமான அனந்தகிருஷ்ணன் தர்னேந்திரனாக இருந்தவர். கடுசர்க்கரைப் படிமம். நின்றகோலம். ஆடையின்றி கிரீடா மகுடத்துடன் தலைக்கு மேல் ஐந்து தலை நாகப்படத்துடன் காட்சியளிக்கிறார். இடுப்பிலிருந்து நாகம் தலைக்குமேல் படத்துடன் நிற்கிறது. இவரின் இடது வலது புறங்களில் பத்மாவதி அம்பிகாபதி யட்சிகள் நின்ற கோலம். மூன்று தலை நாகம் இவர்களின் தலைமேல் உள்ளது. வலது கைமலர், இடது கை லோலாஹஸ்தம், இப்போது இவர்கள் பாமா ருக்மணி.

நாகராஜர் கருவறைக்கும் அனந்தகிருஷ்ணனின் கருவறைக்கும் இடைப்பட்ட சிறிய கோயிலில் சிவன் இருக்கிறார். இங்கு சிவன் ஆவுடையில் லிங்க வடிவில் இருக்கிறார்; கல்படிமம். எதிரே நந்தி உண்டு.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலில் எட்டுக்கு மேற்பட்ட பரிவார தெய்வங்கள் உள்ளன. அனந்தகிருஷ்ணன் மூலவர் ஆனாலும் நாகரும் மூலவராக கருதப்படுகிறார். சிவன் பரிவார தெய்வமே. இரு மூலவர்களைக் கொண்ட கோவில் இது.

தெற்கு வெளிப்பிரகாரத்தில் நாகமணி பூதத்தான்; ஐந்து தலை நாகம்; ஒருகையில் கதை; ஜுவாலா மகுடம். இது காவல் தெய்வம். வடக்கு வெளிப்பிரகாரத்தில் சாஸ்தா கோயில். இது முழுதும் புனரமைக்கப்பட்ட கோயில். சாஸ்தா அமர்ந்த கோலம் தலையில் கிரீடம்; வலது கையில் செண்டு. உள் பிரகாரத்தில் கன்னிமூல கணபதி இருக்கிறார். அனந்தகிருஷ்ணன் கோயிலில் வேட்டைகிருஷ்ணன், வேட்டை அம்மன், சக்கரத்தாழ்வார், விநாயகர் ஆகியோரின் விழாப்படிமங்கள் உள்ளன.

கோயிலுக்கு வடக்கே நந்தவனமாக இருந்த பகுதியில் சிறுகோயில்கள் உள்ளன. இவை புதிதாக வந்தவை. வடபுறம் துர்க்கை அம்மன் கருவறை. சங்கு சக்கரம் தாங்கி, நின்ற கோல கல் படிமம். இக்கோயில் 1965–ல் நிறுவப்பட்டது. துர்க்கை

அருகே பாலமுருகன் கோயில். இது 1979–ல் நிறுவப்பட்டது. முருகன் கோயிலின் தெற்கில் குழலூதும் கிருஷ்ணன் நிற்கிறார். தலைக்குமேல் குடை.

## தேரும் விமானமும்:

இக்கோயிலுக்கென்று ஒரு சுவாமித்தேர் உள்ளது. சிறியது. தெப்ப வைபவம் இக்கோயிலில் வழக்கத்தில் இல்லை. கோயிலின் முன்பகுதி 8 செண்ட் பரப்பில் உள்ள குளம் பக்தர்கள் குளிப்பதற்கு உரியது. அனந்தகிருஷ்ணன் ஆலயத்தின் மேல் விமானம் உண்டு. சுதையால் ஆனது. ஏகதளம், வட்ட வடிவு, நாகராஜா கருவறையின் முன் மண்டபத்தின் மேலும் விமானம் உண்டு. இவை பிற்கால கட்டுமானம்.

## கல்வெட்டுக்கள்:

இக்கோயிலில் 12 கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவை நிபந்த கல்வெட்டுக்கள். தமிழ் கிரந்த கலப்புடையவை. 1505, 1514, 1517, 1518, 1520, 1521, 1588, 1641, 1643, 1645 ஆண்டுகளில் வெட்டப்பட்டவை.

இக்கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும் முக்கிய அரசன் பூதலவீர உதய மார்த்தாண்டவர்மா ஆவான். 16–ஆம் நூற்றாண்டு ஆரம்பத்தில் இக்கோயிலை குணவீர பண்டிதன், கமல வாகன பண்டிதன், இருவரும் கவனித்தனர். இவர்கள் ஜைன ஆச்சாரியர்கள். 1588–ஆம் ஆண்டிலிருந்து இந்துக்கோயிலானது. இதன் பின் நிருவாகம் கைமாறியது. இக்கோயிலுக்கு நிபந்தமாக கொடுக்கப்பட்ட வயல்கள் தேரேகால்புதூர், தேரூர், சுசீந்திரம், புரவசேரி ஆகிய இடங்களில் இருந்தன. உத்தேசமாக இவை 40 ஏக்கர் பரப்பளவாகும்.

## சிற்பங்கள்:

இக்கோயிலின் மகாமண்டபத்திலும், உள் பிரகாரத்திலும் அருமையான சிற்பங்கள் உள்ளன. இவை ஜைன ஹிந்து மரபின.

நாகராஜர் சன்னதி எதிரே முன்பகுதி இரு தூண்களிலும் துவார பாலகர்கள் சிற்பங்கள் உள்ளன. இத்தூணின் வடபுறம் குறவன் ஒற்றைக்காலில் நின்றுகொண்டிருக்கிறான். அவன் கழுத்தில் வேட்டையாடிய மான், அவனது இன்னொரு கால் பாதத்தின் முள்ளை குறத்தி எடுக்கிறாள். இடப்புறம் அவர்களது நாய் நிற்கிறது. இதே பக்கத்தில் ரதி மன்மதன் சிறிய சிற்பங்கள் உள்ளன.

இதே மண்டபத்தில் பூசகர் பிரசாதம் கொடுக்கும் இடத்தில் உள்ள தூணில் அனுமன் சிவனை வழிபடுவது, காகம் சிவனை வழிபடுவது ஆகிய சிற்பங்களும், அருகருகே உள்ள தூண்களில் வேணாட்டு அரசன் பூதலவீர உதய மார்த்தாண்டனின் அஞ்சலி ஹஸ்த சிற்பமும், விஷ்ணு வஜ்ராயுதம் தாங்கிய சுப்பிரமணியன், காளிங்க நர்தன கிருஷ்ணன் ஆகிய சிற்பங்களும் உள்ளன.

அனந்தகிருஷ்ணன் சன்னதி எதிரே உள்ள தூண்களில் வாலைச்சுழற்றிய அனுமன் என ராமாயணப்பாத்திரங்களும், பார்சுவநாதர், மகாவீரர் என ஜைன சிற்பங்களும் உள்ளன. இதே பகுதியில் அபய வரத முத்திரை காட்டும் துர்க்கை, கோலூன்றி நடக்கும் பிராமணன், மத்தளம் கொட்டும் கலைஞன் சிற்பங்கள் உள்ளன. உள்பிரகாரத்தில் கருவறை அதிஷ்டான சுவரில் மகாவீரர், பாசுவநாதர் சிற்பங்கள் உள்ளன.

## பூஜை

காலை 4.00 மணி நடை திறப்பு

காலை 4.30 மணி அபிஷேகம்

காலை 5.00 மணி உஷபூஜை

காலை 10.00 மணி அபிஷேகம்

பகல் 11.00 மணி உச்சபூஜை

மாலை 5.00 மணி திருநடை திறப்பு

மாலை 6.30 மணி சாயரட்சை

இரவு 7.45 மணி அர்த்தஜாம பூஜை

ஞாயிற்றுக்கிழமை பகலிலும், இரவிலும் திருநடை சார்த்த அதிக நேரம் ஒதுக்கப்படும். தினமும் நாகராஜருக்கு பூஜை செய்த பின்னர்தான் அனந்தகிருஷ்ணனுக்கும், சிவனுக்கும் பூஜைகள் நடக்கும்.

அர்த்தஜாம பூஜையில் மட்டும் அனந்தகிருஷ்ணனுக்கு முதல் பூஜை. இக்கோயில் பூஜை கேரள தாந்திரீக முறைப் படியிலானது. கேரள பாம்பன் மேக்கோடு நம்பூதிரிகளே இக்கோயில் முக்கிய பூசகராக இருக்க வேண்டும் என்ற மரபு உண்டு. இக்கோயிலின் முக்கிய பிரசாதம் நீருடன் சேர்ந்த மண். இது தட்சணாய புண்ணிய காலத்தில் (ஆடி மாதம் முதல் மார்கழி முடிய) கறுப்பு நிறத்திலும், உத்ராயண புண்ணிய காலத்தில் (தை மாதம் முதல் ஆனிமாதம் வரை) வெள்ளை நிறத்திலும் இருப்பது சிறப்பு.

## நேர்ச்சை:

ஆயில்ய நட்சத்திரத்தில் தோஷம் நீங்க நேர்ச்சை செய்வது இக்கோயிலின் மரபு. மகாவிஷ்ணுவைத் தாங்கும் ஆதிசேஷன் இராமாயண காலத்தில் இலட்சுமணனாக அவதாரம் செய்தார். இலட்சுமணனின் நட்சத்திரம் ஆயில்யம். ஆதிசேஷனுக்குரிய பூஜை இலட்சுமணனுக்கும் பொருந்தும். இராகு, கேது தோஷம் உள்ளவர்கள் இந்நாளில் நாகராஜருக்கு பாலபிஷேகம் செய்கின்றனர். காலை 10.00 மணி பூஜையில் பால்பாயாச நேர்ச்சையும் உண்டு.

## திருவிழாக்கள்:

இக்கோயில் விழாக்களில் தை மாதம் 10 நாள் விழா, ஆவணி மாத ஞாயிற்றுக்கிழமைகள் விழா, கார்த்திகை விழா, ஐப்பசி மாத சூரம்பாடு விழா ஆகியன குறிப்பிட தகுந்தன. ஞாயிற்றுக்கிழமை பூஜை 1516–ஆம் ஆண்டிலிருந்தே நடக்கிறது என்பதற்குக் கல்வெட்டு சான்று உண்டு. ஆவணி ஞாயிற்றுக்கிழமைகளில் சிறப்பு விழா நடக்கும். இந்த நாட்களில் உப்பு, நல்லமிளகு போன்றவையும்,

கைகால் தலை போன்ற உடலின் மர வடிவங்களையும் நேர்ச்சையாக செலுத்துவர். நாகருக்கும் பாலூற்றும் வழக்கம் பெருகி வருகிறது.

தை மாதத் திருவிழா அனந்தகிருஷ்ணனுக்கு நடக்கிறது. இந்த விழாவின் தொடக்க நாளை கேரள மேக்கோட்டு நம்பூதிரிகள் உறுதிப்படுத்துகின்றனர். மூன்றாம் நாள் விழாவில் இருபுறமும் கொம்மண்டையம்மன் கோயிலில் இருந்து வாகனம் வரும். இது நாகராஜா கோயிலுக்குள் வருவதில்லை. வடசேரி கொம்மண்டை அம்மன் நாகராஜனின் சகோதரி என்ற கதையே இச்சடங்குகளுக்கு காரணமாக கொள்ளப்படுகிறது.

8–ஆம் நாள் விழாவில் வேட்டை நிகழ்ச்சி. 9–ஆம் நாள் தேர் திருவிழா. 10–ஆம் நாள் பழையாற்றில் ஆறாட்டு நிகழ்ச்சி.

## அன்னதானம்:

இக்கோயிலில் 14.4.2003 முதல் அன்னதானம் தினமும் வழங்கப்பட்டுவருகிறது.



நாகராஜர் கோயில் முகப்பு

திருக்கோயில் தொலைபேசி : 04652 – 232420
இணையதளம் : www. kanyakumaritemples.org
மின்னஞ்சல் : nagarajartemple@gmail.com



# 4. அருள்மிகு குகநாதீஸ்வரர் திருக்கோயில்

## கன்னியாகுமரி, அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | குகநாதீஸ்வரர் ( சிவன் ) |
| இறைவி | – | பார்வதி |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு |
| விமானம் | – | ஏகதளம் |
| தலவிருட்சம் | – | வில்வம் |

### அமைவிடம்

இக்கோயில் தமிழகத்தின் தென்கோடியில் உள்ள கன்னியாகுமரியில், ரயில் நிலையம் அருகே உள்ளது. திருக்கோயிலின் முன்பகுதியில் கோயில் பெயர் தாங்கிய பலகை உண்டு. நாகர்கோவிலிலிருந்து கன்னியாகுமரி சென்று அம்மனைத் தரிசித்து விட்டு இக்கோயிலுக்கு வரலாம். இக்கோயிலைப் பார்த்து விட்டு விவேகானந்தபுரம் செல்லலாம். வாகனங்களைக் கோயிலருகே நிறுத்த முடியும்.

### தலபுராணம்:

கன்னியாகுமரி ரயில் நிலையம் அருகே மரங்களும் செடி கொடிகளும் நிறைந்த அழகிய சூழலில் அமைந்திருக்கும்

இக்கோயில் பற்றிய பழம் கதை கன்னியாகுமரி பகவதி அம்மன் தலபுராணத்தில் உள்ளது. இத்தலபுராணம் எழுத்து வடிவில் அமைந்தது. கன்னியாகுமரி தலபுராணத்தில் இக்கோயில் இறைவன் கோனாண்டேஸ்வரன், குகனாண்டேஸ்வரன் எனப்படுகிறான். கருவறை குகைபோல் இருப்பதாலும் சுருங்கிய பிரகாரம் இருப்பதால் குகை ஈஸ்வரன் எனப்பட்டான். அதனால் குகனாண்டேஸ்வரன் ஆனான். கன்னியாகுமரித் தலபுராண ஆசிரியர் குகனாகிய முருகன் தந்தை சிவனை வழிபட்ட இடம் இது எனக் கூறுகிறார்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், முகமண்டபம், உட்பிரகாரம், வெளிப்பிரகாரம் என்னும் அமைப்பை உடையது. கோயிலின் முன் சிறிய தோட்டம் உண்டு. கோயிலைச் சுற்றி மதில் உண்டு. சோழர்காலப் பாணி கட்டுமானம். ரதம் போன்ற தோற்றம். நாகர்கோவில் சோழபுரம் கோயிலைப் போன்ற அமைப்புடையது. விமானம் நாகர அமைப்பு, பிற்காலம்; சுதை.

## கருவறை மூலவர்:

மூலவர் லிங்க வடிவம். கல்வெட்டில் இவர் திருப்பொந்தீஸ்வரமுடையார் எனப்படுகிறார். இக்கோயிலில் தட்சணாமூர்த்தி, கன்னி விநயாகர், கஜலட்சுமி, வள்ளி தெய்வானை சமேத முருகன், துர்க்கை, நவக்கிரகங்கள், காலபைரவர் ஆகியோர் பரிவார தெய்வங்களாக உள்ளனர். இக்கோயில்கள் பிற்காலத்தில் கட்டப்பட்டவை.

## கல்வெட்டுகள்

இக்கோயிலில் 16 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவற்றில் பழைய கல்வெட்டுகள் முதல் இராஜேந்திரன் (கிபி 1038, 1042, 1042), இரண்டாம் இராஜேந்திரன் (1057), முதலாம் இராஜாதிராஜன் ஆகிய அரசர்களின் காலத்தவை.

ஒரு கல்வெட்டு கோயில் இறைவனை ராஜராஜ பாண்டிநாட்டு உத்தரசோழ வளநாட்டுப் புறத்தாய நாட்டு

அழிக்குடி ராஜராஜேஸ்வரமுடையார் எனக் கூறும். இக் கல்வெட்டுகளின் படி 10 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே இது வழிபட்டு கோயிலாக இருந்தது என்று தெரிகிறது. பிற்காலச் சோழரின் ஆரம்பத்தில் இது கட்டப்பட்டிருக்கலாம் என்று தெரிகிறது.

## வேதபாடசாலை:

குகநாதீஸ்வரர் கோயிலுக்குத் தென்கீழ் மூலையில் வேதியன் சாத்தருக்குக் கோயில் இருந்தது. இதன் தெற்கே ஒரு சாலை இருந்தது. இது 862 வரை முற்காலப் பாண்டியரால் பேணப்பட்டு வந்தது. முதல் இராஜராஜன் இதைக் கைப்பற்றி விரிவுபடுத்தினான். இது ராஜராஜப் பெருஞ்சாலை எனப்பட்டது இங்கு வேதங்கள் கற்பிக்கப்பட்டன.

## பூஜை

காலை 5.30 மணி திருநடை திறத்தல்

காலை 7.00 மணி தீபாராதனை

காலை 11.00 மணி தீபாராதனை

பிற்பகல் 12.30 மணி திருநடை சார்த்துதல்

மாலை 5.00 மணி திருநடை திறத்தல்

மாலை 6.30 மணி தீபாராதனை

இரவு 8.00 மணி திருநடை சார்த்துதல்

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 246223.



# 5. அருள்மிகு சோழராஜா திருக்கோயில்

## நாகர்கோவில், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | அரவ நீள் சடையான் |
| இறைவி | – | கோலால் குழலாள் ஈஸ்வரி |
| தலவிருட்சம் | – | வில்வம், கொன்றை |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |

### அமைவிடம்

நாகர்கோவிலில் ஒரு பகுதியான ஒழுகினசேரி என்ற இடத்தில் உள்ளது. வடசேரி பேருந்து நிலையத்திலிருந்து ஒழுகினசேரி வழி செல்லும் பேருந்தில் சென்று ஒழுகினசேரி நிறுத்தத்தில் இறங்கி நடந்து செல்லலாம். நாகர்கோவிலிலிருந்து ஆட்டோவில் கோயிலுக்குச் செல்லலாம்.

### கோயில் அமைப்பு:

கோட்டாறு (நாகர்கோவில்) பழையாற்றின் கரையில் இருக்கும் இக்கோயில் சோழர்களின் கலைப்பாணிக்குச் சான்று. தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயத்தின் சிறிய மாதிரி இது. இக்கோயில் இருக்கும் இடமும் இதன் பின்னணியும் தென்குமரி வரலாற்றில் முக்கியமானது.

கோயில் நுழைவுப்பகுதியில் ஒட்டுப்பணியாலான பெரிய திண்ணை. இது திருவிதாங்கூர் கால கட்டுமானம். கருவறை, அந்தராளம், அர்த்த மண்டபம், கைகொட்டி பாடும் மண்டபம், நந்தி மண்டபம், முக மண்டபம் பிரகாரங்கள் சுற்று மதில் என அமைந்தது. சுற்றுமதில் பிற்காலத்தது. 17–ஆம் நூற்றாண்டில் பராக்கிரம பாண்டியன் என்ற பாண்டியன் இக்கோயிலில் கும்பாபிஷேகம் நடத்தியிருக்கிறார்.

கோயில் தரைமட்டத்தில் இருந்து 2.15 மீ. உயரத்தில் இருப்பது. கருவறை உட்பட புறமண்டபம் பகுதிகள் கி.பி.13–ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டவை. முக மண்டபத்திற்குச் செல்லும் சோபனப்படி சோழர் வேலைப்பாடு உடையது. தூண்களிலும் இதைக் காணமுடியும். நந்தி மண்டபம், அந்தராளம் பகுதிகள் கட்டையான தூண்கள், வேலைப்பாடு இல்லாதவை. கை கொட்டி பாடும் மண்டபத்தில் தேவதாசிகளின் கலை நிகழ்ச்சிகள் நடந்தன. அதனால் இப்பெயர் வழங்கியது.

## மூலவர்:

கருவறை மூலவர், அரவு நீள் சடையான் லிங்க வடிவினர். மூலவர், சோழீஸ்வரமுடையார், இராஜேந்திரர், சோழீஸ்வரமுடைய நயினார், பெரிய நயினார் என்ற பெயர்களில் அழைக்கப் பட்டிருக்கிறார். லிங்கம் மூன்றடி உயரம் உடையது. கிழக்கு நோக்கியது. இது பூமியில் 18 அடி ஆழத்தில் இருப்பதாக ஐதீகம்.

இறைவியான குழலேஸ்வரி தனிக்கோயிலில் இருக்கிறாள்.

## பரிவார தெய்வங்கள்:

சண்டிகேஸ்வரர், ஆறுமுக நயினார், தட்சிணாமூர்த்தி, சாஸ்தா ஆகிய பரிவார தெய்வங்கள் உள்ளன. இவற்றில் சில சோழர் காலத்தவை. பிற கோயில்கள் பாண்டியர், திருவிதாங்கூர் காலத்தில் கட்டப்பட்டவை.

## கல்வெட்டுகள்:

இக்கோயிலில் 19 கல்வெட்டுகள் உள்ளன. கன்னியாகுமரி மாவட்டத்தின் சோழர் கால வரலாற்று பண்பாட்டை உணர்த்தும்

அபூர்வமான கல்வெட்டுகள் இவை. இக்கல்வெட்டுகள் தமிழில் அமைந்தவை. கி.பி.11 ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி.15 ஆம் நூற்றாண்டிற்கு இடைப்பட்ட காலத்தில் வெட்டப்பட்டவை.

கி.பி.11ஆம் நூற்றாண்டில் 7 கல்வெட்டுகள் உள்ளன. இவை இக்கோயிலுக்கு சோழர்கள் கொடுத்த நிபந்தம் பற்றி கூறும். இதன்மூலம் இக்கோயில் 1100 ஆண்டுகளுக்கு முன்பே வழிபாடு கோயிலாக இருந்தது என்று தெரிகிறது. பிற்கால சோழர்களின் நிலைப்படை நாஞ்சில் நாட்டில் இருந்தபோது கோயிலின் நிர்வாக சபை நிலைப்படைத் தலைவர்களின் கட்டுப்பாட்டிலேயே இருந்தது. தேவஸ்தான நிர்வாகிகளையும், கோயில் பணியாளர்களையும் நியமிக்க நிலைப்படைத்தலைவர்களின் அனுமதி தேவை என்பதை இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

கி.பி.1252 ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலில் குன்றமெறிந்த பிள்ளையாருக்கு ஒதுக்கப்பட்ட நிபந்தம் பற்றிக் கூறும். இங்கு குன்றமெறிந்த பிள்ளையார் என்பது ஆறுமுக நயினாரை ஆகும். இதனால் இப்பரிவார தெய்வம் சோழர் காலத்தது எனக் கூறலாம். 13–ஆம் நூற்றாண்டு கல்வெட்டு ஒன்று இக்கோயிலில் கைக்கொட்டி பாடும் மண்டபத்தில் தேவாரப்பாடல்கள் பாடப்பட்டதைக் குறிப்பிடும்.

இக்கோயில் 11–ஆம் நூற்றாண்டில் இருந்தாலும் கோயிலின் முழுக்கட்டுமானம் கி.பி.1100ல் நடந்தது. முதல் குலோத்துங்கன் ஆணையின் பெயரில் இக்கோயில் கட்டுமானம் பொறுப்பை மழக்கரணர் என்னும் சோழர் படை அதிகாரியை வகித்திருக்கிறான்.

## பூஜை விவரம்

காலை 6.00 மணிக்கு உஷ பூஜை

காலை 10.00 மணிக்கு உச்சகால பூஜை

மாலை 6.30 மணிக்கு சாயராட்சை பூஜை

இரவு 7.30 மணிக்கு அர்த்த சாம பூஜை

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 232420.



# 6. அருள்மிகு தழுவிய மகாதேவர் திருக்கோயில்

### நாகர்கோவில், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | தழுவிய மகாதேவர் |
| இறைவி | – | ஆவுடையம்மான் |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | சிவாச்சாரியமரபு |

## அமைவிடம்

நாகர்கோவில் – அழகியபாண்டியபுரம் செல்லும் பாலமோர் ரோட்டில் வடசேரி எஸ்.எம்.ஆர்.வி மேல்நிலைப்பள்ளியின் கிழக்கே அமைந்தது இக்கோயில். பள்ளியை ஒட்டி தெற்கு வழி செல்லும் சாலையில் அரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இக்கோயில் நாகர்கோவிலின் வடக்கு வடசேரி என்னும் பகுதியில் அமைந்தது. பழையாறு இதன் அருகே ஓடுகிறது. நாகர்கோவில் பேருந்து நிலையத்திலிருந்து தடம் எண்.4 பேருந்தில் எஸ்.எம்.ஆர்.வி பள்ளி நிறுத்தத்தில் இறங்கி நடந்து செல்லலாம். கோயில் அருகாமை வரை வாகனங்கள் செல்லும். கோயிலின் எதிரே பெரிய அக்ரகார தெருவில் வாகனங்கள் நிறுத்த வசதி உண்டு. இக்கோயில் இருக்கும் பகுதி பேச்சுவழக்கில் தடிமார் கோயில் என அழைக்கப்படுகிறது.

## தலபுராணம்:

தழுவிய மகாதேவரை ஜுரதேவர் என்று சொல்வது இங்குள்ள மரபு. இக்கோயில் தெற்கு பிரகாரத்தில் ஜுரதேவர் இருக்கிறார். மூலவர் லிங்க வடிவினர். ஆயினும் ஜுரதேவராக கொள்கின்றனர். இக்கோயில் இறைவி ஆவுடையம்மன் குறித்து ஒரு கதை உண்டு. இந்த சிவன் கோயிலுக்கு இளம் பெண் ஒருத்தி தினமும் பால் கொண்டு வருவாள். ஒரு நாள் அவள் கருவறை அருகே பால் செம்பை வைத்தபோது அவளை சிவன் ஆட்கொண்டார். அங்கே அவள் அம்மனாக வழிபாடு பெற்று வருகிறாள்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் வெட்டவெளி வெளிப்பிரகாரம், கல் கூரை உள்ள உட்பிரகாரம், முன் மண்டபம், முக மண்டபம், நந்தி மண்டபம், கருவறை, அதன் மேல் விமானம், கோயிலைச் சுற்றி பெரிய மதில் என்னும் அமைப்புடன் கூடியபது. வெளிப்பிரகாரத்தில் வில்வம், ஆல், நந்தியாவட்டை, அரசு, பன்னீர் என பலவகை மரங்கள் செழிப்பாய் வளர்ந்து நிற்கின்றன. வெளிப்பிரகார வளாகம் பெரியது. கோயிலைச் சுற்றிய மதில் சுவர் பிற்காலத்தது.

கிழக்கு பிரகாரம் பெரிய வளாகமாக உள்ளது. இதில் வடகிழக்கில் யானைக்கொட்டில் கட்டிடம் உள்ளது. முன்பு இங்கு தென்திருவிதாங்கூர் கோயிலுக்குச் சொந்தமான யானை இருந்தது. கிழக்கு முகப்பில் திண்ணையுடன் கூடிய முகப்பு மண்டபம் உள்ளது. அடுத்து கிழக்கு பிரகாரமும் முகமண்டபமும். இது ஒரே மண்டபம், பெரியது. இம்மண்டபத்தின் வடக்கில் ஆவுடையாள் கோயில் உள்ளது. முகமண்டபத்திலிருந்து உட் பிரகாரத்தைச் சுற்றி வரலாம்.

நந்திமண்டபத்தின் வடக்கே சில கோயில்களில் விழாப் படிமங்கள் உள்ளன. இந்த மண்டபம் அர்த்த மண்டபமும் ஆகும் அறைகள் வேலைப்பாடுகள் இல்லாதவை. கருவறை சிறியது. அந்தராளம் நீண்டது. அர்த்தமண்டபத்தில் இருந்து தெற்கு,

வடக்கு பிரகாரத்திற்குச் செல்ல வாசல்கள் உண்டு. கருவறை பற்றிய மண்டப கட்டுமான பணி கி.பி.16 ஆம் நூற்றாண்டு என தெரிகிறது.

## மூலவர்:

கருவறைப்பகுதி அந்தராளத்துடன் கூடியது. கருவறையில் ஆவுடையில் சிவன் இருக்கிறார். 35 செ.மீ உயரம் கல் படிமம். மூலவர் ஜுர தேவர் எனவும் கொள்ளப்படுகிறார். கருவறை கட்டுமானம் பழையது. கி.பி. 14ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது. கருவறையின் மேல் உள்ள விமானம் நாகர வடிவு. இதன் நான்கு திசைகளிலும் இந்திரன் உட்பட நால்வரும் உள்ளனர். விமான நான்கு மூலைகளில் பூதம் தாங்கி விமானம் உண்டு.

## பரிவார தெய்வங்கள்:

கிழக்கு வெளிப்பிரகார முன்மண்டபத்தில் தெற்கில் விநாயகரும், வடக்கில் சுப்பிரமணியரும் உள்ளனர். இவை பிற்கால கோயில்கள். வெளிப்பிரகாரம் யானைக்கொட்டில் எதிரே வடக்கில் சாஸ்தா கோயில் உள்ளது. சாஸ்தாவும் இசக்கியும் இங்கு பீடமாக உள்ளனர். அருகே அமர்ந்தகோல வடிவம். பிற்கால பிரதிஷ்டை. சாஸ்தா பீடம் பழையது. மூலவருடன் தொடர்புடையது. இதற்குக் தினமும் பூஜை உண்டு.

முன்மண்டபத்தை அடுத்த கிழக்கு பிரகாரத்தில் வடக்கு பகுதில் ஆவுடையம்மன் கோயில் உள்ளது. கருவறை, அந்தராளம் என அமைந்தது. கருவறையின் மேல் பிற்கால விமானம் உண்டு. ஆவுடை நின்றகோலம், கல்படிமம், இரண்டு கைகள் ஒரு கையில் தாமரை மலர், இன்னொரு கை லோலா ஹஸ்தம்.

தெற்கு உட்பிரகாரத்தில் வடக்கு நோக்கி ஜுர தேவர் இருக்கிறார். கருவறை மட்டுமே கொண்ட சிறு கோயில். கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்களில் ஜுர தேவர் வழிபாடு தெய்வமாக உள்ள கோயில் இது ஒன்றே. இது கல் படிமம், நின்ற கோலம் மூன்று தலைகள், ஒன்பது கண்கள்; நான்கு கைகள்,

மூன்று கால்கள். ஜுர தேவரை வழிபடுபவருக்குக் கடும் ஜுரம் வராது. கபம் தொடர்பான வியாதிகள் வராது என்பது நம்பிக்கை.

ஜுர தேவர் தொடர்பாக சிவபுராணத்தில் ஒரு கதை உண்டு. சிவனும் திருமாலும் விளையாட்டாகச் சண்டை இட்டனர். அப்போது சிவன் மீது திருமால் ஒரு ஆயுதத்தைப் பிரயோகித்தார். அதனால் சிவனின் உருவம் மாறுபட்டு மூன்று தலைகளும், மூன்று கால்களும் ஆயின. அந்த உருவத்துடன் சிவபெருமான் இருக்க திருமால் விரும்பினார். அப்படியே சிவனும் காட்சி அளித்தார்.

ஜுர தேவரின் எதிரே தட்சிணாமூர்த்தி கோயில் உள்ளது. இது தெற்கு நோக்கியது. கல்படிமம், நின்ற கோலம், இதே பிரகாரம் கன்னிமூலையில் கணபதி கோயிலும், வடக்கு பிரகாரம் வடகிழக்கு மூலையில் சுப்பிரமணியர் கோயிலும் உள்ளன. சுப்பிரமணியர் வள்ளி தெய்வானையுடன் நின்ற கோலத்தில் காட்சி அளிக்கிறார். இதே பிரகாரத்தில் சண்டிகேஸ்வரரின் சிறு கோயில் வடக்கு பார்த்து உள்ளது. வடக்கு பிரகாரம் நடுவே தெற்கு நோக்கி சனீஸ்வரர் நின்ற கோலத்தில் இருக்கிறார்.

## கல்வெட்டுகள்:

இக்கோயில் முன்மண்டபம் தெற்கு பக்கச் சுவரில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. இது கி.பி.1532 ஆம் ஆண்டில் வேணாட்டு அரசன் உதயமார்த்தாண்டவர்மா காலத்தது. இந்த அரசன் களக்காட்டில் அரண்மனை அமைத்திருந்தபோது வெட்டப்பட்ட கல்வெட்டு இது. நாஞ்சில் நாட்டு சுசீந்திரம் ஊரில் வாழும் கொதுகுல சபை சமூகத்தைச் சார்ந்த ஆரீயன் கொத்தன் என்பவனை இக்கோயிலுக்கு கணக்கனாக நியமித்ததை இக்கல்வெட்டு கூறும். இதில் இக்கோயில் வடசேரி நயினார் தளியல் ஞானாதீஸ்வரமுடையார் கோயில் என குறிப்பிடப்படுகிறது. தளி என்பது கல்கோயிலைக் குறிக்கிறது. அதனால் 16 ஆம் நூற்றாண்டிற்கு முன்பே இக்கோயில் கல்கோவிலாக இருந்திருக்கலாம். இக்காலத்தில் இந்த சிவன் தளியல் மகாதேவர் ஞானதீஸ்வரர் என அழைக்கப்பட்டிருக்கிறார்.

## சிற்பங்கள்:

இக்கோயிலில் சிற்பங்கள் மிகக் குறைவாகவே உள்ளன. கோயில் கிழக்கு பிரகார முன்மண்டபத்தில் துவாரபாலகர்களில் சிற்பங்களும் அபயதாரர்களின் சிற்பங்களும் உள்ளன. முக மண்டபம் கிழக்கு ஆவுடையார் சன்னதி எதிரே தூண்களில் யானை சிற்பம் உள்ளது. சிவலிங்கத்துக்கு பசு பால் சொரிதல், இராமன், சாஸ்தா, கிருஷ்ணன் சிற்பங்கள் உள்ளன. ஒரு தூணில் வீரன் வில் வளைத்து நிற்கிறான். எதிரே மனித தலையுடைய புலி நிற்கிறது. அதன் முதுகில் அம்பு சொருகி இருக்கிறது. இச் சிற்பம் சாஸ்தா புலியை வேட்டையாடிய கதையாக இருக்கலாம்.

நந்தி மண்டபத்தின் வடக்கே நடராஜர், சோமசுந்தரர், சிவகாமி, சாஸ்தா, மாணிக்கவாசகர் ஆகியோரின் செப்புப் படிமங்கள் உள்ளன. மாணிக்கவாசகர் கையில் ஏடு ஏந்தி இருக்கிறார். இதே பக்கத்தூணில் கங்காளநாதரின் சிறிய அளவிலான சிற்பம் உள்ளது.

## பூஜை விவரம்

காலை 5.30 மணிக்கு உஷ பூஜை

காலை 10.00 மணிக்கு உச்சகால பூஜை

மாலை 6.30 மணிக்கு சாயராட்சை பூஜை

இரவு 7.30 மணிக்கு அர்த்தசாமபூஜை

இரவு 8.00 மணிக்கு திருநடை சார்த்துதல்.

## விழா:

மார்கழி மாதம் திருவாதிரையில் பத்தாம் திருவிழா வரும்படி முதல் நாள் திருவிழா ஆரம்பமாகும். கொடிமரம் இல்லை. முதல் நாளில் முளையிடுதல் சடங்கு பிரதானம். பத்து நாட்களிலும் மாணிக்கவாசகர் ஸ்ரீ பலியில் கொண்டு செல்லப்படுகிறார். தை மாதம் உத்திர நட்சத்திரத்தில் திருக்கல்யாண விழா நடக்கிறது.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 232420.



# 7. அருள்மிகு அகஸ்தீஸ்வரமுடைய நயினார் திருக்கோயில்

### அகஸ்தீஸ்வரம், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | அகஸ்தியமுடைய நயினார், அகஸ்தீஸ்வரர் |
| இறைவன் | – | அறம் வளர்த்த அம்மன் |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |

## அமைவிடம்

நாகர்கோவிலிருந்து கன்னியாகுமரி செல்லும் சாலையில் கொட்டாரம் என்னும் ஊரிலிருந்து அகஸ்தீஸ்வரம் செல்லும் சாலையில் வடுகன்பற்று என்ற சிறிய கிராமத்தில் இக்கோயில் உள்ளது. நாகர்கோவிலிருந்து 16 கி.மீ தொலைவில் அமைந்தது.

## தலபுராணம்:

கைலாயத்தில் பரமசிவனுக்கும், பார்வதிக்கும் திருமணம் நடந்தபோது பூலோகவாசிகள் கைலாயம் சென்றனர். அதனால் கைலாயம் சமமின்றி தாழ்ந்தது. அப்போது சிவன் அகஸ்தியரிடம் தெற்கே செல்வாய், பொதிகை மலையில் அமர்வாய் என்றார். அகத்தியரும் அப்படியே செய்தார். சிவனுக்குத் திருமணம் முடிந்து

கைலாயத்தில் இருந்தவர்கள் எல்லோரும் சென்றபின் அகத்தியர் தனியே ஓர் இடத்திற்குச் சென்று தியானத்தில் அமர்ந்தார். அவர் அப்படி இருந்த இடம் அகஸ்தீஸ்வரம் ஆயிற்று. இதனால் இங்குள்ள சிவன் அகத்தியர் பெயரால் வழங்கப்பட்டார்.

மதுரை பாண்டியன் ஒருவர் கன்னியாகுமரி பகவதியைத் தரிசிக்க வந்தான். தரிசனம் முடிந்தபின் பாண்டியன் கோயிலில் அமர்ந்து கொண்டிருந்தபோது அவனது குதிரை தறி கெட்டு ஓடியது. காவலர்கள் குதிரையைப் பிடிக்கச் சென்றனர். அரசன் வேறு ஒரு குதிரை மேல் ஏறி தவறிய குதிரையைக் காணச் சென்றான். ஒரு காட்டுப்பகுதியில் குதிரை நிற்பதைக் கண்டான். குதிரையின் வலது, இடது என இரு பக்கங்களிலும் நிழல் விழுவதைக் கண்டான். அக்காட்சி அதிசயமாக இருந்தது. ஜோதிடரிடம் அதற்கு காரணம் கேட்டார். அவர்கள் அகத்தியருக்கு சிவனும், பார்வதியும் திருமண கோலத்தில் காட்சி கொடுத்த இடம் அது என்றார்கள். அரசனும் அந்த இடத்தின் பெருமை அறிந்து அங்கே ஒரு கோயில் கட்டினான். அந்த கோயில் வடுகன்பற்று கோயில் என்பதும் ஒரு கதை.

## கோயில் அமைப்பு:

இந்தச் சிவன் கோயிலில் திருமாலுக்குத் தனி சன்னதி உண்டு. சிவன் கோயில் கருவறை, அந்தராளம், அர்த்த மண்டபம், மகா மண்டபம் என அமைப்புடையது. கருவறை எதிரே நந்தி உண்டு. திருமால் கோயிலும் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் என்ற அமைப்புடையது. இக்கோயில் கட்டுமானம் பற்றிய செய்திகளைக் கல்வெட்டுகள் வழியாகவும், கட்டுமான அமைப்பின் வழியாகவும் ஊகிக்க முடிகிறது. இக்கோயில் கி.பி.12ஆம் நூற்றாண்டில் இருந்து 17ஆம் நூற்றாண்டிற்கு உள்ள காலக்கட்டத்தில் கட்டப்பட்டது. கி.பி.1127 ஆம் ஆண்டு கல்வெட்டு உடையவர்மன் ஸ்ரீ வல்லவதேவன் என்ற பாண்டிய மன்னன் இக்கோவிலைக் கட்டியது பற்றிக் கூறும்.

## மூலவர்:

மூலவர் லிங்க வடிவினர், கல் படிமம், எதிரே நந்தி. திருமால் தனிக்கருவறையில் உள்ளார். நின்ற கோலம்

நான்கு கைகள், இரண்டு கைகளில் சங்கு, சக்கரம் பிற அபய முத்திரைகள். இரு மருங்கிலும் ஸ்ரீ தேவி, பூதேவி. இங்கே திருமால் அழகியமணவாளப் பெருமாள் எனப்படுகிறார்.

## பரிவார தெய்வங்கள்:

மூலவர் சிவனைத் தவிர்த்து தேவியான அறம் வளர்த்த அம்மை, மணவாளப்பெருமாள், விநாயகர், முருகர், அகஸ்தியர், சாஸ்தா மற்றும் நாகர் ஆகியோர் பரிவார தெய்வங்களாக உள்ளனர்.

## பூஜை விவரம்

காலை 6.00 மணிக்கு உஷ பூஜை

காலை 10.00 மணிக்கு உச்சகால பூஜை

மாலை 6.30 மணிக்கு சாயராட்சை தீபாராதனை

இரவு 7.30 மணிக்கு அர்த்தசாம பூஜை



தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 246223.



# 8. அருள்மிகு கிருஷ்ணசுவாமி திருக்கோயில்

## நாகர்கோவில், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பாலகிருஷ்ணன் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | ஏகதள விமானம் |

### அமைவிடம்

இத்திருக்கோயில் நாகர்கோவில் நகரில் கிருஷ்ணன்கோவில் என்ற இடத்தில் அமைந்துள்ளது. வடசேரி கிறிஸ்டோபர் பேருந்து நிலையத்திலிருந்து பஸ் வசதி உண்டு. இங்கிருந்து அரை கி.மீ தூரம்; ஆட்டோவில் செல்லலாம். கோயில் வடக்கே தெப்பக்குளமும், கிழக்கே பெரிய ரதவீதியும் உண்டு. வாகனத்தில் செல்பவர்கள் கோயில் முகப்பு வரை செல்லலாம். வாகனம் நிறுத்த வசதி உண்டு.

### தலபுராணம்:

ஸ்ரீரங்கம் பெருமாள் கோயில் பூசாரி ஒருவர் தென் திருவிதாங்கூருக்கு வந்தார். அப்போது அவர் திருக்குறுங்

குடியிலும், கோட்டாற்றிலும் கொஞ்சம் தங்கி விட்டு திருவனந்தபுரத்திற்கு சென்று அனந்தசயனனாய் இருந்தார் என்ற கதை இக்கோயிலுடன் தொடர்புபடுத்தப்படுகிறது.

## கோயில் அமைப்பு:

கிருஷ்ணன்கோயில் பேராலேயே இப்பகுதியின் பெயரும் அமைகிறது. நாகர்கோவிலின் ஒரு பகுதியான இந்த இடம் ஒரு கிராமத்தின் அமைப்புடையது. கோயிலின் வடக்கே தெப்பக் குளமும் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ரத வீதிகளும் உடையது. நான்கு வீதிகளின் நடுவே கோயில் இருக்கிறது. இக்கோயிலுக்கு என்று சுவாமிதேர் உண்டு. இத்தேர் வலம் வருவதால் வீதிகள் திட்டமிட்டு உருவாக்கப்பட்டவையாக உள்ளன.

இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், வாத்திய மண்டபம், முக மண்டபம், பலிபீடம், கொடி மரம் , விமானம், திறந்த வெளிப்பிரகாரம், மேல்கூரை உள்ள உட்பிரகாரம் முற்றிலும் கருங்கல்லால் ஆன பெரிய மதில் என அமைந்தது. இக்கோயிலின் முன்மண்டபம். இதன் அமைப்பு கேரளபாணி அமைப்பு. அண்மையில் நடந்த குடமுழுக்கு விழாவின் போது இந்த அமைப்பு மாறி விட்டது.

முன் மண்டபத்தை அடுத்து கிழக்கு பிரகாரமும், முகமண்டபமும், இம்மண்டபத்தில் கொடிமரமும் உள்ளது. முகமண்டபத்தில் உள்ள ஒரு கல்வெட்டு இக்கோயில் கொடிமரம் 1770 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 28ம் தேதி நிறுவப்பட்டது என்று கூறுகிறது. முகமண்டபத்தில் கோயில் மரவாகனங்கள் உள்ளன. திருவிழா காலங்களில் இங்கே இவை அலங்கரிக்கப் படுகின்றன. முகப்பு மண்டபத்தை அடுத்திருக்கும் வாத்திய மண்டபத்தின் வாசலில் துவாரபாலகர்கள் உள்ளனர். இவ்வாசலின் மரவேலைப்பாடு கோபுர அமைப்புடையது. திருவிதாங்கூர் அரசர் ஸ்ரீமூலந்திருநாள் காலத்தில் செய்யப்பட்டது.

வாத்திய மண்டபத்தை அடுத்து இருக்கும் மண்டபத்தில் நடுவழிப்பாதையும், இருபுறம் திண்ணைகளும் உள்ளன.

இந்த மண்டபத்தின் தென்புறம் கோயில் மடப்பள்ளியும் வடபுறம் கிணறும் உள்ளன. இந்த கிணறு 1460ல் ஆதீத்யவர்மன் என்ற வேணாட்டு அரசன் காலத்தில் வெட்டப் பட்டது. இதை ஒரு கல்வெட்டு குறிப்பிடும்.

கருவறையைச் சுற்றிய பிரகாரம் விசாலாமானது. இது கல்மண்டபம் ஆகும். இதில் சுற்றிலும் 26 தூண்களும், திண்ணையும் உண்டு. கருவறை சுவர் சோழர்பாணி கட்டுமானதும். சுவரில் போலி வாசல் உண்டு. உட்பிரகாரத்தில் பரிவார தெய்வக் கோயில்கள் உள்ளன.

கருவறை இரண்டு அறைகளைக் கொண்ட பழைய கட்டு மானம் ஆகும். கருவறைக்கு முன் சோபனப்படி உள்ள சிறு மண்டபம் உண்டு. கருவறை விமானம் சுதையால் ஆனது. ஒரு கலசம் உடையது. ஏகதள விமானம். இதன் தெற்கில் தட்சிணா மூர்த்தி; மேற்கில் சுகாசனத்தில் அமர்ந்த யோகநரசிம்மர், கிழக்கில் யானை மேல் இந்திரன். விமானம் வேலைப்பாடு உடையது. 16ம் நூற்றாண்டு பாணி.

## கருவறை மூலவர்:

கருவறையில் பாலகிருஷ்ணன் நின்ற கோலத்துடன் உள்ளார். 30 செ.மீ உயரம் உடையது. இரண்டு கைகளிலும் வெண்ணெய் இருப்பதாக காட்டப்பட்டுள்ளது. கால்கள் சற்று முன் வளைந்தும் இரு கைகளை முன் நீட்டியும் கேசப்பந்துத்துடன் இருப்பது. கல்படிமம். கருவறையில் சக்காரத்தாழ்வாரும் கிருஷ்ணனின் வெள்ளிப்படிமமும் உள்ளன.

## பரிவார தெய்வங்கள்:

தெற்கு பிரகாரம் தென்மேற்கில் விநாயகர் கோயில் உள்ளது. இது சமீபத்தில் புதுப்பிக்கப்பட்டது. வடமேற்கில் பக்கத்தில் உள்ள சாஸ்தா கோயிலும் புதிய வடிவம் பெற்றது. கருட மண்டபம் வடபுறம் திண்ணையில் இருக்கும் சிறிய கோயிலில் நம்மாழ்வார், பெரியாழ்வார், விஸ்வசேனர் ஆகியோர் உள்ளனர். இவை கல் படிமங்கள். அர்த்தமண்டபம் வடபுறக் கிணறு அருகே சிவலிங்கம்

உள்ளது. இது 1460ல் நிறுவப்பட்டது. உட்பிரகாரத்தின் வடமேற்கு பூதத்தான் கோயில் விழாக்கால படிமங்களின் கோயில்களும் உள்ளன. இங்கு இராஜகோபாலன், ஸ்ரீதேவி, தேவி பால கிருஷ்ணன், ஆண்டாள் ஆகியோர் உள்ளனர். இங்குள்ள கிருஷ்ணனின் செம்பு விக்கிரகம் மூலவர் படிவத்தைப் போன்றது. ஆண்டாள் அமர்ந்த கோலத்துடன் இருக்கிறாள். கழுத்தில் தாலி தேசபந்தம்; கை சின்முத்திரை.

இக்கோயிலுக்கு என்று சுவாமிதேர் ஒன்றும், தெப்பக்குளமும் உண்டு.

## சிற்பங்கள்:

கிழக்கு பிரகாரத்தையடுத்து இருக்கும் முகமண்டபத்தின் தூண்களில் சிற்பங்கள் உள்ளன. இதற்கு தெற்கு தூண் ஒன்றில் அஞ்சலி ஹஸ்த அரசனின் சிற்பம் உள்ளது. இது கோயில் அர்த்தமண்டபம் கட்டிய ஆதித்யவர்மனாக இருக்கலாம். வடபுற தூணில் துப்பாக்கி ஏந்திய வீரனின் சிற்பம் உள்ளது. அதனால் 18ம் நூற்றாண்டுக்கு பின்னர் இம்மண்டபம் கட்டப்பட்டிருக்கலாம். இம்மண்டபத்தின் தென்புறம் நந்தி சிற்பம் உள்ளது. மாட்டின் முகம்; தலையில் நீண்ட இரு கொம்புகள் மனித உடம்பு இரண்டு கைகள், மாட்டின் கால்கள் இப்படியொரு சிற்பம் குமரி மாவட்டத்தில் வேறு கோயில்களில் இல்லை.

இந்த மண்டபத்தில் துவாரபாலகர் சிற்பங்கள் உள்ளன. சங்கு சக்கரம் ஏந்தி விஷ்ணு அடையாளத்துடன் நீண்ட கதாயுதம், கிரீடாமகுடம், பத்ரகுண்டலம் அணிந்த துவாரகபாலகர்கள் சிற்ப சாத்திரப்படி இவர்களை ஜெயவிஜயா எனலாம். கருட மண்டபத்து தூண்களில் நம்மாழ்வார், நடனம் ஆடும் பெண், அடியவர், அஞ்சலி ஹஸ்த அரசர், அனுமன் போன்றோர் உள்ளனர்.

## கல்வெட்டுகள்:

இக்கோயிலில் நான்கு கல்வெட்டுகள் உள்ளன. இவை 1372, 1463, 1480, 1769 ஆம் ஆண்டினவை. எல்லாம் தமிழ் வடிவம்.

கிரந்தக் கலப்புடையவை. ஒரு கல்வெட்டில் வேணாட்டு அரசரான செண்பக ஆதித்தவர்மனின் பெயர் வருகிறது (1420) 1769 ஆம் ஆண்டு கல்வெட்டு குளத்தூர் என்ற ஊரில் கணபதி என்பவர் 1976 சித்திரை மாதம் 18 திங்கள் கிழமை கொடிமரம் பிரதிஷ்டை செய்ததைக் கூறும். பிற நிபந்தக் கல்வெட்டுகள்.

1460 ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயில் கிணற்றை வேணாட்டு அரசர் செண்பக ஆதித்தியவர்மன் என்பவர் பிரதிஷ்டை செய்ததை கூறும். 1403 ஆம் ஆண்டு கல்வெட்டு முக்கியமானது.

இக்கல்வெட்டு வடநாட்டு பிராமணர் ஒருவரின் நிபந்தம் பற்றிக் கூறுகிறது. இந்த பிராமணர் கங்கை ஆற்றிற்கும் யமுனை ஆற்றிற்கும் இடைப்பட்ட பிரதேசமான அந்தர்வேதி ராஜியத்தைச் சேர்ந்தவர். இவர் தேசாந்தரி. இந்த தீர்க்கப்பட்டர் கோயில் மூலவருக்கும் பிராமண போஜினத்திற்கும் நிபந்தம் கொடுத்துள்ளார். இக்கல்வெட்டு இவ்வூரை ஆதித்தியவர்மன் சதுர்வேதி மங்கலம் என்றும், கோயில் மூலவரை மூலநாராண விண்ணகர எம்பெருமாள் என்றும் கூறும். வேணாட்டு அரசனான ஆதித்திய வரகுணன் ( 1366 – 1385 ) இக்கோயில் கட்டுமானத்தில் பெரும் பங்கு வகித்திருக்க வேண்டும். இது குறித்து வேறு கல்வெட்டுகளில் சான்று உண்டு. இவன் வைணவத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவன். அதோடு இக்கோயில் இருக்கும் இடம் வேநாடு, திருவிதாங்கூர் அரசர்களுக்கு மிகவும் பிடித்த இடம்.

திருவிதாங்கூர் அரசரான ஸ்ரீமூலந்திருநாள் (1885 – 1924) இக்கோயிலுக்கு அடிக்கடி வந்திருக்கிறார். இவரது முதல் மனைவி இந்த ஊரினள். இவர் இங்கே தங்குவதற்கு என்றே ஒரு அரண்மனையைக் கட்டி இருக்கிறார். இப்போதும் இந்த அரண்மனை உள்ளது.

## பூஜை விவரம்

காலை 5.00 மணிக்கு உஷ பூஜை

காலை 6.30 மணிக்கு தீபாராதனை

காலை 11.30 மணிக்கு உச்சகால பூஜை

மாலை 6.30 மணிக்கு சாயராட்சை

மாலை 7.45 மணிக்கு அர்த்தசாம பூஜை

இக்கோயில் தற்போது தாந்திரீக ஆகமத்தைப் பின்பற்றப் படுகிறது. 19 ஆம் நூற்றாண்டில் இக்கோயிலில் தென்கலை ஐயங்காரர்கள் பூஜை செய்தனர். ஸ்ரீமூலந்திருநாள் அரசனின் இறுதிக் காலத்தில் துளு பிராமணர் கோயிலில் பூசகராயினர். அப்போது கோயில் ஆகமம் மாறியது.

## விழா:

இக்கோயிலில் சித்திரை மாதம் 10 நாட்கள் திருவிழா நடைபெறும். 9ஆம் நாள் தேரோட்டம் 10ஆம் நாள் தெப்பம், சித்திரை விசு, புரட்டாசி சனிக்கிழமை, கார்த்திகை தீபம் மற்றும் ஆவணி கிருஷ்ண ஜெயந்தி போன்ற நாட்களிலும் விசேசம் உண்டு.



தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 232420.



# 9. அருள்மிகு மதுசூதனப்பெருமாள் திருக்கோயில்

## பறக்கை, அகஸ்தீஸ்வரம் வட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மதுசூதனப்பெருமாள் |
| இறைவி | – | ஸ்ரீ தேவி, பூதேவி |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | ஏகதளம் |

### அமைவிடம்

நாகர்கோவிலில் இருந்து மணக்குடி செல்லும் சாலையில் 5 கி.மீ தொலைவில் இருக்கும் பறக்கை என்ற ஊரின் நடுவில் உள்ளது. இக்கோயிலில் முக்கிய சாலையிலிருந்து ஒன்றரை கிலோ மீட்டர் நடந்து கோயிலுக்குச் செல்லவேண்டும். நாகர்கோவிலிலேயே தங்கலாம். பறக்கை ஊரில் தங்கும் வசதி இல்லை.

### தலபுராணம்:

பறக்கை மதுசூதனர் கோயிலைப் பற்றிய தலபுராணம் எழுதி வைக்கப்படவில்லை. என்றாலும் சுசீந்திரம் தலபுராணத்திலும் கன்னியாகுமரி தலபுராணத்திலும் பறக்கை தலம் பற்றிய செய்திகள் உள்ளன. சுசீந்திரம் கோயிலைப்பற்றிய தலபுராணக்கதை

கி.பி.15–ஆம் நூற்றாண்டினது. அதனால் அதே காலத்தில் பறக்கை தலபுராணமும் உருவாகியிருக்கலாம்.

பறக்கைத் தலபுராணக்கதை அகத்தியர் கருடனைத் தொழுத பகுதியில் வருகிறது. அகத்தியர் ஞானகான வனத்தில் (சுசீந்திரம்) தாணுமாலயனை வணங்க வந்தார். அப்போது அசரீரி வில்வம் நிறைந்த வேதவனம் (பறக்கை) ஒன்று அருகே உள்ளது. அங்கே மதுசூதனன் ஸ்ரீதேவி பூதேவியுடன் உறைகின்றான். அவனையும் வணங்கு என்றது. அகத்தியர் பறக்கை சென்று மதுசூதனனை வணங்கி தேவகாந்தார ராகத்தில் வாழ்த்தினார். அகத்தியரின் வாழ்த்தொலி இந்திரனுக்குக் கேட்டது. அவனும் பறக்கை வந்து மதுசூதனனை வழிபட்டான்.

அந்தச் சமயத்தில், விஷ்ணு ஒளிவடிவாய் பூதேவி, ஸ்ரீதேவியுடன் இந்திரனுக்குக் காட்சியருளினார். இந்திரன் ''சுசீந்திரம் தலத்தில் இருப்பவனும் பறக்கை தலத்தில் இருப்பவனும் ஒன்று'' என்று சொல்லி வணங்கினான்.

இந்த கதையுடன் பறக்கை மதுசூதனனைக் கருடன் தொழுத வரலாறும் சுசீந்திரம் தலபுராணத்தில் வருகிறது. இதன்படி கருடன் தன் விமோசனத்திற்குப் பறக்கை மதுசூதனனைத் தொழுதான் என்பது கதை, பறக்கை கருடன் வழிபட்ட தலம் என்ற வழக்காறும் உண்டு.

## கோயில் அமைப்பு:

பறக்கை கோயில் 62 செண்ட் பரப்புடைய இடத்தில் உள்ளது. இக்கோயில் 2 பிரகாரங்களையும் 20 அடி உயரமுடைய உயர்ந்த மதிலும் கொண்டது, கோயிலின் உயரமான வாசலை அடுத்து மகாமண்டபம், வெளிப்பிரகாரம் உள்ளன. கிழக்கு நோக்கிய இக்கோயிலின் கிழக்கு மகா மண்டபத்தில் கொடிமரம் உள்ளது. 1956–ல் நிறுவப்பட்ட இக்கொடிமரம் செம்புத்தகட்டால் வேயப்பட்டு, தங்க முலாம் பூசப்பட்டது.

கொடிமரத்தை அடுத்து ஸ்ரீபலி பீடம். இது செண்பகராமன் மண்டபத்தில் உள்ளது. இதை அடுத்து மகாமண்டபம் 18 தூண்கள் கொண்ட பெரிய மண்டபம். இம்மண்டபத்தை அடுத்து ஸ்ரீகோயில்

உள்ளது. இது கருவறை அர்த்தமண்டபம் என அமைந்தது. கருவறையைச் சுற்றி உட்பிரகாரம் உண்டு.

கருவறை உபபீடம், பத்மபாதம், விருத்த குமுதம், பட்டி வேதிகை எனும் இலக்கணப்படி அமைந்தது. தேவகோஷ்டத்தில் பிற்காலப் பாண்டியர் பாணி அரைத்தூண்கள். தேவகோஷ்டம் மேல் காணக்கூடு அமைப்பு; இந்த அமைப்பு 12–ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது.

## கருவறை மூலவர்:

கருவறைத் தெய்வம் மதுசூதனப்பெருமாள். நின்றகோலக் கல்படிமம். இரு மருங்கும் பூதேவி ஸ்ரீதேவி; மூலவருக்கு 4 கரங்கள் சங்கு, சக்கரம் அபய ஹஸ்தம். கருவறையில் விழாக்கால வெள்ளிப்படிமம் ஒன்றும் பஞ்சலோகப் படிமம் ஒன்றும் உள்ளன.

## பரிவார தெய்வங்கள்:

புன்னைநாகர் தெற்கு – வெளிப்பிரகாரம் கிழக்கு நோக்கியது. நாகரின் மேல் சங்கு, சக்கர அபயமுத்திரையுடன் கூடிய பெருமாள். அருகே குதிரை உண்டு.

கொன்றை மரநாகர் – வெளிப்பிரகாரத்தில் கொன்றை மரத்தின் கீழ் ஐந்து தலை நாகர்கள். நாகரின் உடலில் பெருமாள் நின்றகோலம்.

சிதம்பரேஸ்வரர் – வடக்கு வெளிப்பிரகாரத்தில் வட கிழக்கில் வடக்கு தெற்காக சிதம்பரேஸ்வரர் கோயில். 1964–ல் கட்டப்பட்ட கற்கோயில் – 16 தூண்கள் கொண்ட கல்மண்டபம். இதன் வடக்கு ஓரத்தில் கருவறையில் நடராஜர். சிவகாமி பஞ்சலோகம், படிமங்கள் உள்ளன.

கருடன் – மகாமண்டபம் தென்மேற்கில் கருடாழ்வார் கோயில். இதில் ஐந்தாம் திருவிழாவில் உலாவரும் சக்தி கருடனும் நின்றகோலக் கல்படிமமும் உள்ளன.

பூதத்தான் – உட்பிரகாரம் வடக்கு பகுதியில் தனிக்கோயில் கிழக்கு நோக்கியது.

மங்கை மணவாளன் – மகாமண்டபம் வடமேற்கில் உள்ள கோயில். இதில் விழாக்களில் வாகனங்களில் வலம் வரும் படிமங்கள் உள்ளன. கிழக்கு பார்த்த இக்கோயிலில் மதுசூதனன் பாலகிருஷ்ணன், ஸ்ரீசக்கரம், ஸ்ரீதேவி, பூதேவி, பார்த்தசாரதி ஆகிய தெய்வங்கள் உள்ளன. மதுசூதனன் மங்கை மணவாளன் எனவும் அழைக்கப்படுகிறார்.

இக்கோயிலில் உள்ள பாலகிருஷ்ணனின் பஞ்சலோகப் படிமம் 1610–ல் வார்க்கப்பட்டது. இதைக் கொடுத்தவர் பறக்கை ஊர் சார்ந்த சாவித்ரி என்பவர். இக்கோயிலில் உள்ள பார்த்த சாரதியைக் கோயில் ஆவணம் திருமங்கை ஆழ்வார் எனக் கூறும்.

மகாமண்டபம் வடக்கில், தெற்கு பார்த்த நிலையில் கைலாசநாதர் கோயில். இங்கு கைலாசநாதரும் பார்வதியும் உள்ளனர். இவை பஞ்சலோகப் படிமங்கள்.

கருவறை அர்த்த மண்டபத்தில் வடக்கில் தெற்கு நோக்கி நிர்மால்யதேவர் இருக்கிறார். நான்கு கைகள், சங்கு சக்கரம் கதை அபய முத்திரை. மூலவருக்கு போட்ட மாலையைக் கழற்றி நிர்மால்ய தேவருக்குப் போடும் மரபு இக்கோயிலில் உள்ளது.

## சிற்பங்கள்:

இக்கோயிலில் முகமண்டபம், மகாமண்டபம் செண்பகராமன் மண்டபம் ஆகியவற்றில் தூண்களில் சிற்பங்கள் உள்ளன. பாகவதம் தொடர்பான சிற்பங்களும் இராமாயணச் சிற்பங்களும் மகாமண்டபத்தில் உள்ளன. பாலகிருஷ்ணனின் பல்வேறு வடிவங்களில் உள்ள நர்த்தனச் சிற்பங்கள் முகமண்டபத்திலும் உள்ளன. யோக நரசிம்மர், திருவிக்கிரமன், கலப்பையுடன் கூடிய பலராமன், வரதராஜப்பெருமாள் ஆகியோரின் சிற்பங்கள் மகாமண்டபம் வடபகுதியில் உள்ளன. இம்மண்டபம் மேல்விதானம் பக்கவாட்டுச் சுவர்களில் 60 பாழிகளிலும், இராமாயணக்கதையை முழுதும் கூறும் 74 சிற்பங்கள் உள்ளன. சிவன் தொடர்பான சிற்பங்கள் குறைவாகவே இங்கு உள்ளன.

இதிகாச புராணச் சார்பு அல்லாத சமூகச் சார்பு சிற்பங்களும் மகாமண்டபத்தில் காணப்படுகின்றன. கேரளப் பாணியில் தலை கொண்டையுடன் திரிபங்க நிலையிலும், குளிக்கும் பெண், ஒப்பனை செய்யும் பெண் என பல வகை சிற்பங்கள் இங்கே உள்ளன.

## கல்வெட்டுக்கள், வரலாறு:

பறக்கை ஊர் வாய்மொழி வழக்காறுகளிலும், தலபுராணங்களிலும் பட்சிராஜபுரம், வேதவனம், வில்வவனம் என்றும் கல்வெட்டுகளில் பிரம்மதேயக் கிழார்மங்கலம், அபிதானமேரு சதுர்வேதி மங்கலம் என்றும் கூறப்படுகிறது.

பறக்கையில் கிடைத்த சடையன்மாறனின் 10–ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு பிரம்மதேயமான கிழார்மங்கலம் எனக் கூறும். இதனால் இவ்வூர் சதுர்வேதி மங்கல கிராமம் ஆக இருந்தது எனத் தெரிகிறது. பறக்கை என்ற பெயரை 1558–ஆம் ஆண்டுக் கல்வெட்டு முதலில் கூறுகிறது.

பறக்கை ஊரில் 22 கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவற்றில் 18 கல்வெட்டுகள் மதுசூதனப்பெருமாள் கோயிலில் உள்ளது. பிற 4 கல்வெட்டுகளும் இவ்வூர் பெருமாள் கோவிலைக் குறிப்பிடுகின்றன. இக்கல்வெட்டுகள் வட்டெழுத்து தமிழ் சமஸ்கிருதம் கலந்த கிரந்த வடிவம் அமைந்தவை.

இக்கல்வெட்டுகளின்படி இக்கோயில் 10–ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்று தெரிகிறது. கருவறையும் அர்த்தமண்டபம் இக்காலத்தில் கட்டப்பட்டிருக்கலாம். இதற்கு முன்பே இக்கோயில் வழிபடு கோயிலாக இருந்திருக்க வேண்டும். மகாமண்டபம் 16–ஆம் நூற்றாண்டிலும், செண்பகராமன் மண்டபம் இதே காலத்திலும் கட்டப்பட்டிருக்கலாம்.

கோயிலின் சுற்றுச்சுவர் 1575–க்கு முன்பே கட்டப்பட்டிருக்க வேண்டும். ஒரு கல்வெட்டு உயர்ந்த மதிலுக்குள் உள்ள பிர காரத்தில் கூத்து நடந்ததைக் குறிப்பிடுகிறது. கல்வெட்டுகளில் பெரும்பாலானவை நிபந்தக்கல்வெட்டுகள். இக்கோயிலில்

கல்வெட்டுக்களில் 16, 17, 18–ஆம் நூற்றாண்டுகளில் கோயிலை நிர்வகித்த சபை பற்றியும், இச்சபையில் உறுப்பினர்களின் பெயரும் செய்திகள் உள்ளன.

## விழா / சிறப்பு விழா:

இக்கோயில் கல்வெட்டுகளில், சிறப்பு பூஜைகள் விழா குறித்த செய்திகள் உள்ளன. இக்கோயிலில் 1575 முதலே திருவோண விழா நடக்கிறது. ஓணவிழாவில் கோயில் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டன. இவ்விழாவில் கோயிலுக்குள் கூத்து ஒன்று நடந்தது. 1610–ஆம் ஆண்டு இக்கோயிலில் நடந்த கிருஷ்ண ஜெயந்தி விழா பற்றிக் குறிப்பிடுகிறது. இந்த விழாவில் கேடய வாகனத்தில் சுவாமி பவனி வருதல், தேங்காய் மூடியில் எண்ணெய் இட்டு அர்ச்சிய பூஜை செய்வது, பால கிருஷ்ணனை ஊஞ்சலில் வைத்து ஆட்டுவது ஆகிய நிகழ்ச்சிகள் நடந்தன. இந்த விழாவில் கருடவாகனத்தில் சுவாமி பவனி வந்தார். 1956–ல் இருந்து அனுமன் வாகனத்தில் பவனி வருகிறார்.

1610–லிருந்தே சித்திரை வசந்த விழா கொண்டாடப் படுகிறது. ஆடி மாத சுவாதி நட்சத்திரத்தில் சிறப்பு பூஜை நடந்ததை 200 ஆண்டுகளுக்கு முற்பட்ட கல்வெட்டு கூறும். ஏகாதசி விழாவில் இரவு முழுக்க விழித்திருப்பவர்களின் வசதிக்காக கோயில் முழுவதும் விளக்குகள் எரிக்க இலவசமாக எண்ணெய் கொடுத்தவர்களின் பெயர்களை ஒரு ஓலை ஆவணம் கூறும். 1921 வரை அத்தாள பூஜை முடிந்தபின் அஷ்டபதி ஓதும் வழக்கம் இருந்தது.

இப்போதும் கிருஷ்ணஜெயந்தி, வைகுண்ட ஏகாதசி, புரட்டாசி சனிக்கிழமை, ஆடி சுவாதி, கார்த்திகை பூஜைகளும் விழாக்களும் நடக்கின்றன.

கோயிலின் ஆண்டு திருவிழா பங்குனி மாதம் உத்திர நட்சத்திரம் 10–ஆம் நாள் வரும்படியாக அதற்கு முன் 9 நாட்களுக்கு முன் ஆரம்பமாகும். பத்து நாட்களில் 5–ஆம் நாள் கருடனின் கண் திறப்பு சடங்கு முக்கியமானது. 9–ஆம் நாளில் தேர் திருவிழாவும், பத்தாம் நாளில் தெப்பத் திருவிழாவும் நடக்கும்.

8–ஆம் நாள் திருவிழாவில் கோயில் தொடர்பான புராணக் கதையை நாடகப்படுத்திக் காட்டுவதுபோல் நடக்கிறது.

## பூஜை

காலை 5.00 மணிக்கு திருப்பள்ளி எழுச்சி

காலை 6.30 மணிக்கு உஷபூஜை

காலை 10.30 மணி உச்சகாலபூஜை

மாலை 6.30 மணிக்கு சாயரட்சை பூஜை

மாலை 7.30 மணிக்கு அத்தாள பூஜை

## சிறப்பு பிரசாதம்:

அமிர்தகலசம், இது நேர்ச்சைக்குரியதும் கூட. கருடனின் கையில் அமிர்தகலசப் பாத்திரம் இருக்கிறது என்ற புராணக்கதையுடன் இது தொடர்புடையது.



தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241270.



# 10. அருள்மிகு துவாரகை கிருஷ்ணன் திருக்கோயில்

### சுசீந்திரம், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | கிருஷ்ணன் |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு |
| விமானம் | – | நாகரம், சுதை |

## அமைவிடம்

நாகர்கோவிலில் கன்னியாகுமரி சாலையில், நாகர்கோவிலில் இருந்து 4 கி.மீ. தொலைவில் சுசீந்திரம் ஊர் பேருந்து நிறுத்ததிற்கு முன்பு, குமரி மாவட்ட திருக்கோயில்கள் தலைமை அலுவலகம் அருகே அமைந்துள்ளது இத்திருக்கோயில். சுசீந்திரம் பேருந்து நிறுத்தத்திலிருந்து 1/2 கி.மீ. தொலைவில் நடந்து வரலாம். சாலையை ஒட்டி பழையாறு செல்கிறது. சுசீந்திரம் தாணுமாலயன் கோயிலைத் தரிசித்துவிட்டு இங்கே வரலாம்.

## கோயில் அமைப்பு:

கோயில் கிழக்கு பார்த்தது. முக்கிய சாலையிலிருந்து படிவழி இறங்கி கோயிலுக்குச் செல்ல வேண்டும். கோயிலின் முன்

அண்மையில் கட்டப்பட்ட அரங்கு உண்டு, கோயில் முன்மண்டபம் ஒட்டுப்பணியால் ஆனது. சுற்றாலை மண்டபம் ஒரு பிரகாரம், நடுவில் ஸ்ரீகோயில், கருவறை, அர்த்தமண்டபம், சோபனப்படி, விமானம் என அமைந்தது.

## மூலவர்:

கருவறை சிறியது. கல்மண்டபம், மூலவர் கிருஷ்ணன் நின்ற கோலம், கல்வெட்டுக்களில் மூலவர் ஆழ்வார்/எம்பெருமான் எனப்படுகிறான். பரிவார தெய்வங்களாக விநாயகரும் சாஸ்தாவும் உள்ளனர்.

## கல்வெட்டுக்கள்:

இத்திருக்கோயிலில் 4 கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இவற்றின் வழி இக்கோயில் பழமைபானது என்று தெரிகிறது. சுசீந்திரம் தாணுமாலயன் கோயிலில் உள்ள 1208 ஆம் ஆண்டுக் கல்வெட்டு, கோவில் சபை இக்கோயிலுக்கு நித்திய பூசைக்குக் கொடுத்த பொருட்கள் பற்றிக் கூறும். இதனால் இக்காலத்தில் இது வழிபடு கோயிலாக இருந்தது தெரிகிறது.

துவாரகை கோயிலின் 1224–ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட விளக்கு நிபந்தத்தையும், 1228–ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயிலுக்கு இரண்டு குளங்கள் சொந்தமாக இருந்ததையும் கூறுகின்றன. இதனால் கோயிலின் கருவறை அர்த்தமண்டப பகுதிகள் 13–ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இருந்தது என்றும் அதற்கு முன் இக்கோயில் கட்டுமானம் நடந்தது என்றும் கருதலாம்.

## சிறப்பு :

கோயில் கருவறை அருகே உள்ள பாறையில் 1239–ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஆபூர்வமான ஒரு செய்தியைக் கூறுகிறது. இக்கோயிலில் வடதிருவிதாங்கூரைச் சேர்ந்த வேதவிற்பன்னரான ஸ்ரீகோவிந்த ப்ரஞ்ருபடாரர் ஸ்ரீகான இராமபகவான் என்ற ஞானி இருந்தார். இவரிடம் மாணவர்கள் வேதம் பயின்றனர். அவர்களும்

இக்கோயிலின் பக்கத்தில் தங்கியிருந்தனர். வேதம் கற்பித்த ஆசிரியருக்கும் மாணவர்களுக்கும் வேண்டிய வசதிகளைச் சுசீந்திரம் கோயில்சபை கவனித்துக்கொண்டது. ஒருவகையில் 13–ஆம் நூற்றாண்டில் இது வேதபாடசாலையாக இருந்தது என்று கொள்ளலாம்.

## பூஜை

காலை மணி 6.00 திருநடை திறப்பு

காலை மணி 6.30 பூஜை, அபிஷேகம்

காலை மணி 10.00 பூஜை.

மாலை மணி 5.00 திருநடை திறப்பு

மாலை மணி 6.30 பூஜை

மாலை மணி 8.00 பூஜை, நடை அடைப்பு

கிருஷ்ணஜெயந்தி விழா சிறப்பாக நடக்கிறது. புரட்டாசி மாத சனிக்கிழமை விஷேசமானது.





**கிருஷ்ணன்**

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241421.



# 11. அருள்மிகு பொலிந்துநின்றருளிய பெருமாள் திருக்கோயில்

## கோதைகிராமம், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பொலிந்துநின்றருளிய பெருமாள் |
| இறைவி | – | பூதேவி, ஸ்ரீதேவி |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | நாகரம் |
| தலவிருட்சம் | – | வில்வம் |

## அமைவிடம்

நாகர்கோவில், ஒழுகினசேரி பழையாற்று பாலத்தைக் கடந்ததும் தெற்கு பக்கம் செல்லும் சிறு சாலை வழி சென்றால் இக்கோயிலை அடையலாம். நாகர்கோவிலில் இருந்து 4 கி.மீ. தூரம். ஆட்டோவில் செல்லலாம். பேருந்து வசதி இல்லை.

## கோயில் அமைப்பு:

முகமண்டபம், அந்தராளம், கருவறை, ஒரு வெளிப்பிரகாரம், உயர்ந்த மதில் என அமைந்தது. இம்மண்பத்தில் கருடன் கிழக்கு பார்த்து நின்ற கோலமாய் உள்ளார். இது கருட மண்டபம் எனப்படுகிறது. விமானம் நாகரம், சுதை ஒரு கும்பம்.

## கருவறை மூலவர்:

மூலவர் பொலிந்து நின்ற பெருமாள் எனப்படுகிறார். நின்ற கோலம், சங்கு சக்கரம் அபய வரதஹஸ்தம், இருபுறமும் பூதேவி, ஸ்ரீதேவியர்.

## பரிவார தெய்வங்கள்:

முகப்பு மண்டபத்தில் தென்புறம் விநாயகரும் வடபுறம் சிவன், நாகர் என உள்ளனர். கருடன் விஸ்வசேனர். கருவறையில் பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவியர் , கிருஷ்ணர், இராமர் செப்புபடிமங்கள் உள்ளன.

## பூஜை

காலை 6.00 மணிக்கு பூஜை
காலை 7.30 மணிக்கு பூஜை
மாலை 6.00 மணிக்கு பூஜை
மாலை 7.30 மணிக்கு பூஜை

## விழா:

பெருமாள் தொடர்பான சிறப்பு விழாக்கள், கிருஷ்ணன் பிறப்பு, புரட்டாசி சனிக்கிழமை, வைகுண்ட ஏகாதசி சிறப்பு.

## கல்வெட்டுக்கள்:

இவ்வூர் சதுர்வேதி மங்கலம். இக்கோயிலில் ஒரு செப்பேடு கிடைத்துள்ளது. இக்கோயிலில் கிடைத்த ஒரு கல்வெட்டு **(1494)** வடநாட்டு பிராமணர் ஒருவர் இக்கோயிலுக்கு நிபந்தம் அளித்ததைக் கூறும். இவர் பெயர் கங்காதர பிரம்மச்சாரி. காஷ்மீர் பண்டா. இவர் நாடோடியாக திரிந்து பொருள் சேர்த்து கோயிலுக்கு நிபந்தம் கொடுத்துள்ளார்.

இக்கோயில் முகப்பு மண்டபத்தில் வில் வீரன், நடனமாடும் மங்கை என சில சிற்பங்கள் உள்ளன.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241270.



# 12. அருள்மிகு பொன்பொருந்தி நின்றருளியபிரான் பெருமாள் திருக்கோயில்

### நாகர்கோவில், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பொன்பொருந்தி நின்றருளிய பிரான் (விஷ்ணு) |
| இறைவி | – | பூதேவி, ஸ்ரீதேவி |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |
| விமானம் | – | ஏகதள விமானம் |

## அமைவிடம்

நாகர்கோவில் கோட்டார் வாகையடித்தெரு பகுதியில் இத்திருக்கோயில் உள்ளது. கோட்டாறு பறக்கை சந்திப்பில் இருந்து நாகர்கோவில் செல்லும் சாலையில் பட்டணம் வைத்தியர் வீதி வழி சென்று, இடதுபுறம் திரும்பிய சாலை வழி சென்று இக்கோயிலை அடையலாம். கோயிலின் எதிரே மக்கள் நடமாட்டம் உள்ள வீதி. நாகர்கோவில் பேருந்து நிலையத்திலிருந்து ஆட்டோவில் செல்லலாம். இக்கோயில் இருக்கும் இடம் ஏழகரம் எனப்படும். பெருமாள் ஏழகரம் பெருமாள் எனவே அழைக்கப்படுகிறார்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் கருவறை, அந்தராளம், அர்த்தமண்டபம், முகமண்டபம், உட்பிரகாரம், வெளிப்பிரகாரம் என அமைந்தது. கோயில் மூலவர் கிழக்கு பார்த்து இருக்கிறார். வெளிப்பிரகார அமைப்பில் புதிதாக கட்டப்பட்ட கோபுரம் உண்டு. கோயிலைச் சுற்றி உயரமான கல் மதிற்சுவர் உண்டு.

வெளிப்பிரகாரம் மரங்களும், செடிகளும் நிறைந்து, அழகான தோற்றத்துடன் உள்ளது. கோயில் அலுவலகம், வடக்கு பிரகாரத்தில் உள்ளது. அடுத்து இருக்கும் முகமண்டபம் 6 தூண்களை கொண்டது. இதை அடுத்து இருப்பது அர்த்த மண்டபம். இம்மண்டபத்தின் கருவறையை ஒட்டிய வடக்கு பக்கத்தில் விழாக்கால படிமங்கள் உள்ளன. கருவறை சிறியது. அந்தராளம் நீண்ட அமைப்புடையது.

கருவறையைச் சுற்றி உட்பிரகாரம் உண்டு. இது கல் மண்டபம். கருவறை சுவர் பிற்கால பாண்டியர் கட்டுமானப் பணியாகும். உட்பிரகாரத்திற்கும், கருவறைக்கும் நடுவின் மேல் கூரையில்லா சிறிய இடைவெளி உண்டு. இதை ஒரு சிறுபிரகாரம் ஆகவும் கருதலாம்.

## கருவறை:

கருவறை மூலவர் விஷ்ணு, பொன்பொருந்தி நின்றருளிய பிரான் எனப்படுகிறார். மூலவர் நின்ற கோலம். நான்கு கைகள்; சங்கு, சக்கரம், அபய வரத முத்திரை காட்டுவன. மூலவரின் இருபுறமும் ஸ்ரீதேவி, பூதேவியர் நின்றகோலம், இருவரும் நீலோர்பவ மலர் ஏந்தியவர்கள். ஒரு கை லோலா ஹஸ்தம், கல்படிமங்கள் நேர்த்தியான கலை நுட்பம் உடையவை.

## பரிவார தெய்வங்கள்:

வெளிப்பிரகாரம் தென்மேற்கு சாஸ்தாவின் கோயில். இதில் சாஸ்தா செண்டுடன் இருக்கிறார். வடமேற்கில் நாகர் சிற்பங்கள் பீடத்தில் உள்ளன. அர்த்தமண்டபத்தில் வடக்கு ஓரத்தில் கிழக்கு

நோக்கி விழாப்படிமங்கள் உள்ளன. விஷ்ணு, சங்கு சக்ர தாரியாய் அபய வரத ஹஸ்தத்துடன் உள்ளார். இருபுறமும் ஸ்ரீதேவி, பூதேவியர் உள்ளனர். பாலகிருஷ்ணன் அருகில் உள்ளார். இவை செப்புப்படிமங்கள் ஆகும்.

## கல்வெட்டுகள் / வரலாறு:

இக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை. கோயில் அமைப்பின் படி கருவறைப்பகுதி கி.பி.12–13ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம். பிரகார பகுதிகளும் முகமண்டபமும், 15 ஆம் நூற்றாண்டை சார்ந்தவை.

முகமண்டப தூண்களில் ஆதிசேஷர் மேல் அனந்த சயனம் கொண்ட திருமால், கருடன், முனிவர்கள், திருவிக்கிரமன், வாமன அவதாரம், ஜெயத்ரதனை வதம் செய்யும் கிருஷ்ணன் ஆகிய சிற்பங்கள் உள்ளன. இம்மண்டபத்தின் மேற்கு பக்க சுவரில் விதானத்தை ஒட்டிய பகுதியில் திருமால் ஸ்ரீதேவி, பூதேவி சகிதம் இருக்கிறார். இருபுறமும் அனுமனும், கருடனும் உள்ளனர். இச்சிற்பங்கள் மூலவரைப் போன்றவை. இதே மண்டபம் தென்புற தூண்களில் வாலியும், சுக்கிரீவனும் சண்டை செய்வதும் அருகே இராமன் நிற்பதுமான காட்சி சிற்பங்கள் உள்ளன. அனுமன் சஞ்சீவி பர்வதத்தைத் தூக்கும் காட்சி, விஷ்ணு சிற்பங்கள் உள்ளன.

உட்பிரகார தூண்களில் வாள்வீரன் கொக்கரக்கனை வதை செய்யும் சிற்பங்களும், வடக்கு பிரகார தூணில் பசு பதீஸ்வரர் பார்வதி சகிதம் இருக்கும் காட்சி சிற்பமும் உள்ளன.

கிழக்கு வெளிப்பிரகாரத்தில் கோயில் நுழையும் பகுதியில் அனுமனும் கருடனும் துவாரபாலகர் போல் சிற்பமாய் உள்ளன. இக்கோயிலில் பாகவத ராமாயண சிற்பங்களும், சாஸ்தாவின் சிற்பங்களுமே அதிக அளவில் காணப்படுகின்றன.

இக்கோயில் குறித்த வரலாற்றுக் கதை உண்டு. திருவிதாங்கூரில் முதல் அரசரான மார்த்தாண்ட வர்மா ( 1728 –

1759) எட்டு வீட்டு பிள்ளைமார்க்கு அஞ்சி காட்டில் அஞ்ஞானவாசம் செய்த போது இக்கோயிலில் மறைந்திருந்தார் என்ற ஒரு செய்தி இன்றும் வழங்குகிறது.

## பூஜை விவரம்

காலை 5.30 மணிக்கு நடை திறப்பு
காலை 6.30 மணிக்கு தீபாராதனை
காலை 10.00 மணிக்கு திருநடை சார்த்துதல்
மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு சாயராட்சை
இரவு 7.30மணிக்கு திருநடை சார்த்துதல்

## விழா:

இக்கோயிலில் ஆவணி மாதம் உத்திர நட்சத்திரத்தில் கொடியேறி பத்து நாட்கள் திருவிழா நடைபெறும். திருவோண நட்சத்திரத்தன்று ஆறாட்டு நடைபெறும். ஒன்பதாம் நாள் தேரோட்டம். மிகச்சிறிய தேர் உள்ளது. பத்தாம் நாள் ஒழுகினசேரி ஆற்றிற்கு ஆறாட்டிற்கு செல்லும். இக்கோயிலில் விஷ்ணு தொடர்பான சில விழாக்களும் நடைபெறுகின்றன. கோயில் நைவேத்யத்தில் சர்க்கரை பொங்கல் குறிப்பிடத்தகுந்தது.

## சிறப்பு:

இக்கோயில் மக்கள் அதிகம் வாழும் பகுதியில் இருப்பதால் பக்தர்கள் அதிகம் வருகின்றனர். 2009ல் இக்கோயிலில் குட முழுக்கு நடைபெற்றுள்ளது.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241270.



# 13. அருள்மிகு பெருமாள் திருக்கோயில்

## புரவசேரி, அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பெருமாள் |
| இறைவி | – | பூதேவி, ஸ்ரீதேவி |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| விமானம் | – | நாகரம் |
| ஆகமம் | – | தாந்திரிகம் |

### அமைவிடம்

நாகர்கோவில் – திருநெல்வேலி சாலையில் 4 கி.மீ. தொலைவில் அமைந்த புரவசேரி என்னும் ஊரில் உள்ள கோயில். சாலையோரத்தில் வழிகாட்டிப் பலகை உண்டு. முக்கிய சாலையில் இருந்து செல்லும் சிறு சாலையில் நடந்து அல்லது ஆட்டோவில் செல்லலாம்.

### கோயில் அமைப்பு:

இக்கோயில் மிகச் சிறியது. முகமண்டபம், கருவறை, வெளிப்பிரகாரம் என அமைந்தது. கோயில் முன்பகுதியில் விசாலமான இடம் உண்டு. எட்டு தூண்கள் கொண்ட முக மண்டபத்தில் நடுவில் நின்றகோல கருடனும், தெற்கு நோக்கிய விஸ்வசேனரும் உள்ளனர்.

## மூலவர்:

கருவறை, அந்தராளம் என அமைந்தது. மேல் விமானம் உண்டு. சுதை, ஒரு கும்பம், மூலவர் பெருமாள். நின்றகோலம் நான்கு கைகள், சங்கு சக்கரம் அபயவரத ஹஸ்தம் கல்படிமம் இருபுறமும் ஸ்ரீதேவி பூதேவியர், ஒருகையில் மறுகை லோலாஹஸ்தம்.

## பரிவார தெய்வங்கள்:

கருடாழ்வார் , விஸ்வசேனர்

## கல்வெட்டுக்கள்:

மிகச்சிறிய இக்கோயிலில் 17 கல்வெட்டுக்கள் உள்ளன. இவற்றில் மிகப்பழைய கல்வெட்டு 1149–ஆம் ஆண்டினது. இக்கல்வெட்டுக்கள் நிபந்த கல்வெட்டுக்கள் ஆயினும் வைஷ்ணவ குடியேற்றம், ஆகமம் தொடர்பான செய்திகளைக் கூறுகின்றன. இவ்வூர் சதுர்வேதி மங்கலம். இங்கே வைஷ்ணவர்கள் குடியிருப்புக்கள் இருந்தன.

## பூஜை

காலை 6 மணி திருநடை திறப்பு

காலை 7 மணி பூஜை, 8 மணி திருநடை சார்த்துதல்.

மாலை 5 மணி நடை திறப்பு,

மாலை 6 மணி பூஜை

மாலை 6.30 மணி நடை சார்த்துதல்

கிருஷ்ண ஜெயந்தி போன்ற சிறு விழாக்கள் இங்கு நடக்கின்றன.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241270.



# 14. அருள்மிகு அழகம்மன் திருக்கோயில்,

## நாகர்கோவில், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | சுந்தரேஸ்வரர் |
| இறைவி | – | அழகம்மன் |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு |
| விமானம் | – | ஏகதளம் திராவிடம் |

### அமைவிடம்

நாகர்கோவில் அண்ணா பேருந்து நிலையத்திலிருந்து அரை கி.மீ தொலைவில் வடிவீஸ்வரம் கிராமத்தில் இத்திருக்கோயில் உள்ளது. ஆட்டோவில் செல்லலாம். நடந்து செல்லும் தூரம்தான். வாகனங்கள் கோயிலின் முன் நிறுத்த வசதி உண்டு.

### கோயில் அமைப்பு:

சுந்தரேஸ்வரர் கிழக்கு பார்த்து இருக்கிறார். கிழக்கே வாசல் உண்டு. பெரிய குளமும் உண்டு. ஆனால் தெற்கு வாசல் வழியே உள்ளே செல்ல வேண்டும். இது முக்கிய வாசலாக உள்ளது. மக்கள் குடியிருப்பு நிறைந்த பகுதி ஆதலால் கோயிலை அடையாளம் கண்டு எளிதாகச் செல்ல முடியும்.

இக்கோயில் சுவாமி சன்னதி, தேவி சன்னதி இரண்டிற்கும் பொதுவான மண்டபம், உட்பிரகாரம், வெளிப்பிரகாரம் சுற்றிலும் கோட்டை, மதில் என அமைந்தது. சிவன் சன்னதி கிழக்கு நோக்கி அமைந்தது. கருவறை அந்தராளம் அர்த்தமண்டபம் (நந்தி மண்டபம்) என்னும், அமைப்புடையது. அந்தராளம் வெளியே விநாயகர் நந்தி மண்டபத்தில் வடக்கில் முளைப்பாரி வைக்கும் மேடை, தெற்கே மண்டபத்தின் மேல், காற்றும் வெளிச்சமும் வர வசதியான கட்டுமானம்.

அம்மன் சன்னதி கருவறை அந்தராளம் என அமைந்தது. தெற்கு நோக்கியது. சுவாமி சன்னதிக்கும் அம்மன் சன்னதிக்கும் இடைவெளி உண்டு. இது பாதை. இதன் வழி வடக்கு பிரகாரம் செல்லலாம். இரு சன்னதிகளுக்கும் பொதுவான முன்மண்டபம், இரு கோயில்களும், பொது மண்டபமும் தரைமட்டத்திலிருந்து 125 செ.மீ உயர மேடையில் உள்ளது. சுவாமி சன்னதி எதிரே பொதுமண்டபத்தின் இரு மருங்கும் விஸ்மயா சூசிஹஸ்தம் காட்டும் துவாரபாலகர்கள் எதிரே கொடிமரம், பலிபீடம் உண்டு.

## கருவறை மூலவர்:

மூலவர் சுந்தரேஸ்வரர் லிங்க வடிவம், கல்படிமம், ஆவுடையில் அம்மன் நின்ற கோலம். இரண்டு கைகள். ஒரு கையில் மலர். இன்னொன்று லோலாஹஸ்தம். அம்மன் ஸ்ரீ சக்கர பீடத்தில் நிற்கிறாள்.

## பரிவார தெய்வங்கள்:

தெற்கு உட்பிரகாரத்தில் விழாப்படிமங்கள் உள்ளன. அப்பர், சுந்தரர், ஞான சம்பந்தர், காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனார், சந்திரசேகரமூர்த்தி, சிவகாமி, சரஸ்வதி என எல்லாமே செப்புப்படிமங்கள். இதே பிரகாரத்தில் கருவறைக் சுவரை ஒட்டி தட்சணாமூர்த்தி இருக்கிறார். கன்னிமூலையில் விநாயகர். மேற்கு பிரகாரத்தில் சுந்தரேஸ்வரர், பிரியாவிடை அம்மன் பஞ்சலோகப் படிமம். விஷ்ணு தனிக்கோயில். ஸ்ரீதேவி பூதேவியுடன் நாகராஜர், காசி விசுவநாதர் தனிக்கோயில்கள். சுப்பிரமணியர் வடக்கு பிரகாரத்தில் தனிக்கோயில். இவர் வள்ளி தெய்வானையுடன் நின்ற கோலம், கல் படிமம். திருவாச்சி காட்டப்பட்டுள்ளது.

இதே பிரகாரத்தில் சண்டேஸ்வரர், தெற்கு நோக்கி இருக்கிறார். சனீஸ்வரருக்குத் தனிச் சன்னதி. நின்ற கோலம், காகம் அலகை மேற்கு நோக்கி பார்க்கிறது. அம்மன் கருவறையைச் சுற்றி துர்க்கை, சரஸ்வதி, பார்வதி நின்ற கோலம் சிற்பங்கள் வடகிழக்கில் நடராஜர் சிவகாமியுடன் தெற்கு நோக்கி இருக்கிறார். கிழக்கு பிரகாரத்தில் சந்திரன் சூரியன் உள்ளனர். வெளிப்பிரகாரத்தில் சாஸ்தா, நாகர் தெய்வங்கள் உள்ளன.

## சிற்பங்கள்:

சுவாமி அம்மன் சன்னதி முன்மண்டபத்திலும் சுவாமி சன்னதி அர்த்த மண்டபத்திலும் கிழக்கு உட் வெளிப் பிரகாரத்தூண்களிலும் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. சுவாமி சன்னதி அர்த்த மண்டபத்தில் பைரவர், விநாயகர், சுப்பிரமணியர் சிற்பங்கள் உள்ளன. இந்த மண்டபத்தூண்கள் செப்புத்தகடால் பொதியப்பட்டுள்ளன.

கிழக்கு பிரகாரத்தில் முன்வாசலில் பெரிய அளவிலான துவாரபாலகர்கள் உள்ளனர். இதே பிரகாரத் தூண்களில் கங்களாளநாதர், விளக்கேந்திய பாவைகள் எனச் சில சிற்பங்கள், வீணையை மீட்டும் வியாக்கிரபாதர் சிற்பம் இப்பிரகாரத்தில் உள்ளது. கிழக்கு வெளிப்பிரகாரத்தில் தயிர் கடையும் மனிதர் பந்து வீசும் நாட்டுப்புறக்கலைஞன், அஞ்சலி ஹஸ்த அடியவன் எனச் சில சிற்பங்கள். இதே பிரகாரத்தில் இக்கோயில் கட்டுமானத்திற்கு உதவிய ஆட்கொண்டான் செட்டியார் ஆளுயரச் சிற்பம் உள்ளது. கோயிலின் கிழக்கே பெரிய தெப்பக் குளம் உள்ளது. கோயிலுக்கு என்று சுவாமி தேரும், பிள்ளையார் தேரும் உண்டு.

## கல்வெட்டுகள்:

இக்கோயிலில் 5 கல்வெட்டுகள் உள்ளன. இவற்றில் மிகப்பழைய கல்வெட்டு 1458 ஆம் ஆண்டினது. அம்மன் கருவறை தென்புறச்சுவரில் உள்ள இக்கல்வெட்டு இக்கோயில் மூலவரை நயினார் என்றும் அம்மனை நாச்சியார் அழகிய மங்கை என்றும் குறிப்பிடுகிறது. இது நிபந்தக்கல்வெட்டு. வேணாட்டு அரசனை

வென்று மண்கொண்ட பூதவவீர இரவிவர்மனின் நிபந்தக் கல்வெட்டு உண்டு. (1520) இந்த அரசன் பறக்கை, கிருஷ்ணன் கோவில் என பல கோயில்களில் கட்டுமானம் செய்தவன். இவன் காலத்தில் இக்கோயில் கட்டுமானம் நடத்திருக்கலாம்.

இதே காலத்தில் கிபி 19 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு கிழக்கு வெளிப்பிரகாரம், கொடிமரம் இருக்கும் பகுதி ஆகியன கட்டப்பட்டிருக்கலாம் என்று கூறுகிறது.

## பூஜை

| | |
|---|---|
| காலை | மணி 5 திருநடைதிறப்பு |
| | மணி 6 தீபாராதனை |
| | மணி 11 திருநடையடைப்பு |
| மாலை | மணி 5 திருநடைதிறப்பு |
| | மணி 6.30 தீபாராதனை |
| | மணி 7.40 ஸ்ரீபலியும் தீபாராதனையும் |
| | மணி 8.00 திருநடையடைப்பு |

## விழா:

மாசி மாதம் மகம் நட்சத்திரம் 10 ஆம் நாள் வரும்படியாகக் கொடியேறும். 10 நாட்கள் திருவிழா 9 ஆம் நாள் தேரோட்டம் 10 ஆம் நாள் ஆறாட்டு ஒழுகினசேரி அம்மன் கோயிலுக்குச் செல்லும். ஐப்பசி திருக்கல்யாணம், கந்தசஷ்டி போன்ற பிற நிகழ்வுகளும் உண்டு.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241270.



# 15. அருள்மிகு முன்னுதித்த நங்கையம்மன் திருக்கோயில்

## சுசீந்திரம், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவி | – | முன்னூற்று நங்கை / முன்னுதித்தநங்கை |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு (உவச்சர் பூசகர்) |

### அமைவிடம்

நாகர்கோவில் கன்னியாகுமரி சாலையில் உள்ள சுசீந்திரம் ஊரில் தெப்பக்குளம் அருகே தெப்பக்குளத்தெருவில் இருப்பது இக்கோயில். சுசீந்திரம் தாணுமாலையன் கோயிலைத் தரிசித்து விட்டு இக்கோவிலுக்குச் செல்லலாம்.

### தலபுராணம்:

நாஞ்சில் நாட்டில் நங்கை என்னும் பின் ஒட்டுள்ள தெய்வங்கள் பல உள்ளன. அழகியபாண்டியபுரம் வீரவநங்கை, தெரிசனங்கோப்பு ஸ்ரீதர நங்கை, பூதப்பாண்டி அழகிய சோழ நங்கை, குலசேகரபுரம் குலசேகர நங்கை எனப் பல. இக்கோவில் தொடர்பான கதை சுசீந்திரம் தலபுராணத்தில் உள்ளது. லட்சுமி, சரஸ்வதி, பார்வதி ஆகிய மூவரும் குழந்தை வடிவில் இருந்த

தங்கள் கணவர்கள் மீண்டும் வடிவம் பெற கார்த்தியாயனி நோன்பு இருந்த போது காட்சி கொடுத்த தாய்த்தெய்வம் இவள். கௌதமரின் சாபம் நீங்க இந்திரன் வேள்வி செய்தபோது ஜோதி ரூபியாக முன் உதித்தவள். இந்திரன் முந்நூறு கன்னியரைச் சாட்சியாக வைத்துப் பூஜித்தபோது தோன்றியவள் என்னும் கதைகள் வழங்குகின்றன.

## கோயிலின் அமைப்பு:

கோயில் வடக்கு பார்த்தது. எனினும் தெற்கு வாசல் வழியே பக்தர்கள் செல்ல முடியும். இதன் வழி சென்று தெற்கு வடக்காக அமைந்திருக்கும் கோயிலின் வடக்கு முன்மண்டபத்தை அடையலாம். வாசலின் முன் அண்மையில் புதுப்பிக்கப்பட்ட 4 தூண்கள் கொண்ட மண்டபம் உள்ளது. கோயில் வடபுறம் முன் மண்டபம் நடுவில் அம்மனின் வாகனமான வேதாளி உள்ளது. கல் படிமம். கத்தி கேடயம் தாங்கியது. தொங்கு மார்பு; தெற்கு பார்த்தது.

முகமண்டப வாசலில் துவாரபாலகிகள் சிற்பங்கள் உள்ளன. இம்மண்டபம் 8 தூண்கள் கொண்டது. கருவறையைச் சுற்றி வர உள்பிரகாரம் உண்டு. கருவறையின் முன் சிறு மண்டபம் உண்டு.

## கருவறை:

கருவறையின் முன் அர்த்தமண்டபம் இருந்தாலும் முகமண்டபத்திலிருந்தே பக்தர்கள் இறைவியைத் தரிசிக்க முடியும். கருவறை அம்மனின் வடிவம் கடுசர்க்கரையால் ஆனது. வடக்குப்பார்த்தது. நின்ற கோலம். எட்டு கைகள். மகிஷனை அழித்த வடிவம். இப்போது இவள் மகிஷாசுரமர்த்தினி எனப் படுகிறாள். கருவறையில் விழாப்படிமம் உள்ளது. நின்ற கோலம். 4 கைகள் பாசம், உடுக்கு, சூலம் கபாலம் உள்ளன.

## பரிவார தெய்வங்கள்:

கோயில் வடக்கு முன்மண்டபத்தில் வன்னியன் வன்னிச்சி தளவாய் மாடன், ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன. இம்மண்டபக் கிழக்கில் பைரவர் மேற்கு நோக்கியும் சாஸ்தா உட்கடிகாசனத்தில் வடக்கு நோக்கியும் இருக்கிறனர். முன்மண்டபம் வலதுபுறம்

மோகினியின் சிற்பம் உள்ளது. இங்கு பஞ்சகன்னியரின் சிறு உருவங்கள் உள்ளன. நாகரும் உள்ளது.

முகமண்டபம் வலது பக்கம் தென்மேற்கில் சிறு மண்டபத்தில் விநாயகர், மாரியம்மன், காளி, அறம்வளர்த்த அம்மன், நாகர், சிவன் ஆகியோரின் கல்படிமங்கள் உள்ளன. அறம் வளர்த்த அம்மன் இரண்டு கைகளுடன் திரிபங்க வடிவில் உள்ளார். சிவன் எதிரே நந்தி உள்ளது. இம்மண்டபத்தின் அருகே உள்ள மண்டபத்தில் வழிபாட்டுப் படிமம் உள்ளது.

## கல்வெட்டுகள்:

சுசீந்திரம் கோயில் கல்வெட்டுகளில் இக்கோயில் பற்றிய செய்திகள் வருகின்றன. இக்கோயிலுக்கு 1621 ஆம் ஆண்டில் பெண் ஒருத்தி கொடுத்த நிபந்தம் பற்றிய செய்தி ஒரு கல்வெட்டில் வருகிறது. இதனால் இக்காலத்திற்கு முன்பே இது வழிபடு தெய்வமாக இருந்திருக்க வேண்டும். இன்னொரு கல்வெட்டு தாணுமாலயன் கோயிலுக்கும் இக்கோயிலுக்கும் சடங்கு ரீதியான தொடர்பு இருந்ததைக் கூறும். இது 14 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு. இதன் படி இக்கோயில் 1000 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனக் கூற முடியும்.

தாணுமாலயன் கோயில் உட்பிரகாரக் கல்வெட்டு ஒன்று (கிபி 1144) முந்நூற்றுவன் ஆசாரி என்ற பெயரைக் குறிப்பிடுகின்றது. இதனால் முன்நூற்று நங்கை 12 ஆம் நூற்றாண்டில் ஆட்பெயராக விடுமளவுக்கு இருந்தாள் எனக் கருதலாம்.

## பூஜை விவரம்

காலை 5.30 மணிக்குத் திருநடைதிறப்பு
காலை 6.00 மணிக்குப். பூஜை
காலை 7.00 மணிக்குப் பூஜை
மாலை 5.00 மணிக்குத் திருநடைதிறப்பு
இரவு 7.00 மணிக்குப் பூஜை
இரவு 8.00 மணிக்குத் திருநடை அடைப்பு

## விழா:

இக்கோயிலில் ஆடிப்பூர விழா சிறப்பாக நடந்தது பற்றி **1621** ஆம் ஆண்டு கல்வெட்டில் சான்று உண்டு. இப்போது ஆடிப்பூர விழா, நவராத்திரி விழா ஆகியன சிறப்பாக நடக்கின்றன. தாணுமாலையன் கோயிலின் திருவிழாவிற்கும் இக்கோயிலுக்கும் உறவு காலங்காலமாகத் தொடருகிறது. தாணுமாலையன் கோயில் திருவிழா ஆங்காரபலி இங்கேதான் நடக்கிறது. தேர்த்திருவிழாவிற்கு முந்திய நாள் இரவில் இங்கே பூஜை நடக்கும். நவராத்திரி விஜயதசமி பரிவேட்டைக்கு இக்கோயில் விழாப்படிமம் திருவனந்தபுரம் செல்கிறது.



தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241421.



# 16. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

### மருங்கூர், அகஸ்தீஸ்வரம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | அகஸ்தீஸ்வரம் |
| இறைவி | – | வள்ளி தெய்வாணை |
| ஆகமம் | – | சிவாச்சாரியமரபு |

## அமைவிடம்

மருங்கூர் என்ற ஊர் நாகர்கோவில் கன்னியாகுமரி சாலையில் இருக்கும் சுசீந்திரம் பழையாறு பாலத்தில் இருந்து வடகிழக்கே 5 கி.மீ தொலைவில் உள்ளது. இந்த ஊருக்கு நாகர்கோவிலிலிருந்து பஸ்வசதி உண்டு. கோயில் அடிவாரம் வரை வாகனம் செல்லும்

சுமார் 90 அடி உயரமும் 22 ஏக்கர் பரப்பும் கொண்ட இந்த சிறு மலை மேற்கு தொடர்ச்சி மலையின் தென்கோடியில் இருக்கும் இடமலை தொண்டு என்ற கணவாயிலிருந்து துண்டுப்பட்டு கிடப்பது. இம்மலையை சித்தர் மலை, மங்கள மலை, வேள்வி மலை, மயூர மலை என்றும் வேறு பெயர்களில் அழைக்கின்றனர். இம் மலையை கிரிவலம் வர சாலைகள் உண்டு. இம்மலையின் மேலிருந்து சுற்றிப்பார்ப்பது தனி அனுபவம். உயர்ந்த தென்னைமரங்கள், நீர் நிலைகள், வயல் வெளிகள் போன்றவை பரவசமூட்டும்.

## கோயிலின் அமைப்பு:

குன்றில் உள்ள முருகன் கோயிலுக்கு குன்றின் அடி வாரத்தில் தெற்கே இருந்து இருபுறமும் கைப்பிடி கம்பிகள் கொண்ட 80 படிகள் வழியாக ஏறியோ அல்லது கிழக்கே நீராழியிலிருந்து சரிவான பாறை ஒன்றின் வழி ஏறிச்சென்றோ கோயிலை அடையலாம். மலை அடிவாரத்தில் நீராளியும், காவடி மடமும், மாடன் இசக்கி பூதத்தான் கோயில்களும் உள்ளன.

கோயிலின் கிழக்கு திசையிலும், தெற்கு திசையிலும் பெரிய தோரண வாயில்கள் உள்ளன. கோயில் கிழக்கு நோக்கி உள்ளது. முதல் பிரகாரம் வெட்ட வெளியால் ஆனது. கோயிலைச் சுற்றி உயர்ந்த மதில் சுவர் உண்டு. வெளிப்பிரகாரத்தில் கோயிலின் அலுவலகம், வாகன அறை உள்ளது.

கோயில் பலிபீடத்தின் மேற்கே தென் வடல் சிறகுகளுடன் கிழக்கே முன்தள முகப்புடன் கூடிய முகப்பு மண்டபம், இங்கு மூன்று பரிவார தெய்வக் கோயில்கள் உள்ளன. முகப்பு மண்டபத்தை அடுத்து உட்பிரகாரம் இங்கே மயில் மண்டபம் சுற்றிலும் இடைவெளி தெற்கே ஊட்டுப்புரை, மடப்பள்ளி, கருவறை, அந்தராளம் என இரு பகுதி உள்ளது. இதன் கட்டுமானப்பணி 16ஆம் நூற்றாண்டு என தெரிகிறது.

## தலபுராணம்:

இக்கோயிலின் தலபுராணம் தனிப்பட்ட முறையில் எழுதி வைக்கப்படவில்லை. ஆனால் சுசீந்திரம் கோயில் தலபுராணத்தில் இக்கோயில் தொடர்பான கதை வருகிறது. சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டுள்ள சுசீந்திரம் தலபுராணம் 15– ஆம் சருக்கத்தில் மருங்கூர் சுப்பிரமணியர் தொடர்பான செய்திகள் தரப்பட்டுள்ளன. தாணுமாலையன் அருளால் தூய்மைப்பெற்ற தேவேந்திரன் தேவலோகம் சென்றதும் அவனது வாகனங்களில் உச்சை சிரவத்தை மருங்கூர் செல்ல ஆணையிடுகிறார் தாணுமாலையன். அப்போது மருங்கூர் கோயில்

பேசப்படுகின்றது. மருங்கூர் கோயிலில் வள்ளி மணவாளன் கோயில் கொண்டிருக்கிறான். அவனை அர்ச்சிப்பாய் என தாணுமாலைலயன் கூறியதும் உச்சை சிரவம் குதிரை என்னால் எப்படி முருகனை அர்ச்சிக்க முடியும் என கேட்க தாணுமாலயன் அனந்தனையும் உன்னுடன் அழைத்துச் செல் என்றார். அது போலவே முருகனை வழிபட்டு குதிரை முக்தி பெற்றது. அது முதல் இத்தலம் வாஜிபுரம் என வழங்கப்பட்டது.

இக்கோயிலில் முருகன் குதிரை வாகனத்தில் வலம் வருகிறான். சுசீந்திரம் தலபுராணம் சுசீந்திரத்திற்கு வடகிழக்கே சித்தசைலம் ஒன்று இருந்ததாக கூறும் அந்த சைலம் மருங்கூர் தான். இங்கு ஞானிகள் பலர் வந்து ஜீவன் முக்தர்களாய் உள்ளனர். திருநாராயண குரு இத்தலத்திற்கு வந்து தவம் செய்திருக்கிறார். சட்டம்பி சுவாமிகள் என்ற சித்தர் இங்கு வந்திருக்கிறார். திருவனந்தபுரம் அபேதானந்த சுவாமிகள் பல நாட்கள் இங்கே தங்கியிருக்கிறார். திருவஞ்ச நல்லூர் சிதம்பரசுவாமிகள் இங்கே தங்கி பல துறவிகளுக்கு ஞானோபதசம் செய்துள்ளார்.

## மூலவர் வடிவம்:

இக்கோயில் கருவறை மூலவர் சுப்பிரமணியர், வள்ளி தெய்வானையுடன் காட்சி அளிக்கிறார். 100 செ.மீ உயரக் கல் படிமம், மூலவரும் திருவாட்சியும் ஒரே கல். நான்கு கைகள்; அபய வரத கரங்கள் சக்தியாயுதமும் அபயமும் தாங்கிய இரு கைகள். மயில் மீது சாய்ந்து நிற்கிறார். இருபுறமும் வள்ளி தெய்வானை மூலவரின் முன் கரங்கள் ஒருமுறை உடைந்து விட்டது. அதனால் பஞ்சலோகத்தால் கரங்கள் பொருத்தப்பட்டன.

## பரிவார தெய்வங்கள்:

சிவன் – முகப்பு மண்டபம் வடபால் காசிலிங்கசாமி லிங்க வடிவம் இது சித்தர் ஒருவரின் சமாதி எனப்படுகிறது.

பூதத்தான் – குலசேகர விநாயகரை அடுத்து இருப்பது. ஒவ்வொரு நாளும் இறுதி பூஜை இவருக்கு. இவர் இம்மலையின்

காவல் தெய்வமாக கருதப்படுகிறார். மருங்கூர் தொடர்பான பழைய கதை, காடராஜன் என்னும் பகை அரசனை விரட்ட பூதப்படைகள் இங்கு வந்தன. அப்போது பூதங்கள் இவ்வூரைக் காத்தன என்று கூறும்.

இரு விநாயகர் கோயில்களிலும் பூதத்தான் சன்னதிகளிலும் நாகர் சிற்பங்கள் உள்ளன.

ஆறுமுகப்பெருமாள் – இவர் அமரர் பதி காத்த பெருமாள் என்ப்படுகிறார். இராஜச கோலம் பன்னிரு கைகள், அபயம், கத்தி, அம்பு, வாள், சக்கரம், நாகம், இடக்கரங்களில் வரதம், சூலம், வில், கேடயம் முக்குடம், அங்குசம் ஒரானை எல்லாம் தெரியும் படி அமைந்தது.

தேவி – வலது கையில் மலர், ஆயுத பூஜையில் வழிபாடு சரஸ்வதி என கூறுவது மரபு. கௌரியாக இருக்கலாம்.

## வரலாறு / கல்வெட்டுகள்:

இக்கோயிலில் தனியாக கல்வெட்டுகள் கிடைக்கவில்லை. ஆனால் இவ்வூரை அடுத்த ஒரிடத்தில் (இரவிபுதூர்) கிடைத்த ஒரு கல்வெட்டில் இக்கோயில் பழைமையானது என்பதற்கு சான்று உண்டு. இவ்வூர் பகுதி பாண்டியர்களுடன் தொடர்புடையது. முற்கால பாண்டியர்கள் இப்பகுதியில் ஆட்சி செய்தவர்கள். 8–ஆம் நூற்றாண்டு கல்வெட்டு இதற்குச் சான்று.

இக்கோயிலில் மகர மீன் புடைப்பு சிற்பங்கள் உள்ளன. இவ்வூர் எல்லைப்பகுதியில் கிடைத்த அச்சில் வராத ஒரு கல்வெட்டு இக்கோயிலை அமரர்பதிகாத்தபெருமாள் என குறிப்பிடும். இக்கல்வெட்டு கி.பி. 16ஆம் நூற்றாண்டினது. இதனால் இக்கோயில் 16ஆம் நூற்றாண்டிற்கு முன்பே வழிபாடு கோயிலாக இருந்தது என தெரிகிறது.

இக்கோயில் ஆறுமுக சன்னதியில் ஒரு குகை உள்ளது. இதை வள்ளிகுகை என்பர். இது நிலவறையாக பயன்பட்டிருக்கிறது. இக்கருவறை சுவரில் வெளியே மும்மூர்த்திகளின் திருவுருவம்,

தெற்கே தட்சிணாமூர்த்தி மேற்கே நரசிம்மரும் வடக்கு நான்முகனும் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. மயில் மண்டபத்தின் முன்னே வடக்கே உள்ள தூணில் மலர் கொண்டு தாங்கிய அம்மன், வேலவன், வில் அம்புடன் இராமன் சிற்பங்கள் உள்ளன.

## பூஜை விவரம்

காலை 5.00 மணிக்கு உஷ பூஜை

காலை 6.45 மணிக்கு தீபாராதனை

காலை 11.00 மணிக்கு உச்சகால பூஜை

இரவு 7.45 மணிக்கு அர்த்தசாம பூஜை

இக்கோயில் பூஜை சைவ ஆகம மரபுடையது. சிவாச்சாரியார்களான நம்பியார்களே பூஜை செய்கிறார்கள். 500 ஆண்டு காலம் பழைமை உடைய திருவழுதி உண்மை நம்பியார் வம்சாவழி பட்டயநீட்டு இவர்களிடம் உள்ளது. இவர்களுக்கு சுசீந்திரம் கோயில் கொன்றையடியில் பூஜை செய்யும் உரிமையும் உண்டு.

## விழா:

இக்கோயில் விழாக்களில் கந்தசஷ்டி, திருக்கல்யாணம், மார்கழி திருவிழா, தைப்பூசத்திருவிழா பங்குனி உத்திரம், கார்த்திகை தீபவிழா ஆகியன முக்கியமானவை. இவற்றில் கந்தசஷ்டியில் நிகழும் சூரசம்ஹாரமும் திருக்கல்யாண விழாவும் கோலாகலமாக நடக்கிறது.

சித்திரை திங்கள் விசாகத்தில் திருக்கல்யாண விழா நடக்கிறது. அன்று மாலை வள்ளியம்மன் படிமம் பல்லக்கில் செல்லும். கோழிக்கோட்டு பொத்தை என்ற ஊருக்குச் செல்லும் போது முருகன் குதிரை வாகனத்தில் சென்று கவர்ந்து வருவார். அப்போது வேட்டுவர் சாதியினர் அம்புகளை உயர்த்தி காட்டி தடுப்பர். பின் திருமணத்தை நடத்தி வைப்பார். வள்ளியின் பெண் வீட்டார் போல் இவர்கள் நடக்கின்றனர்.

## சிறப்பு செய்திகள்:

இக்கோயில் பற்றி பழனிக்குமார பண்டாரம் ஆறுமுகப்பிள்ளையின் இயற்றிய திருமருங்கை ஒரு திணைமாலை, தசாவதானியின்மருங்கூர்இரட்டை மணிமாலை,கவிமணிதாசனின் மருங்கூர் நான்மணி மாலை, சதாசிவம் எழுதிய மருங்கூர் முருகன் மணமாலை, பீர்முகம்மது எழுதிய மருங்கூர் முருகன் கந்தசஷ்டி கவசம் போன்ற சிறு இலக்கியங்கள் வந்துள்ளன.



தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 241270.



# 17. அருள்மிகு பூதலிங்கசுவாமி திருக்கோயில்

## பூதப்பாண்டி, தோவாளை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பூதலிங்கசுவாமி |
| இறைவி | – | சிவகாமி அம்மன் |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு |

## அமைவிடம்

பூதலிங்கசுவாமி திருக்கோயில் தோவாளை வட்டம் தலைநகரான பூதப்பாண்டி ஊரில் உள்ளது. இந்த ஊர் நாகர்கோவிலிருந்து 10 கி.மீ தொலைவில் உள்ளது. நாகர்கோவில் அழகியபாண்டியபுரம் சாலையில் துவரன்காடு நிறுத்தத்திலிருந்து 3 கி.மீ இருப்பது. பூதப்பாண்டி ஊரிலிருந்து கோயிலுக்கு அரை கி.மீ நடந்து செல்லலாம். ஊரில் ஆட்டோ வசதி உண்டு. தங்கும் வசதி இல்லை. நாகர் கோயிலிலேயே தங்கலாம். (பேருந்து வரிசை எண்.4)

## தலபுராணம்:

பூதப்பாண்டி ஊர் பற்றியும் கோயில் பற்றியும் உள்ள தலபுராணங்கள் விரிவாக எழுதி வைக்கப்படவில்லை. ஆனால் வாய்மொழி வடிவில் இக்கதை இருப்பதை இன்று கேட்க முடியும்.

கே.என்.சிவராஜபிள்ளை என்ற அறிஞர் இந்த ஊரை பூதப்பாண்டியன் என்பவருடன் இணைத்துப் பேசுகிறார். புறநானூற்றிலும், அகநானூற்றிலும் இவனைப்பற்றிய பாடல்கள் உள்ளன. இதனால் இந்த ஊர் பற்றிய வரலாறு 2000 ஆண்டுகளுக்கு முன்பு வரை செல்கிறது.

''கேரளோப்பத்தி'' என்ற மலையாள சிற்றிலக்கியம் கி.பி 15 ஆம் நூற்றாண்டு எனக் கருதுகின்றனர். இதில் பூதப்பாண்டி சிவன் கோயில் உருவானது குறித்த கதை வருகிறது. தென்பாண்டியில் உள்ள அரசன் ஒருவன் கேரளத்தில் இருந்த பரசுராமருடன் போரிடுவதற்குப் படையுடன் சென்றான். அவனுக்குத் துணையாக ஒரு பூதப்படையும் சென்றது. பரசுராமர் தன் ஆயுதத்தால் பாண்டியனை விரட்டினார். பூதங்களைக் கொன்றார். பாண்டியன் தாடகைமலை அடிவாரத்தில் இருந்த ஒரு சிவன் கோயிலுக்குச் சென்று மறைந்து கொண்டான். பரசுராமர் தொடர்ந்து அவனுடன் போரிட விரும்பாமல் திரும்பினார். பாண்டியன் தன் உயிரைக் காத்த சிவனுக்குக் கோயில் கட்டினான். அந்தக் கோயிலும், கோயில் இருந்த ஊரும் பூதங்களின் பெயரால் அழைக்கப்பட்டது. சிவனும் பூதலிங்கம் என்ற பெயரைப் பெற்றான். இப்படி ஒரு கதையை மலையாள கேரளோப்பத்தி நூல் கூறுகிறது.

கேரள மகாத்தியமும் இதே கதையைக் கூறுகிறது. வேறு ஒரு கதையையும் இந்நூல் கூறும். இது வாய்மொழியாகவும் வழங்குகிறது. பூதப்பாண்டியில் ஊர்த்தலைவரைத் தேர்ந் தெடுக்கும் கூட்டம் நடந்தது. அப்போது ஆட்சியில் இருந்த சிற் றரசனான பூதராயப்பாண்டியப் பெருமாள் என்பவன் ஊர்க் கூட்டத்தில் பிராமணர்கள் கலந்து கொள்ளக்கூடாது என்றான். அதற்கு அவன் காரணமும் சொல்லவில்லை. இதனால் வெகுண்ட பிராமணர்கள் பெரிய யாகம் நடத்தி ஒரு பூதத்தைப் படைத்தனர். அதை பூதராயப்பெருமாளின் மேல் ஏவி விட்டனர். பூதம் அவனையும் அவனுக்கு ஆதரவாக நின்ற வீரர்களையும் கொன்றது. அவனைப் புதைத்த இடத்தில் சிவன் கோயிலைக் கட்டினர். அந்த சிவன் பூதலிங்கம் என அழைக்கப்பட்டார்.

பாண்டியநாட்டின் தலைநகராக தென்காசி இருந்த சமயம் ஒரு பாண்டியன் வயிற்றுவலியால் துன்பப்பட்டான். அவன் நோய் நீங்க தாடகைமலை அடிவாரத்தில் இருந்த கோயிலுக்கு போகும் படி ஜோதிடர் கூறினார். அவனும் அந்த கோயிலில் வழிபாடு செய்தான்; நோய் நீங்கியது. அதன் பிறகு தென்காசி பாண்டியன் கோயிலை விரிவுப்படுத்தி கட்டினான் என்பதை கேரள ஸ்தல மகாத்மியம் என்ற மலையாள நூல் கூறும்.

பூதப்பாண்டி சிவனைச் சாலியர் கண்ட திருமேனி என்று கூறுகின்றனர். இதற்கும் வாய்மொழி கதை ஒன்று பேசப்படுகிறது. சாலியர் ஜாதியைச் சார்ந்த ஒருவர் ஒரு பசு வளர்த்தார். அதைக் காட்டுக்கு மேய விட்டார். ஒரு நாள் அவர் பசுவிடம் பால் கறக்க சென்ற போது மடு முழுவதும் வற்றியிருப்பதைக் கண்டார். மறு நாளும் அப்படியே இருந்தது. அவருக்கு சந்தேகம் வந்தது. மாட்டுடன் காட்டுக்குச் சென்றார். ஒரிடத்தில் பசு நின்றது. மடு தானாக பாலைச் சொரிந்தது. பசு பால் சொரிந்த இடத்தைப் பார்த்தார் சாலியர். அங்கே ஒரு சிவலிங்கம் இருந்தது. அதை ஊர் மக்களுக்குத் தெரிவித்தார். இதன் பின் அங்கே ஓர் கோயில் கட்டினார். இதனால் இந்த சிவன் சாலியர் கண்ட சிவன் ஆனார். இப்போதும் இக்கோயில் தைமாதத் திருவிழா கொடி ஏற்றத்திற்குரிய கொடிப்பட்டத்தை நகர்கோவில் வடசேரி சாலியர் சமூகத்தினரே கொடுப்பது மரபு.

## கோயில் அமைப்பு:

இக்கோயில்தாடகைமலையின் அடிவாரபாறையில் இருக்கும் குடவரைக் கோயிலை மையமாக கொண்டு கட்டப்பட்டது. பாறையின் ஒரத்தில் குடைந்து செய்யப்பட்ட கருவறைப்பகுதியே ஆரம்பக் கோயில். இதுசிவன்கோயிலுக்காககுடையப்பட்டது. தாய்ப்பாறையில் கொத்தப்பட்ட மூலவர் இதற்கு சான்று. இக்குடைவரையின் காலம் கி.பி. 8 அல்லது 9 ஆம் நூற்றாண்டில் இருக்கலாம். இதனால் கன்னியாகுமரி மாவட்டத்தில் மிகப்பழைய கோயில்களில் இதுவும் ஒன்று எனக் கூறமுடியும். குடைவரையின் உட்பகுதி தூண்களின் அமைப்பு பொதிகையின் வடிவம் இதை வெளிப்படுத்தும்.

குடைவரைக் கோயில்களில் விமானம் அமைப்பதில்லை. இக் கோயிலுக்கும் விமானம் கிடையாது.

கருவறை, முன் அர்த்தமண்டபம், முகமண்டபம், கல்யாண மண்டபம் இரண்டு பிரகாரங்கள் சுற்றிலும் மதில் என்னும் அமைப்பை உடையது. முகப்பு மண்டபத்தை ஆண்டிச்செட்டியார் மண்டபம் என்கின்றனர். இது தொடர்பாக வாய்மொழியாக ஒரு கதை வழங்குகிறது. பூதப்பாண்டி ஊரை அடுத்த சிறு கிராமத்தில் ஆண்டிச்செட்டியார் என்ற செல்வந்தர் இருந்தார். அவர் இக்கோயிலுக்குத் தினமும் வருவார். ஒரு நாள் அவர் கோயிலுக்கு வர நேரமாகி விட்டது. அவர் அதை நினைத்து வருந்தி நின்றார். அப்போது இறைவன் காட்சி அளித்தார். செட்டியார் கோயிலின் முகப்பு மண்டபத்தைக் கட்டி நிபந்தமும் கொடுத்தார் இதனால் இம்மண்டபம் 17ஆம் நூற்றாண்டினது என தெரிகிறது.

இக்கோயிலின் நந்தி மண்டபம் 1503ல் கட்டப்பட்டது என்பதற்கு கல்வெட்டு சான்று உண்டு. மூலவரின் வலது பக்கம் அம்மனுக்குத் தனிக்கோவில் உண்டு. இக்கோயிலுக்கு முன் பகுதியில் உள்ள கல்யாணமண்டபம், தேவி கோவில் கட்டப்பட்ட பின்பு ஒரு நூற்றாண்டிற்கு பின் கட்டப்பட்டு இருக்கலாம். கல்யாண மண்டபத்தில் மரத்தால் ஆன மணமேடை உள்ளது. இது சித்திர வேலைப்பாடு உடையது. முகமண்டப கட்டுமானம் இது குறித்து கதைகளின் வழி 16 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என தெரிகிறது.

இக்கோயிலை ஒட்டிய பாறை பரந்து காணப்படுகிறது. மாலை நேரத்தில் பக்தர்கள் அமர்ந்து இருப்பதற்கு ஏற்ற இடம். குமரி மாவட்டத்தில் இப்படி இயற்கை கொஞ்சும் இடம் வேறு எங்கும் இல்லை. இது மலையடிவார கோயில். பழையாற்றங் கரையில் இருப்பது என்ற சிறப்பும் உண்டு.

### கருவறை மூலவர்:

கருவறை தாய்ப்பாறையில் ஆவுடையில் சிவன் இருக்கிறார். லிங்க வடிவம். இப்படி தாய்ப்பாறையில் கொத்தப்பட்ட சிவலிங்கம்

சுசீந்திரம் தாணுமாலயன் கோயிலில் இருக்கும் கைலாசநாதர் கோயிலிலும் உள்ளது.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலில் பரிவார தெய்வங்களாக விநாயகர், நந்தி, கன்னி விநாயகர், தட்சிணாமூர்த்தி, அகத்தியர், வள்ளி தெய்வானையுடன் சுப்பிரமணியர், ஸ்ரீபூதநாதர், சாஸ்தா, சண்டிகேஸ்வரர் மற்றும் மேலவாசல் சாஸ்தா ஆகியோர் உள்ளனர்.

மூலவரின் வலதுபுறம் இருப்பது சிவகாமியம்மன். பிரகார தென்மேற்கு மூலையில் ஒரு அரசு மரத்தடியின் கீழ் விநாயகர் கோயில் உள்ளது. மரத்தின் உள்ளே இரண்டு சிலைகள் மறைந்து விட்டன. இப்போது தெரிவது மூன்றாம் சிலை. இது நினைத்ததை முடிக்கும் விநாயகர். 41 மண்டலங்கள் வணங்கினால் நினைத்த காரியம் நடக்கும் என்பது நம்பிக்கை.

## தேர்/தெப்பக்குளம்:

இக்கோயிலுக்கு என்று சுவாமி தேர், அம்மன் தேர், பிள்ளையார் தேர் என மூன்று தேர்கள் உள்ளன. குமரி மாவட்டத்தில் அதிக எடை கொண்ட தேர் இக்கோயிலில் உள்ளது. தேர் நிலையில் நிற்பதற்கு அதிக நேரம் பிடிக்கும். இக்கோயிலில் உள்ள தெப்பக்குளம் பெரியது. எப்போதும் நீர் நிரம்பிய இக்குளம் இக்கோயிலுக்கு அழகு கொடுக்கிறது.

## கல்வெட்டுகள்:

இக்கோயிலில் 13 கல்வெட்டுகள் அடையாளம் காணப்பட்டுள்ளன. இவற்றில் மிக பெரியது 1502ஆம் ஆண்டினது. கடைசியாக வெட்டப்பட்ட கல்வெட்டு 1789 ஆம் ஆண்டினது. ஏல்லாமே தமிழ் கல்வெட்டுகள். 1789 ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலின் கொடிமரம் 1780ஆம் ஆண்டு மாசி மாதம் 9ம் நாளில் பிரதிஷ்டை செய்யப்படுவதைக்குறிக்கும்.

நந்தி மண்டபத்தில் உள்ள தூண் ஒன்றில் உள்ள கல்வெட்டு 1503 தை மாதம் இம்மண்டப தூண் நிறுவப்பட்டதைக் கூறும். 1589 ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலில் அபரபட்சத்து

அஷ்டமியில் பூஜை நடந்ததைக் குறிப்பிடும். 1607ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலில் திருப்பள்ளி எழுச்சி நடந்ததைக் கூறும். 1614 ஆம் ஆண்டு கல்வெட்டு அமாவாசை அன்று சந்திரசேகரர், வாகனத்தில் மலை வலம் வந்தார் என்பதையும் அன்று சிறப்பு வழிபாடு நடந்ததையும் குறிப்பிடும். 1618ம் ஆண்டு கல்வெட்டு இங்கு சித்திரை பூரணி திருவிழா நடந்ததையும் 1691 ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலில் சாலியருக்குரிய சலுகைகள் பற்றியும் கூறும். எல்லா கல்வெட்டுகளுமே நிபந்தக் கல்வெட்டுகள் ஆகும்.

இக்கோயிலுக்கு என்று தனிச்சபை இருந்தது. இச்சபை கோயிலை நிருவகித்தது. இதன் அனுமதியுடன் ஆதிசண்டேஸ்வரப் பிரமாணம் என்னும் பெயரில் நிபந்தம் கொடுத்தனர். இக் கோயிலில் வைராவி என்ற யோகீஸ்வரர் வாயிற் காவலராக இருந்தார்.

## சிற்பங்கள்:

இக்கோயிலில் உள்ள தூண்களில் பரவலாக நல்ல சிற்பங்கள் உள்ளன. சிவாமியம்மன் மண்டபத்தின் எதிரே உள்ள கல்யாண மண்டபத்தில் மன்மதன் ரதி சிற்பம் உள்ளது. ரதி மயில் மீது இருக்கிறாள். மன்மதன் கையில் கரும்பு வில் உள்ளது. கொடி மரம் அருகே உள்ள தூண்களில் இருக்கும் துவாரபாலகர்கள் சிற்பம் சிவ அடையாளம் உடையவை. இம்மண்டபம் மேற்கூரையில் மீன் சின்னமும், கொடிமரத்தின் வலதுபுறம் திருவிதாங்கூர் அரசு சின்னமும் உள்ளன.

மகாமண்டபத்தில் இக்கோயில் கட்டுமானத்திற்கு உதவிய ஆண்டி செட்டியாரின் சிற்பம் உள்ளது. கொடிமரத்தின் அருகே ஒரே கல்லில் மூன்று வளையம் கொண்ட கல் சங்கிலி தொங்குகிறது. ஒரு தூணில் நான்கு கற்களுக்கு இடையே உள்ள கல் பந்தை எந்த திசையிலும் திரும்பும் படி அமைந்த அதிசயம் இங்கு உள்ளது

## பூஜை

காலை 5.00 மணிக்கு உஷ பூஜை

காலை 6.00 மணிக்கு தீபாராதனை

காலை 10.00 மணிக்கு உச்ச பூஜை
மாலை 6.30 மணிக்கு சாயராட்சை
மாலை 7.45 மணிக்கு அத்தாழ பூஜை

இக்கோயில் 16 ஆம் நூற்றாண்டிலேயே சிவாச்சாரியர் மரபின் படி பூஜை செய்யப்பட்டது. கருவறையில் சிவாச் சாரியார் பூசகராய் இருந்தனர். 1608ல் கூட தினமும் பன்னிரு திருமுறைகள் பாடப்பட்டன.

இக்கோயிலில் பரிவார தெய்வமாக உள்ள பூதத்தானுக்கு படைக்கப்படும் நைவேத்யம் பச்சரிசி, பாசிப்பருப்பு, தொலிக்காத தேங்காய் ஆகியன. இது கோயிலின் பழமையைக் காட்டுவது. பூதத்தான் நைவேத்யத்தை ஏற்றுக்கொண்டதன் அடையாளமாக ஒரு பூரான் வருவதும் நடைமுறை. சிவனுக்கு தினசரி பூஜையில் நைவேத்யமாக தோசை வைக்கப்படுகிறது.

## விழா:

இக்கோயிலில் தை, சித்திரை, ஆகிய மாதங்களில் 10 நாட்கள் திருவிழா நடக்கின்றன. தை மாதத்தில் நடைபெறும் திருவிழா மிகப் பெரியது. சுவாமித்தேர் ஓடும் தேரோட்டம் ஒன்பதாம் நாள் நடக்கும். ஐப்பசி மாதத்தில் திருக்கல்யாணம், ஆடிச்செவ்வாய் போன்ற விழாக்களும் நடைபெறுகின்றன. கி.பி 15ஆம் நூற்றாண்டிலேயே இக்கோயிலில் திருவாதிரை திருவிழா கொண்டாடப்பட்டதை ஒரு கல்வெட்டு கூறும்.

கோயில் தேர் திருவிழாவில் தேர் புறப்பட்ட இடத்திற்கு வந்த நின்றதும் வானத்தில் கருடன் பறக்கும். ஓராண்டில் குறிப்பிட்ட நாளில் கிழக்கு வாசலில் ஒரே சமயத்தில் இரண்டு நிழல்கள் விழும். தை மாத ஐந்தாம் விழாவில் பஞ்சமூர்த்தி தீபாராதனையின் போது வானில் கருடன் பறக்கும்.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 282495.




# 18. அருள்மிகு அழகேஸ்வரி ஜெயந்தீஸ்வரர் திருக்கோயில்

## தாழக்குடி, தோவாளை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | ஜெயந்தீஸ்வரன் |
| இறைவி | – | அழகேஸ்வரி |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |

### அமைவிடம்

நாகர்கோவிலிலிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ள ஊர். பேருந்து வசதி உண்டு. ஆட்டோவில் செல்லலாம். தங்கும் வசதி இல்லை. தாழைக்குடி என்ற பெயர் பழமையானது. 1161 ஆண்டுக் கல்வெட்டில் வருகிறது. நாஞ்சில் நாட்டின் 12 பிடாகைகளில் ஒன்று. இவ்வூரின் ஒருபக்கம் தாடகை மலை. இன்னொருபுறம் பழையாறும் ஓடுகிறது.

### தலபுராணம்:

தாழக்குடி தலபுராணம் வாய்மொழி வடிவிலும், கையெழுத்து வடிவிலும் உள்ளது. இதை எழுதியவர் குளத்தூர் பரஞ்சோதி என்பவர். இவர் தன் ஆசிரியர் ராமலிங்க தேசிகர்

என்பவரின் அறிவுறுத்தலில் சமஸ்கிருத மொழியிலிருந்த கதையைத் தமிழ்படுத்தினார். எட்டுவடிவில் உள்ள இந்தத் தலபுராணத்தில் 460 விருத்தப்பாடல்கள் உள்ளன. இது தாழக்குடி கோயிலில் 1841–ல் அரங்கேறியிருக்கிறது.

இந்த புராண ஆசிரியரான தர்மலிங்க தேசிகர் (சுப்புக்குருக்கள்) பாண்டி நாட்டிலிருந்து இங்கே குடியேறியவர். இத்தலபுராணத்தில் தாழக்குடி ஊர் சயந்தீஸ்வரர் கோயில் சிவன் இந்திரன் கதையுடன் சேர்த்துக் கூறப்படுகிறது.

இத்தலபுராணக்கதை வால்மீகி ராமாயணம் சுந்தர காண்டத்தில் வரும் சயந்தன் கதையிலிருந்து தொடங்குகிறது. இராமன் வனவாசத்தின்போது ஒருமுறை காட்டில் அமர்ந்திருந்தான். சீதை அவர் மடியில் படுத்திருந்தாள். இருவரும் அயர்ந்து உறங்கிவிட்டனர். அப்போது இந்திரனின் மகன் ஜயந்தன் காகமாக வந்து சீதையின் உடலைக் கொத்தினான். இரத்தம் சிந்தியது. கண்விழித்த இராமன் சினமுற்று புல்லைப் பறித்து மந்திரம் ஓதி அவன் மேல் ஏவினான். அது அவனைத் துரத்தியது. அவன் ராமனைச் சரணடையவே அந்த மந்திரம் சயந்தனின் ஒரு கண்ணைப் பறித்தது.

இந்த சயந்தன் தன் பாவம் போக தாழக்குடியில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து வழிபட்டான். பின் சாபவிமோசனம் பெற்றான். அவன் வழிபட்ட சிவன், சயந்தீஸ்வரன் எனப்பட்டான்.

தாழக்குடி ஜயந்திஸ்வரர் கோயில் கட்டப்பட்டதன் கதையையும் தலபுராண ஆசிரியர் கூறுகிறார். இதைப் பலவாறாகவும் எடுத்துக்கொள்ளலாம். திருநெல்வேலி மாவட்டம் களக்காட்டில் வீரகேரளன் என்ற அரசன் இருந்தான். அவன் வேணாட்டு மரபைச் சேர்ந்தவன். அவன் பலநாட்கள் குழந்தையின்றி வருந்தியபோது அகத்தியர் கனவில் தோன்றி தாழக்குடி ஊரில் குடிகொண்டிருக்கும் ஜெயந்தீஸ்வரனுக்கு கோயில் எடுக்கக் கூறினார். அவனும் அப்படியே செய்து குறை நீங்கினான். இங்கு ஒரு குளமும் வெட்டினான். இது “ வீரகேரளப்பேரேரி ” என அழைக்கப்படுகிறது.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் ஒரு ஏக்கர் 41 செண்ட் பரப்புடையது. கோயில் தெப்பக்குளமும் ஒரு ஏக்கர் பரப்புடையது. திட்டமிட்டு கட்டப்பட்ட கோயில். இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம், முகமண்டபம், திருமண மண்டபம் முகப்பு மண்டபம் என அமைந்தது.

முகப்பு மண்டபம் கேரளபாணியில் அமைந்தது; ஓடு வேய்ந்தது. கோயில் நுழைவாயில் யானை செல்லுமளவுக்கு உயரமானது. இரண்டு பிரகாரங்கள்; கருவறையை அடுத்த அர்த்த மண்டபத்தை நமசிவாமண்டபம் என்கின்றனர். இங்கு சிவ அடையாளங்களை உடைய துவாரபாலகர் சிற்பங்கள் உண்டு.

## கருவறை மூலவர்:

கருவறை சிவன் ஆவுடையின் கீழ் 32 அடி ஆழத்தில் இருப்பது என்கின்றனர். இந்த லிங்க வடிவம் 12 ஆவுடைகளின் மேல் உள்ளது என்பதை 19–ஆம் நூற்றாண்டு ஆரம்பத்தில் நடந்த குடமுழுக்கு விழாவில் கண்டறிந்தனர் என்கின்றனர். இந்த சிவலிங்கம் கங்கையில் நீராட்டி வந்தது எனத் தலபுராணம் கூறும்.

## பரிவார தெய்வங்கள்:

கருவறையின் வலப்புறம் தேவிக்குத் தனிக்கோயில்; அழகம்மன் எனப்படுகிறாள். சுவாமியின் இடதுபுறம் தேவியை அமைப்பது வழக்கம். ஆனால் பாண்டிநாட்டு மரபின்படி அம்மன் வலதுபுறம் இருக்கிறாள். அம்மன் நின்ற கோலம். வலதுகையில் நீலோத்பவ மலர், இடது கை லோலாஹஸ்தம்; துவிபங்க வடிவம்.

கருவறையின் வெளியே தென்திசையில் தட்சிணா மூர்த்தி நான்கு கைகளுடன் உள்ளார். வடமேற்கு மூலையில் சுப்பிரமணியர், சண்டேஸ்வரர், பிரகாரத்தின் வடக்கே காகவாகனத்தில் சனீஸ்வரர், யாகசாலையை அடுத்து நடராஜர், காலபைரவர், சந்திரன் ஆகியோர் உள்ளனர். இவை கல்படிமங்கள். விழாக் காலங்களில் வாகனங்களில் கொண்டு செல்வதற்கும், அர்ச்சனைக்கும் உரியதாக 17 செப்புப்படிமங்கள் உள்ளன.

## கல்வெட்டுக்கள்:

இக்கோயிலில் 6 கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவை எல்லாமே தமிழில் அமைந்தவை. இவற்றில் பழைய கல்வெட்டு 1532 –ஆம் ஆண்டினது. பிற 16ஆம் நூற்றாண்டினவை. ஒன்று 18–ஆம் நூற்றாண்டினது. இந்தக் கல்வெட்டுகள் கோயிலுக்கு நந்தவனத்திற்கு நிலம் கொடுத்ததும், பூஜை நடத்த பணம் கொடுத்ததும் ஆன செய்திகளைக் கூறுகின்றன. ஒரு கல்வெட்டு முன்மண்டப தெற்கு பக்கம் திருப்பணி நடந்ததைக் குறிப்பிடும். இது கி.பி.17–ஆம் நூற்றாண்டினது. ஒரு கல்வெட்டு மாலையில் நடந்த செண்பகராமன் பூஜை நடந்ததைக் கூறும். 1532–ஆம் ஆண்டு உதையமார்த்தாணடவர்மா என்ற வேணாட்டு அரசன் கல்வெட்டு கோயில் பிரகாரத்தில் காணப்படுகிறது. இந்த அரசன் களக்காட்டு என்ற சோழகுலவல்லிபுரத்தில் இருந்தபோது இக்கோயில் ஸ்ரீபண்டாரகணக்கரை நியமித்திருக்கிறான். இதனால் கி.பி.16–ஆம் நூற்றாண்டில் அரசனின் நேரடிப் பார்வையில் இது இருந்தது தெரிகிறது.

## சிற்பம்:

கருவறை மூலவரை அடுத்து இருக்கும் நடராஜரின் படிமம் ஒரே கல்லில் செய்யப்பட்டது. திருவாச்சி பீடம் எல்லாம் கூட கல்லால் அமைந்தவை.

மணிமண்டபங்களில் கோயிலின் கைங்கர்யம் செய்பவரின் புடைப்புச் சிற்பம் உள்ளது.. அர்த்த மண்டபம், சண்டேஸ்வரர் கோயில் உட்பிரகாரம் ஆகிய இடங்களில் சடையுடைய முனிவர் இரண்டு பக்கங்களிலும் சீடர்கள் என அமைந்த சிற்பம் உள்ளது. இது இக்கோயிலின் 7 இடங்களில் ஒரே மாதிரி உள்ளது. இந்த முனிவர் இவ்வூருடனோ கோயிலுடனோ கோயிலை அமைத்த அரசுடனோ தொடர்புடையவராய் இருக்கலாம்.

மகாமண்டபத்தில் உள்ள தூண்களில் பெண் சிற்பங்கள், இவர்களின் ஆடை அணிகள் கொண்டை அமைப்பு 16–ஆம் நூற்றாண்டு பண்பாட்டைப் பறை சாற்றுவன. சுவாமி கோயிலிலிருந்து அம்மன்கோயிலுக்குச் செல்லும் மண்டபத்தில்

தேரும், அதில் அழகம்மன் இருப்பதும் ஆன காட்சி சிற்பம் உள்ளது. இத்தேரின் சக்கரத்தினடியில் ஒரு குழந்தை, அருகே ஒரு பூசாரி, இது இவ்வூர் தொடர்பான தெய்வ சோதனையாக இருக்கலாம். இக்கோயிலில் இரண்டு தேர்கள், சுவாமி தேர், அம்மன் தேர். அம்மன்தேர் 1880–ல் அழிந்துவிட்டது. இப்போது ஒரு தேர் மட்டுமே உள்ளது.

நமசிவாய மண்டபத்தில் காகம், சிவனை வழிபடும் சிற்பம் உள்ளது. இது தலவரலாறு தொடர்பானது. சிவனை யானை வழி படும் சிற்பமும் ஐராவதம் சிவனை வழிபட்ட வரலாறு தொடர்பானது தான். கருவறை விமானத்தின் தெற்கே கோயிலின் கட்டுமான அளவுகோல் உள்ளது.

## பூஜை

காலை 5.30 மணி நிர்மால்ய / உஷா பூஜை

காலை 6.00 மணி

காலை 10.00 மணி உச்சகால பூஜை

மாலை 5.00 மணி நடைதிறப்பு

மாலை 6.30 மணி சாயராட்சை

இரவு 7.30 மணி அத்தாள பூஜை

## விழாக்கள்:

பிரதோஷம் மாத சிவராத்திரி, மார்கழி சிறப்புவிழா, திருக்கல்யாண விழா முக்கிய விழாக்கள். பங்குனி மாதம் 10 நாட்கள் திருவிழா, 9–ஆம் நாள் தேர் திருவிழா. திருக்கல்யாண விழா, தை மாதம் உத்திர நட்சத்திரத்தில் கால்நாட்டுதல், சுவாமி அம்மனுக்கு மாலை மாற்றுதல், கதிர் குளித்தல், மூன்று தாலிகளை அணிதல், பட்டணப் பிரவேசம் என அமைந்தது. ஐந்தாம் நாள் ஊர் மக்களுக்கு அன்னதானம் உண்டு.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 282495.



# 19. அருள்மிகு இராகவேஸ்வரர் திருக்கோயில்

தெரிசனங்கோப்பு, தோவாளை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | இராகவேஸ்வரர் |
| இறைவி | – | உலக நாயகி |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு |

## அமைவிடம்

இக்கோயில் நாகர்கோவில் – அழகியபாண்டியபுரம் சாலையில் 15 கி.மீ. தொலைவில் அமைந்த தெரிசனங்கோப்பு ஊரில் இருப்பது. நாகர்கோவிலில் இருந்து பேருந்து வசதி உண்டு. (தடம் எண்.4) தெரிசனங்கோப்பு பஸ் நிறுத்தத்தில் இறங்கி மகாதேவ ஐயர் ஆயுர்வேத வைத்திய சாலையை ஒட்டிய தெருவில் நடந்து செல்லலாம். தேரோடும் வீதி, எளிதாக கோயிலை அடைய முடியும். பழையாற்றின் கரையில் உள்ள முக்கிய கோயில்களில் ஒன்று.

## தலபுராணம்:

தெரிசனங்கோப்பு என்ற இவ்வூரின் வரலாறு இராமாயணத்துடன் சார்த்து பேசப்படுகிறது. இராமன் தாடகையை வதம் செய்தபோது வில்லை ஊன்றி நின்ற இடம் இவ்வூர் என்பது

கதை. இவ்வூர் அருகே உள்ள மலையின் பெயர் தாடகை மலை. இராமன் தாடகையை வதம் செய்த பிறகு ஸ்திரீஹஸ்தி தோஷம் தீர இக்கோயில் சிவனை வழிபட்டார். இராவணனைக் கொன்றபின் பிரம்மஹஸ்தி தோஷம் தீர இவ்வூரில் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டான் என்னும் கதைகளை இப்போதும் கேட்க முடியும். இங்குள்ள இறைவி லோகாம்பாள், லோகநாயகி. உலக நாயகியை இராமன் தனியே வழிபட்டு தன் பாவங்களைப் போக்கினானாம்.

## கோயில் அமைப்பு:

கோயில் ஊரின் கிழக்கே இருப்பது. எதிரே குளம். கோயில் கிழக்குப் பார்த்தது. கிழக்கு தேரோடும் சாலை, பெரிய வளாகத்தில் சிவன், அம்மன் ஆகியோருக்குத் தனிக்கோயில்கள். கோயிலைச் சுற்றி பெரிய மதிற்சுவர் உண்டு. கோயிலின் முன் சிறு கோபுர பாணியிலான கேரளபாணி ஒட்டுக்கூரை. கோயிலின் முன் வளாகம் பெரியது. பலிபீடம், கொடிமரம் சிவன்கோயிலின் முன் உள்ளன. கொடிமரம் செம்புத்தகட்டால் வேயப்பட்டது. பிற்காலத்தில் நிறுவப்பட்டது.

பெரிய வளாகத்தில் இருக்கின்ற சிவன், அம்மன் கோயில்கள் தரைமட்டத்தில் இருந்து இரண்டரை மீட்டர் உயர மேடையில் உள்ளன. திருக்கோயில்களைச் சுற்றி வர தனித்தனியே கல் தளம் உண்டு. பிற கோயில்களில் காணப்படாதது இது. இக்கோயில் சமதரையில் இருந்து உயர்ந்து இருப்பதற்குத் தலபுராணத்தில் காரணக் கதை இல்லை. பழையாற்றில் நீர் பெருக்கெடுக்கும்போது இக்கோயிலைப் பாதிக்கக்கூடாது என்பதற்காகவே கோயில் உயரமான மேடையில் உள்ளது என்று சொல்லப்படுவது ஒரு காரணம்.

கோயில் வெளிப்பிரகாரத்தில் நிறைய வில்வமரங்கள் உள்ளன. அரச மரம், வேறு மரங்கள், அமைதியான சூழ்நிலை காணப்படுகிறது.

சிவன்கோயிலின் முன்மண்டபத்தில் ஏறிச்செல்ல வடக்கிலும் தெற்கிலும் எட்டு படிகள் உண்டு. நேர்கிழக்கில் படிகள் இல்லை. முன்மண்டபத்தை அடுத்து எட்டு தூண்கள், கொண்ட

முகமண்டபம், அடுத்து அர்த்தமண்டபம் இதன் தென்பகுதியில் வாசல் உண்டு. வடக்கு விழாக்கால படிமங்களும், வழிபாடு படி மங்களும் உள்ளன. இம்மண்டப தூண்களில் சிற்பங்கள் இல்லை.

## கருவறை:

கருவறையின் முன் சிறிய அந்தராளம் உண்டு. கருவறையின் சுவர் பகுதி சோழர் கட்டுமானப் பாணி இதன் பழமையைக் காட்டுவது. விமானம் ஒரே ஒரு கும்பம் கொண்டது.

அம்மன் கோயிலின் முன்பு சிறு முன்மண்டபம், இதை வாகன மண்டபம் என்கின்றனர். கோவில் வாகனங்கள் இங்கே உள்ளன. 12 தூண்கள் கொண்ட இந்த மண்டபத்தில் வாகனங்களே நிறைந்து காணப்படுக்கின்றன. இந்த முகமண்டபத்தை அடுத்து இருப்பது ஆறு தூண்கள் கொண்ட அர்த்த மண்டபம். இதன் வடபகுதியில் பள்ளியறை, தொட்டில். பள்ளியறையில் தினமும் ஸ்ரீபாதம் வைக்கப்படும். கருவறை அந்தராளம் என கொண்டது. மூலவர் சிவன் லிங்க வடிவினன். கல்படிமம், அம்மன் நின்றகோலம் கல்படிமம், இரண்டு கைகள், மலர், லோலாஹஸ்தம்.

## பரிவார தெய்வங்கள்:

வெளிப்பிரகாரத்தில் கிழக்குநோக்கி தர்மசாஸ்தா கோயில், நாகரும் உண்டு. சிவன்கோயிலில் முன்மண்டபத்தில் வடக்கில் தெற்கு நோக்கி காலபைரவர் உள்ளார். இரண்டு கைகள், ஒரு கையில் சூலம். உட்பிரகாரம் தெற்கே தட்சிணாமூர்த்தி இருக்கிறார். கன்னிமூலையில் விநாயகர், கிழக்குநோக்கி நவநீத கிருஷ்ணன், வடக்கு பிரகாரம் முருகன் வள்ளி தெய்வானையுடன் கல்படிமம், சண்டிகேஸ்வரர், பூதத்தான் போன்ற தெய்வங்களும் பரிவார தெய்வங்களாக உள்ளனர்.

## தேர்:

ஒரு சுவாமி தேர் உள்ளது. கோயிலின் எதிரே பக்தர்கள் குளிப்பதற்குள்ள குளம் உண்டு.

## கல்வெட்டுக்கள் / சிற்பங்கள்:

கோயிலில் சிற்பங்கள் குறைவு, பாவைவிளக்கு பிற் காலத்தது. அம்மன் கோயிலின் பின் சிவனும், பார்வதியும் புடைப்பு சிற்பமாய் உள்ளனர். சிவன்கோயில் அர்த்த மண்டபம் வடபுற மண்டபத்தில் நிறைய செப்புபடிமங்கள் உள்ளன. நடராஜர் சிவகாமி, காரைக்கால் அம்மையர், மாணிக்கவாசகர், விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, திருநாவுக்கரசர், சுந்தரர், சம்பந்தர் என்னும் படிமங்கள். சிவன் மான்மழுவுடன் நின்ற கோலம். அருகே சிவகாமி, இராமரின் படிமங்கள் இரண்டும் உள்ளன. இக்கோயிலில் ஐந்து கல்வெட்டுகள் காணப்படுகின்றன. முதல் ராஜனின் எட்டாம் ஆட்சி ஆண்டு கல்வெட்டும், ராஜராஜனின் 10–ஆம் ஆட்சி ஆண்டு கல்வெட்டும் ஆரம்பத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. பிற கல்வெட்டுகள் 1558, 1618, 1623 ஆண்டினவை.

முதல் ராஜராஜனின் கல்வெட்டு 10–ஆம் நூற்றாண்டினது. இது ஸ்வஸ்திஸ்ரீ காந்தளூர்சாலை கலமறுத்து அருளி கோப்பர கேசரி நாஞ்சிநாட்டு தேவதானம் திருவரன்கோப்பில் கருவறை தேவர்க்கு நிபந்தம் அளித்ததைக் கூறும். இரண்டாம் கல்வெட்டு இராஜராஜன் 10–ஆம் ஆட்சியாண்டினது. இது வட்டெழுத்துக் கல்வெட்டு. இந்த நிபந்தக் கல்வெட்டின்படி இக்கோயிலுக்கு ஒரு சபை இருந்தது தெரிகிறது.

இவ்விரு கல்வெட்டுகள் வழி இக்கோயிலின் கருவறைப் பகுதி 10–ஆம் நூற்றாண்டில் இருந்தது என்பதும் அதற்கு முன்பு இது வழிபாடு கோயிலாக இருந்ததும் தெரிகிறது. முதல் இராஜராஜனின் "காந்தளூர்சாலை கலமறுத்து" என்ற தொடர் இக்கல்வெட்டிலேயே முதலில் வருகிறது.

1618–ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலில் பூரட்டாதி நட்சத்திரத்தில் விஷேச பூஜை நடந்ததைக் கூறும். சிவன் கோயில் கருவறையில் 1558–ஆம் ஆண்டு கல்வெட்டு நிபந்தக் கல்வெட்டு. அம்மன் கோயில் கல்வெட்டு, கூடியப்பட்டிணம் இராகவன் என்பவர் அர்த்தஜாம பூஜை நடத்த நிபந்தம் அளித்ததைக் கூறும்.

## பூஜை

காலை மணி 5.30 அபிஷேகம்

காலை மணி 6.30 பூஜை / ஸ்ரீபலி

காலை மணி 9.00 பூஜை / ஸ்ரீபலி

காலை மணி 9.30 திருநடை சார்த்துதல்

மாலை  மணி 5.00 திருநடை திறப்பு

மாலை மணி 6.30 சாயராட்சை  பூஜை

மாலை மணி 7.00 பள்ளியறை பூஜை

இரவு மணி 7.30 திருநடை சார்த்துதல்

சித்திரை மாதம் புணர்பூச நட்சத்திரத்தில் கொடியேறி பத்து நாட்கள் திருவிழா.  பௌர்ணமியில் ஆறாட்டு.  9–ஆம் நாள் தேர்த் திருவிழா.



**தாடகை மலை**

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 282495.



# 20. அருள்மிகு மீனாட்சிசுந்தரேஸ்வரர் திருக்கோயில்

## ஆரல்வாய்மொழி, தோவாளை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பரகோடி கண்டன் சாஸ்தா சுந்தரேஸ்வரர் |
| இறைவி | – | மீனாட்சியம்மன் |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |

### அமைவிடம்

நாகர்கோவிலிருந்து கிழக்கே திருநெல்வேலி செல்லும் தேசீய நெடுஞ்சாலையில் 16 கி.மீ தொலைவில் ஆரல்வாய்மொழி ஊர் உள்ளது. ஆரல்வாய்மொழி பேருந்து நிலையத்திலிருந்து இறங்கி இடதுபுறம் செல்லும் சாலை வழியாக 1 கி.மீ தூரத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### தலபுராணம்:

இக்கோயிலின் பெயர் மீனாட்சி சுந்தரேஸ்வரர் என குறிக்கப்பட்டாலும் மூலவராக பரகோடி கண்டன் சாஸ்தாவே காணப்படுகிறார். அதனால் சாஸ்தா குறித்த தலபுராணம் இத்தலத்திற்குப் பொருந்தும். இக்கோயில் தலபுராணக் கதைகள்

சாஸ்தா குறித்தும், மீனாட்சியம்மன் குறித்தும் உள்ளன. இவை வாய்மொழி மரபில் உள்ளவை. எழுதி வைக்கப்படவில்லை.

இக்கோயிலின் மூல தெய்வமான சாஸ்தா சுயம்புவாக உருவானவர் என்பது ஐதீகம். முன்னொரு காலத்தில் இந்த ஊரில் தொண்டைமான் பரவர்கள் என்னும் சமூகத்தினர் வாழ்ந்துள்ளனர். ஒருமுறை இச்சமூக மக்கள் வேட்டைக்கு சென்றபோது முயல் ஒன்று செடிக்குள் ஒளிந்ததை கண்டனர். அதன் மேல் வேலால் குத்தினர். உடனே இரத்தம் வந்தது. செடிகளை விலக்கி முயலை எடுக்கப் போனார்கள். அங்கே ஒரு மூர்த்தியின் அடையாளத்தை கண்டனர். சாஸ்தாவை முதலில் பரவர்கள் கண்டதால் இவர் பரகோடி கண்டன் சாஸ்தா என பெயர் பெற்றார்.

பரவர்கள் வேலை குத்திய இடத்தில் முனிவரின் சமாதி இருந்தது. அந்த இடமே சாஸ்தாவின் கோயிலானது என்றும் ஒரு கதை உண்டு. அவ்வையார் என்ற புலவர் மூன்று மன்னர்களுக்கும் சமரசம் செய்து வைக்க, கூடியபோது பாண்டியன் தன் குல தெய்வமான மீனாட்சியைக் கொண்டு வந்து ஏற்கனவே சாஸ்தா இருந்த இடத்தில் பிரதிஷ்டை செய்து வழிபட்டான் என்பதும் ஒரு கதை.

மதுரையில் அன்னியர் படை எடுத்து வந்த போது அங்குள்ள மீனாட்சியின் தங்கப் படிமத்தை ஆரல்வாய்மொழி கிலுகிலுப்பை காட்டில் மறைத்து வைத்ததாகவும் பகை நீங்கிய போது அதை எடுத்துச்சென்றதாகவும் மீனாட்சி இருந்த இடம் கோயிலாக உருப்பெற்றது என்பது ஒரு கதை.

## பூஜை விவரம்

காலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு
காலை 6.30 மணிக்கு உஷ பூஜை
காலை 9.05 மணிக்கு காலசுத்தி பூஜை
காலை 10.30 மணிக்கு உச்சகால பூஜை
காலை 11.00 மணிக்கு திருநடை சார்த்துதல்
மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு

மாலை 6.30 மணிக்கு சாயராட்சை தீபாராதனை

இரவு 7. 45 மணிக்கு அர்த்தசாம பூஜை

இரவு 8.00 மணிக்கு அத்தாழ பூஜை

## திருவிழா:

இக்கோயிலில் பங்குனி மாதம் 10 நாட்கள் திருவிழாவும், சித்திரை மாதம் 4 நாட்கள் திருக்கல்யாண விழாவும், தம்புரான் கொடை விழா என மூன்று முக்கிய விழாக்கள் நடைபெற்று வருகிறது.



**தேவபிரசன்ன சடங்கு**

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 282495.



# 21. அருள்மிகு எம்பெருமானார் திருக்கோயில்

### சிறமடம், தோவாளை வட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | – | எம்பெருமான் |
| இறைவி | – | பூதேவி, ஸ்ரீதேவி |
| தலவிருட்சம் | – | அரச மரம் |
| ஆகமம் | – | பாஞ்சராத்னம் |

## அமைவிடம்

நாகர்கோவில் – அழகியபாண்டியபுரம் செல்லும் சாலையில் (பாலமோர் சாலை) திட்டுவிளை பேருந்துநிலையத்திலிருந்து மேற்கே 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. சானல் கரையோரம் செல்லும் சிறு சாலையில் இருப்பது. இது காட்டுக்கோயில். பஸ் வசதி இல்லை. திட்டுவிளையில் இருந்து ஆட்டோ, அல்லது காரில் செல்லலாம். கோயில் வளாகத்தில் வாகனங்களை நிறுத்த வசதி உண்டு. கோவில் காலை 7.00 மணி முதல் 9.30 மணி வரைதான் திறந்திருக்கும். இந்த நேரத்தில் மட்டுமே செல்ல முடியும்.

இக்கோயில் மேற்கு தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியான வேளிமலை தொடர்ச்சியின் அடிவாரத்தில் இருப்பது. இப்பகுதி

வேளிமலையைக் குடமுருட்டி மலை என்கின்றனர். குரங்கு, பன்றி, முள்ளம்பன்றி போன்ற காட்டுவிலங்குகள் நிறைந்த பகுதி. ஆதலால் சிறப்பு விஷேசங்களில் கூட இரவு பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. நாகர்கோவிலில் இருந்து இக்கோயில் 17 கி.மீ தொலைவில் இருப்பது.

## தலபுராணம்:

இக்கோயில் அருகே உள்ள வேளிமலையில்தான் மூலக்கோயில் இருந்தது. பூசகரால் அந்த மலையில் மேல் தினமும் ஏறிச்சென்று பூஜை செய்ய முடியவில்லை. அதனால் எம் பெருமாளிடம் வேண்டினார். அன்று கனவில் ஒரு குடம் நீர் கொண்டு வந்து என் திருமுன்பு வை அது உருண்டு சென்று எந்த இடத்தில் நிற்கின்றதோ அந்த இடத்தில் எனக்குக் கோயில் கட்டு என்றாராம். அந்த பூசகரும் அப்படியே செய்தார். அன்று குடம் உருண்டு மலையடிவாரத்தில் சமதரையில் வந்து விழுந்தது. அங்கே கோயில் எடுத்தனர். இதன் பிறகு மூலக்கோயில் இருந்த வேளிமலை குடமுருட்டி மலை என்று பெயர் பெற்றது.

இக்கோயில் வளாகத்தில் ஆவுடையாள் கோயில் தரை மட்டத்தில் இருந்து 10 அடி உயரம் சிறு மேட்டில் உள்ளது. இது தனியாருக்கு. இது தொடர்பாகவும் ஒரு கதை பேசப்படுகிறது. ஆவுடையம்மாள் விஸ்வகர்மா சமூகத்து பெண். அவளை அரச குடும்பத்து இளைஞன் விரும்பி மணக்க முயன்றான். ஆனால் அவள் குடும்பத்தினருக்கு விருப்பம் இல்லை. இதனால் ஏற்பட்ட மனக்கசப்பில் அவள் தன் உயிரை மாய்த்துக் கொண்டாள். அவள் உயிரை மாய்த்த இடமே இப்போது கோயிலாக உள்ளது.

## கோயில் அமைப்பு:

கன்னியாகுமரி மாவட்ட கோயில்களில் குடியிருப்பு இல்லாத பகுதிகளில் உள்ள கோயில்களில் இது முக்கியமானது. இது மலையடிவாரத்தில் அனந்தனாறு சானல் கரையில் உள்ளது. கோயிலைச் சுற்றி தோட்டங்கள், வயல்கள், நீர்நிலைகள் உள்ளன.

கோயிலின் முன்பகுதியில் சலசலத்துக்கொண்டு ஓடும் நீரோடை. கோயிலின் முன் பகுதியில் பெரிய வளாகம் சுமார் 2 ஏக்கர் பரப்பளவு உள்ள இடம்.

கோயில் கிழக்குப் பார்த்தது. கோயிலைச் சுற்றி திறந்த வெளிப்பிரகாரம். அரச மரம், வேம்பு என பல மரங்கள் உள்ளன. கோயிலின் முன் சிறு மண்டபம், பாவை விளக்குகள், நடைபாதை, இருமருங்கும் திண்ணை. அடுத்து முக மண்டபம், 18 தூண்கள் கொண்ட இம்மண்டபத்தின் அமைப்பு பிற்காலம் என காட்டுகிறது. இதை அடுத்து கருவறை. கருவறையைச் சுற்றி சுற்றாலை மண்டபமும், திறந்த வெளி உட்பிரகாரமும் உண்டு.

கருவறையின் முன் உள்ள அர்த்தமண்டபத்தில் நின்ற கோல கருடன் உள்ளார். கருவறை, சிறிய அந்தராளம் உடையது. கோயில் முழுவதும் கருங்கல் மண்டபம்.

## மூலவர்:

கருவறை மூலவர் எம்பெருமாள் எனப்படுகிறார். நின்றகோலம், சங்கு சக்கரம் ஒருகை, அபயம், கடிஹஸ்தம், இருமருங்கும் பூதேவி ஸ்ரீதேவி, ஒரு கை மலர் மொட்டு, இன்னொரு கை லோலாஹஸ்தம். மூன்றும் கல்படிமங்கள்.

## பரிவார தெய்வங்கள்:

வெளிப்பிரகாரத்தில் தென்கிழக்கே ஆஞ்சநேயர் கோயில், தென் மேற்கே விஷ்ணு, துர்க்கை கோயில், வடகிழக்கு தர்மசாஸ்தா, நாகர் சிலைகள் ஆகியன உள்ளன. இவை எல்லாமே கல்படிமங்கள். உள்பிரகார கன்னி மூலையில் விநாயகர் கோவில் உள்ளது.

## சிற்பங்கள்:

இக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை. கோயில் கட்டு மானப்படி 16 அல்லது 17– ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம். கோயில் முகமண்டபத்தில் தூண்களில் வியாக்ரபாதர், நடனப் பெண், நரசிம்மர், சாஸ்தா, பீமன், பிரம்மா ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன.

## பூஜை

காலை மணி 7.00 நடை திறப்பு

காலை மணி 7.30 பூஜை

காலை மணி 9.30 திருநடை சார்த்துதல்.

புரட்டாசி மாத சனிக்கிழமை, வைகுண்ட ஏகாதசி, கோகுலாஷ்டமி போன்ற தினங்களில் சிறப்பு பூஜை அன்னதானம் உண்டு. ஆண்டு திருவிழா கிடையாது.



தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 282495.



# 22. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## தோவாளை, தோவாளை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | அமரர் பதிகாத்த பெருமாள் |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு |
| தல விருட்சம் | – | வேங்கை |

## அமைவிடம்

தோவாளை என்ற ஊர் நாகர்கோவில் திருநெல்வேலி சாலையில் 10 கி.மீ தொலைவில் உள்ளது. இந்த ஊர் தெற்கு ஊர், வடக்கூர் என்ற இரண்டு பிரிவாக உள்ளது. முருகன் கோயில் வடக்கூரில் உள்ளது. தோவாளை பேருந்து நிறுத்தத்திலிருந்து அரை கிலோமீட்டருக்கும் குறைவான தூரம் நடந்தே செல்லலாம். மலையடிவாரத்தில் இருந்து கோயிலுக்கு 108 படிகள் ஏறிச் சென்று கோயிலை அடையலாம். அடிவாரத்தில் இருந்து கோயிலுக்கு செல்ல வேறு வழி இல்லை. நாகர்கோவிலில் தங்கி விட்டு இவ்வூருக்கு வந்து முருகன் கோயிலையும் மலைபடி வாரத்தில் உள்ள கிருஷ்ணன்கோயிலையும் தரிசிக்கலாம். வாகனங்களில் செல்வோர் மலையடிவாரத்தில் வாகனங்களை நிறுத்தலாம்

## தலபுராணம்:

இக்கோயில் தலபுராணம் எழுதி வைக்கப்படவில்லை. சுசீந்திரம் தாணுமாலையன் கோயில் தலபுராணத்துடன் தொடர்புடையதாய் காணப்படுகிறது. இந்திரன் தான் பெற்ற சாபத்தை தீர்க்க மும்மூர்த்திகளை வழிபட சுசீந்திரம் வருகிறான். வரும் வழியில் இந்திரனின் யானை ஐராவதம் மலரின் வாசைன தாங்காமல் நிற்கிறது. இந்திரன் அந்த ஊரின் விசேசம் என்ன வென்று தேவலோக ஜோதிடனை கேட்கிறான். அவன் பூலோகத்தில் மலர்கள் நிறைந்தது இத்தலம் என்றார்.

இந்திரன் தன் வழிபாட்டிற்குரிய அம்மலர்களை இங்கிருந்து பறிக்கிறார். தன் சாபம் முடிந்த பின்பும் தேவலோக பூஜைக்கு இங்கிருந்து மலர்களை பறிக்க தேவர்கள் சிலரை இங்கே குடி அமர்த்தினான். தேவர்கள் இங்கு குடியேறியதால் தேவர் வாழ்வினர் எனப்பெயர் பெற்றது. பின் தோவாளை என அழைக்கப்பட்டது என்பது வழக்காறு.

## கோயில் அமைப்பு:

மூலவர் கிழக்கு நோக்கியவர் என்றாலும் கோயிலின் முக்கியவழி மேற்கு நோக்கி உள்ளது. இக்கோயில் இருக்கும் இடம் 6 ஏக்கர் பரப்பளவுள்ள சிறிய பாதை. கோயிலின் மேற்கு வாசலில் சிறிய முன்மண்டபமும், தோரண வாயிலும் உள்ளன. இவ்வழி சென்று கிழக்கு வாசலுக்குச் செல்லலாம். கோயில் மிகச் சிறியது. வெளிப்பிரகாரம், உட்பிரகாரம் இரு பிரகாரங்களை உடையது. வெளிப்பிரகாரம் வெட்டவெளியில் உள்ளது. இக்கோயில் மொத்தமும் கருங்கல்லானது. கருவறை அந்தராளம், அர்த்த மண்டபம், உட்பிரகாரம் என அமைந்தது. கிழக்கு வாசலில் ஒரு சிறிய முன் மண்டபம் உண்டு.

## மூலவர்:

தோவாளை ஊர் கல்வெட்டு ஒன்று இக்கோயில் இறைவனை அமரர்பதி காத்த நயினார் என்று குறிப்பிடுகிறது. மரபு வழியே இக்கோயில் இறைவனை இப்படியே வணங்குகின்றனர்.

மூலவர் நின்ற கோலத்தில் நான்கு கைகளுடன் பாலமுருகனாக காட்சி அளிக்கிறார். கரங்களில் அபய வரத ஹஸ்தம் உள்ளது. 90 செ.மீ உயரம் உடைய இக்கல் படிமம் கவர்ச்சியானது.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலின் உட்பகுதியில் மண்டப தூண்களில் வீரபாகு, வீரமகேந்திரர், விநாயகர், முருகன் ஆகியோரின் புடைப்பு சிற்பங்கள் உள்ளன. இவற்றையும் பக்தர்கள் வழிபடுகின்றனர்.

## கல்வெட்டு:

இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டு கி.பி.15 அல்லது 16 ஆம் நூற்றாண்டினது என தொல்லியல் அறிக்கை கூறும். இதனால் இக்கோயில் 500 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்றும், இக்காலத்தை ஒட்டி கோவிலின் கட்டுமானம் நடந்தது எனவும் யூகிக்கலாம்.

## பூஜை

காலை 5.00 மணிக்கு நடை திறப்பு
காலை 5.30 மணிக்கு அபிஷேக தீபாராதனை
காலை 10.00 மணிக்கு திருநடை சார்த்துதல்
மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு சாயராட்சை
இரவு 8.00 மணிக்கு தீபாராதனை, திருநடை சார்த்துதல்.

## விழா:

இக்கோயிலின் முக்கிய விழாக்கள் ஆடி மாதம் கடைசி செவ்வாய் கிழமை நடைபெறும் மலர் முழுக்கு விழா; கந்தசஷ்டி விழாவில் முதல் நாள் பாலமுருகன் வடிவத்திலும் சிவபெருமான் வடிவத்திலும் 2, 3 ஆம் நாட்களில் அர்த்தநாரீஸ்வரர் வடிவத்திலும் 4ம் நாள் சங்கர நாராயணர் வடிவத்திலும் 5ஆம் நாள் சக்தியின் வடிவத்திலும் 6ஆம் நாள் போர்க்கால முருகன் வடிவத்திலும் மூலவர் அலங்காரம் செய்யப்படுவார்.

## நேர்ச்சை:

இக்கோயிலில் பாலாபிஷேகம் மற்றும் காவடி வழிபாடும் உண்டு.

## சிறப்புகள்:

இக்கோயிலை தரிசிக்கும் பக்தர்கள் இவ்வூரை அடுத்துள்ள மலையில் இருக்கும் செக்கர்கிரி (செக்கிடி மலை) முருகனையும் தரிசிக்கலாம்.

தோவாளையை அடுத்த ஆரல்வாய்மொழியில் இருந்து 2 கி.மீ தூரத்திலும், தோவாளையில் இருந்து 2 கி.மீ தூரத்திலும் உள்ள செக்கர்கிரி மலை 600 அடி உயரம் உடையது. இம்மலை உச்சியில் முன்மண்டபமும் கருவறையும் கூடிய சிறிய கோயில் உள்ளது. மூலவர் பாலமுருகன் 40 செ.மீ உயரம். இக்கோயில் 1800ல் கட்டப்பட்டது என்பதற்கு கல்வெட்டுச் சான்று உண்டு. இங்கு ஒரு ஊற்றும் உள்ளது. இக்கோயிலுக்கு ஆடி அமாவாசை நாட்களில் சித்தர்கள் வருவார்கள் என்பது நம்பிக்கை.



**சிவாச்சாரியார் மரபு யாகசாலை**

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 282495.



# 23. அருள்மிகு இசக்கியம்மன் திருக்கோயில்

முப்பந்தல், தோவாளை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவி | – | இசக்கியம்மன் |
| ஆகமம் | – | சிவாச்சாரிய மரபு |

## அமைவிடம்

நாகர்கோவில் திருநெல்வேலி நெடுஞ்சாலையில் 17 கி.மீ தொலைவில் உள்ள முப்பந்தல் என்ற ஊரில் உள்ள கோயில். நாகர்கோவிலிலிருந்து 15 வரிசை எண் பேருந்தில் இவ்வூருக்குச் செல்ல முடியும்.

சாலைஓரக் கோயில். பேருந்து நிறுத்தம் உண்டு. வாகனங்கள் நிறுத்த வசதி உண்டு. ஆரல்வாய்மொழி மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயிலைத் தரிசித்து விட்டு முப்பந்தலுக்குச் செல்லலாம். ஆரல்வாய்மொழி ஊரிலிருந்து முப்பந்தல் 3 கி.மீ தொலைவில் இருப்பது. ஆரல்வாய்மொழியிலிருந்து பேருந்திலோ ஆட்டோவிலோ முப்பந்தல் செல்லலாம்.

## தலபுராணம்:

இக்கோயில் உருவானது தொடர்பாகவும், இசக்கியம்மன் தொடர்பாகவும் 5 கதைகள் உள்ளன. இவற்றில் சில எழுத்து வடிவிலும் உள்ளன.

இயக்கி/இசக்கி/யட்சி என வழங்கப்படும் இத்தெய்வம் பற்றி ஒரு கதைப்பாடல் உண்டு. அதில் வரும் கதை வருமாறு.

பழகைநல்லூரில் வாழ்ந்தவன் வேலவன். அவன் கோயில் பணிபுரிந்த சிவபார்ப்பானின் மகன். அந்த ஊரில் தேவதாசி குலத்தில் பிறந்த சிவகாமி என்பவளின் மகள் லட்சுமியிடம் ஆசை கொண்டான். லட்சுமி ஆடல் கலையில் வல்லவள். வேலவன் லட்சுமியின் வீடே கதி எனக்கிடந்தான். அவன் தன் சொத்துகளை எல்லாம் லட்சுமியின் வீட்டில் தங்கம், வெள்ளி நாணயங்களாகக் கொட்டினான். அவனிடம் கொடுக்க ஏதுமில்லை எனத் தெரிந்ததும் சிவகாமி அவனை வீட்டை விட்டு வெளியேற்றினாள்.

வேலவன் காட்டுவழி சென்றான். லட்சுமிக்கும் அவனைப் பிரிய மனம் இல்லை. வீட்டிலிருந்த தங்க நகைகளை அணிந்து கொண்டு அவனைத் தேடிச்சென்றாள். நடுக்காட்டில் அவனைக் கண்டுபிடித்தாள். வேலவன் நீ வீட்டிற்கு திரும்பி விடு என்றான். அவள் கேட்கவில்லை. நடந்த களைப்பில் அவள் உறங்கிய போது அவன் மனம் மாறியது. ஒரு கல்லைத் தூக்கி அவள் மேல் எறிந்து கொன்றான். அணிகலன்களை மூட்டையாகக் கட்டிக்கொண்டு புறப்பட்டான்.

லட்சுமியைக் காணாமல் அவள் அண்ணன் கழுக்கண்ட நட்டுவன் காட்டுவழிப் போனான். தங்கையின் உடலைக் கண்டான். துக்கம் தாங்காமல் தன்னை மாய்த்துக்கொண்டான். இருவரும் அடுத்த ஜன்மத்தில் அண்ணன், தங்கையராய் சோழ நாட்டில் பிறந்தனர். அந்த குழந்தைகளால் நாட்டுக்கு கெடுதல் வரும் என ஜோதிடர் கூறியதால். அவர்கள் காட்டில் விடப்பட்டனர். ஒருமுறை அய்யனார் கோயில் தெய்வம் அண்ணனைக் கொன்றது. அவன் தங்கை ஒரு வேப்பமரத்தில் தங்கினாள். அதை பழகை ஊர் மக்கள் வெட்டினர். அவர்களைப் பழிவாங்குவேன் என்றாள் லட்சுமி.

வேலவன், காட்டில் செல்லும் போது பாம்பு கடித்து இறந்தான். அடுத்த பிறவியில் காவிரிபூம்பட்டினத்தில் பிறந்தான். ஆனந்தன் எனப் பெயர் பெற்றான். ஒரு முறை வணிகம்செய்ய காட்டு வழி நடந்தான். அப்போது இசக்கியாக இருந்த லட்சுமி வழி மறித்தாள். கள்ளியை ஒடித்து குழந்தையாக்கி அவன் பிள்ளை அது என்றாள். இதைப் பார்த்து நியாயம் பேச வந்த பழகை ஊர் மக்களையும் தந்திரமாகக் கொன்றாள். பின் சிவனிடம் வரம் பெற்று இசக்கி எனப் பெயர் பெற்றாள்.

முப்பந்தல் கோயிலில் பரிவார தெய்வமாக உள்ள அவ்வையார் அம்மன் பற்றியும் சிலகதைகள் வழங்குகின்றன. ஒருமுறை அவ்வையார் முப்பந்தல் காட்டுவழி வரும் போது யாதவப் பெண் ஒருத்தியைச் சந்தித்தாள். அந்த பெண் அவளுக்கு உதவி செய்தாள். அவ்வை அவளுக்குத் திருமணம் செய்து வைத்தாள். மூன்று பந்தல்கள் கட்டி நாட்டில் உள்ளோரை வரவழைத்து உபசரித்தாள். மூன்று பந்தல்கள் கட்டிய இடம் முப்பந்தல் ஆனது. அதே இடத்தில் பழகை இசக்கியும் கோயில் கொண்டாள். திருவிதாங்கூர் ஸ்டேட் மேனுவல் என்ற வரலாற்று நூலின் ஆசிரியர் 19ஆம் நூற்றாண்டில் சேகரித்த இந்தக்கதையைக் கூறுகிறார். இதனால் 150 ஆண்டுகளுக்கு முன்பே முப்பந்தல் ஊர் தொடர்பான கதை தான் வழக்கில் இருந்தது எனத் தெரிகிறது.

## கோயில் அமைப்பு:

கோயில் வடக்கு நோக்கியது. முன் சிறுமண்டபம், மகாமண்டபம், கருவறை, உள்பிரகாரம் என அமைந்தது. கோயிலைச் சுற்றிய அண்மை கட்டுமானம் உண்டு. 20 அடி உயர அமர்ந்தகோல இசக்கி உருவம்; வெட்ட வெளியில் உள்ளது. சூலம் தாங்கிய இது காங்கிரீட் வடிவம் முக்கிய தெய்வமான இசக்கி கல்படிமம். 2 கைகளில் சூலம், கப்பறை தாங்கியவை. அருகே வலப்புறம் கல்யாண அம்மன், தெற்கு பிரகாரத்தில் கன்னி மூலையில் கணபதி, முருகன், அவ்வை ஆகியோர் உள்ளனர். கோயில் முன்பு மேல்புறத்தில் சுடலைமாடன், கிழக்கு நோக்கி இருக்கிறான். கீழ்புறத்தில் மேற்கு நோக்கி பட்டவராயன் நிற்கிறான்.

அவ்வைக்கு இசக்கி கோயிலின் கிழக்கே தனிக்கோயில் உண்டு. இக்கோயில் பழைய கல்மண்டபம். நடுவில் வெளிப்புறம் சுற்றாலை மண்டபமும் உடையது. அவ்வை கிழக்கு நோக்கி நின்றகோலமாய் உள்ளாள், நின்றகோலம், கையில் கோல், பயணி என்பதைக் குறிக்கும் தோளில் தொங்கும் மூட்டை. இந்த மண்டப கட்டுமானப் பணி 300 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று தெரிகிறது.

## வரலாறு:

இக்கோயிலில் கல்வெட்டுகள் கிடைக்கவில்லை. கோயில் வரலாற்றை அறிய சான்றுகள் கதைப்பாடலும் வாய்மொழி மரபும்தான். இக்கோயிலின் மூலக்கோவில் தண்ணீர் மடத்தின் அருகே உள்ளது. இப்போது கோயில் இருக்கும் சாலை முக்கியம் பெற்ற பிறகு இசக்கி கோயிலை இங்கே பிரதிஷ்டை செய்தனர். இது 300 ஆண்டுகளுக்கு முற்பட்டிருக்கலாம். இங்குள்ள கிணறு 200 ஆண்டுகளுக்கு முற்பட்டது. இதை சரி செய்தது பற்றிய குறிப்பு ஒரு கல்வெட்டில் இருந்தது. 1905 ஆம் ஆண்டு இருந்த கல்வெட்டு இப்போது இல்லை.

## பூஜை:

இக்கோயில் காலை 5.00 மணிக்கு நடை திறக்கும். 12 மணிக்கு சார்த்தப்படும். மாலை 4.30க்கு நடை திறந்து இரவு 8 மணி வரை இருக்கும். செவ்வாய், வெள்ளி கிழமைகளில் விசேஷ பூஜை உண்டு. இந்நாட்களில் 12 அல்லது 1 மணிக்கு உச்சக்கால பூஜை நடக்கும். இதே நாட்களில் அர்த்தசாம பூஜை 7.30க்கு நடக்கும். இறுதி செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் இங்கு சிறப்பு விழாக்கள் உண்டு.

## நேர்ச்சை:

கன்னியாகுமரி மாவட்டத்தில் மிகவும் நம்பிக்கையான தெய்வம். பட்டுப்புடவை சார்த்துதல், பொங்கல் இடுதல், முடி காணிக்கை, மரத்தொட்டில் கொடுத்தல், காது குத்துதல், சுடுமண் உருவம் விடுதல், கோழி, ஆடு, மாடு போன்ற உயிரினங்களைக் காணிக்கையாகக் கொடுத்தல் எனப் பல நேர்ச்சைகள் நடக்கின்றன.

## விழாக்கள்:

எல்லா வெள்ளிக்கிழமைகளும் இங்கு விழா நடக்கிறது. தை மாத இறுதி செவ்வாய் கிழமையில் மலர் முழுக்கு விழா நடக்கும். ஆடி மாத இறுதி செவ்வாய் அன்று கோயில் கொடை விழா. முழு நிலவு நாளில் சிறப்பு பூஜை உண்டு.

## பக்தர்கள் வசதி:

இக்கோயிலில் விசேஷ நாட்களில் மட்டுமல்லாது அல்லாத நாட்களிலும் பெரும் கூட்டம் வருகிறது. இதனால் பக்தர்களுக்கு வேண்டிய வசதி செய்து தரப்பட்டுள்ளது. குடிநீர் வசதி, கீழ்புறம் பக்தர்கள் தங்கும் விடுதி, பொங்கல் விட ஒரு மண்டபம் எனப் பல வசதிகள் உள்ளன.



**அருள்மிகு இசக்கியம்மன்**

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 262533.



# 24. அருள்மிகு கரைகண்டேஸ்வரர் திருக்கோயில்

### திருநயினார்குறிச்சி, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | கரைகண்டேஸ்வரர் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| ஆகமம் | – | ஏகதள விமானம் |

## அமைவிடம்

திருநயினார்குறிச்சி, கல்குளம் வட்டத்தில் உள்ள சிறு கிராமம். நாகர்கோவிலிருந்து 16 கி.மீ தொலைவில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. நாகர்கோவிலிருந்து ஆட்டோ அல்லது காரில் செல்லலாம். தங்கும் வசதி இல்லை. உணவு விடுதியும் இல்லை. வயல் வெளியும், தென்னந்தோப்புகளும் நிறைந்த இயற்கை எழில் கொஞ்சும் கிராமம். வள்ளியாற்றங்கரையில் இருக்கும் இக்கிராமத்தில் இருந்து 3 கி.மீ தொலைவில் வெள்ளிமலை முருகன் கோயில் உள்ளது. கரைகண்டேஸ்வரரைத் தரிசித்து விட்டு முருகன் கோயிலுக்குச் செல்லலாம்.

## தலபுராணம்:

கரைகண்டேஸ்வரர் அல்லது கறைகண்டேஸ்வரர் என்பது மூலவரின் பெயர். இத்தலம் குறித்த கதை பாற்கடல் கடைந்த

கதையுடன் தொடர்புடையது. பாற்கடல் கடைந்தபோது வந்த விஷத்தை சிவன் அருந்தினான். பார்வதி அவர் கழுத்தில் கை வைத்து பிடித்தாள். அதனால் விஷம் (கறை) கழுத்தில் (கண்டம்) நின்றது. சிவன் கறைகண்ட ஈஸ்வரன் எனப்பட்டான். அந்த ஈஸ்வரன் குடிகொண்ட இடம் இது. கடற்கரை அருகே உள்ள ஊர். அதோடு ஒரு காலத்தில் இக்கடற்கரை பகுதி சைவத்தின் இருப்பிடம். திருநயினார்குறிச்சி அருகே உள்ள கடியப்பட்டணம் கடற்கரையில் பாறையில் குடைவரைக்கோயில் தோண்டும் முயற்சி பாதியில் நின்றதன் அடையாளம் இப்போதும் உண்டு. முற்று பெறாத இந்த குடைவரையின் அருகே ஒரு பாறையில் நடராஜரின் புடைப்பு சிற்பம் உள்ளது. இதன் அமைப்பின் படி கி.பி 7 அல்லது 8 ஆம் நூற்றாண்டினது என்கின்றனர்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் பழைய அமைப்புடையது என்பதைக் கட்டுமான அமைப்பின் வழியும் இங்கு கிடைக்கும் கல்வெட்டுகள் வழியும் அறியலாம். கோயிலின் முன் உள்ள முகப்பு மண்டபம் 17 ஆம் நூற்றாண்டினது. இதை அடுத்து திறந்த வெளி கிழக்கு பிரகாரம் பிற மூன்று பிரகாரங்களும் வெட்ட வெளிப்பகுதி. மரங்களும், செடிகளும் நிற்கின்றன. ஸ்ரீகோயிலின் சோபனப்படி வழி ஏறி சிறிய முன் மண்டபத்தைக் கடந்தால் காண்பது முகப்பு மண்டபம். இது பழைய கட்டுமானம்; சோழர் பாணி. இதை கடந்து சென்றால் சிறிய அர்த்தமண்டபம் உட்பிரகாரம் கருவறையை சுற்றிய அதிர்ஷ்டான அமைப்பு இக்கோயிலின் பழைமையைக் காட்டும். கருவறை, அந்தராளம் என இரு அறைகளைக் கொண்டது. விமானம் 16 ஆம் நூற்றாண்டினது. ஏகதள விமானம். சுதையால் ஆனது. பழைய கட்டுமானப் பணிகள் சீர் செய்யப்பட்டன.

## கருவறை:

கருவறை கட்டுமானம் மிக பழையது. 12 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது. கல்வெட்டு சான்று உண்டு. மூலவர் லிங்க வடிவினர். லிங்கத்தின் தட்டையான அமைப்பும் ஆவுடையும் நீர்விழும் தூம்பும் பழைமைய காட்டுவன.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலின் பரிவார தெய்வங்கள் கணபதி, சாஸ்தா, பைரவர் ஆகியோர்.

## கல்வெட்டுகள்:

இக்கோயிலில் பத்து கல்வெட்டுகள் உள்ளன. எட்டு கல்வெட்டுகள் அச்சில் வந்துள்ளன. இவற்றில் காலத்தால் பழையது 1127 ஆம் ஆண்டினது. இறுதியாக வெட்டப்பட்டது. 1810–ஆம் நூற்றாண்டினது. பழைய கல்வெட்டு கடிகைப் பட்டணத்து உடையார் கறைகண்டேஸ்வரமுடைய மகாதேவர் எனக் கூறும். இக்கல்வெட்டுகள் காணப்படும் இடம் கட்டுமான வரலாறு அடிப்படையில் இக்கோயில் பழைமையானது எனக் கூறமுடியும்.

கோயில் கருவறை தெற்குப்பக்க சுவரில் 1139 ஆம் ஆண்டு கல்வெட்டும் இதே இடத்தில் 1227 ஆம் ஆண்டு கல்வெட்டும் உண்டு. இதனால் கட்டுமானம் 12 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என யூகிக்கலாம். 15 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு கோயில் பலிபீடம் அமைத்ததைக் கூறும். 1706 ஆம் ஆண்டு கல்வெட்டு சோபன மண்டபம் அமைத்ததைக் கூறும்.

கல்வெட்டுகளில் கோயிலில் நடந்த விழாக்கள் பற்றிய தகவல்கள் உள்ளன. மாத அஷ்டமி விழா (கி.பி.1139) சித்திரை விழா (1163 ஆம் ஆண்டு) ஆடி விழா ( 1706) ஆகியவை நடத்த நிபந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. 1163 ஆம் ஆண்டு கல்வெட்டு சித்திரை மாதம் ஒரு நாடகம் நடத்தவும், வாகனம் உலா வரவும் நிபந்தம் கொடுத்ததையும் கூறும். பெரும்பாலும் இது சிவபுராண நாடகமாக இருந்திருக்கலாம். 1432 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 26ம் தேதி இக்கோயிலில் கும்பாபிஷேகம் நடந்ததை ஒரு கல்வெட்டு கூறும்.

மண்டபத்தில் குழல் ஊதும் கண்ணன், அர்ச்சுனன், தபசு என சில சிற்பங்கள் உள்ளன. இவை சாதாரணமானவை. ரிஷப மண்டபத்துக்கு (முகப்பு மண்டபம்) ஏறும் சோபனப்படி வேலைப்பாடு உடையது.

## பூஜை விவரம்

காலை 6.00 மணிக்கு நடை திறப்பு

காலை 6.30 மணிக்கு அபிஷேகம்

காலை 7.30 மணிக்கு தீபாராதனை

மாலை 5.30 மணிக்கு நடை திறப்பு

இரவு 7.30 மணிக்கு தீபாராதனை

இரவு 8.00 மணிக்கு திருநடை சார்த்துதல்

## விழா:

சித்திரை விசு, மார்கழி திருவாதிரை திருவிழா சிவராத்திரி, திருக்கார்த்திகை விழா நடைபெறுகிறது. 2013 ல் கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றது.



தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 25. அருள்மிகு மார்த்தாண்டேஸ்வரர் திருக்கோயில்

இரணியல், கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மகாதேவர், மார்த்தாண்டேஸ்வரர் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | ஏகதள விமானம் |

## அமைவிடம்

கல்குளம் வட்டத்தில் பிரபலமான ஊரான இரணியல் ஊரின் புறத்தே மார்த்தாண்டேஸ்வரம் என்னும் இடத்தில் இருப்பது. நாகர்கோவிலிலிருந்து இரணியல் 18 கி.மீ. தொலைவில் உள்ளது. அங்கிருந்து இக்கோயிலுக்கு ஆட்டோவில் செல்லலாம். மினி பஸ் உண்டு. நாகர்கோவிலிலிருந்து திங்கள் நகர் சென்று அங்கிருந்து 5 கி.மீ. ஆட்டோவில் சென்று இக்கோயிலை அடையலாம் என்றாலும், பேருந்து நிறுத்தத்திலிருந்து சிறுது தூரம் நடக்க வேண்டும்.

குமரி மாவட்டத்தின் முக்கிய ஆறான வள்ளியாற்றங் கரையில் இற்கையான சூழ்நிலையில் இருப்பது. கோயிலின் வடக்கு குளம் தோட்டம் வயல்வெளி நீராளி என உள்ளன. இக்கோயில் இருக்குமிடம் சிற்றூர். அதனால் நாகர்கோயிலிலிருந்து இங்கு வந்து செல்லலாம்.

## தர புராணம்:

இக்கோயில் தொடர்பான தலபுராணக் கதை எழுதி வைக்கப்படவில்லை. வேணாட்டின் தலைநகராக இரணியல் இருந்த சமயம். அங்கிருந்த அரசன் தினமும் வள்ளியாற்றின் கரையிலிருந்த ஒரு மகாதேவர் கோயிலுக்கு வந்து சேவிப்பது வழக்கம். அது மிகச் சிறுகோயில். ஒருமுறை வள்ளியாற்று நீர் பெருக்கெடுத்து கோயிலுக்குச் செல்லமுடியாமல் ஆனது. அன்று அரசனுக்கு மகாதேவர் கோயிலுக்குச் செல்ல முடியவில்லை. அதனால் அரசன் வருந்தினான். அன்று கனவில் மகாதேவர் இரணியல் அருகிலேயே பெரிய பாறையின் அடிவாரத்தில் ஒரு கோயில் எடுக்க கட்டளை இட்டான். அரசனும் அப்படியே செய்தான்.

## கோயில் அமைப்பு:

கன்னியாகுமரி மாவட்டத்தில் பழமையான கருவறையை உடைய கோயில்களில் இக்கோயிலும் ஒன்று. இயல்பால் அமைந்த பாறை குகையில் கருவறை, அந்தராளம் முன்மண்டபம் எனச் செதுக்கி உருவாக்கப்பட்ட கோயில். இது குடைவரைக் கோயில். குடைவரையின் முன்பகுதி புருவத்தில் மழைநீர் உள்ளே வழியாமல் இருக்க வெட்டப்பட்ட அடையாளத்தை இப்போதும் பார்க்கலாம்.

குடைவரை கருவறை முன்பகுதியில் முகமண்டபம், முகப்பு மண்டபம், மடப்பள்ளி என்னும் பகுதிகளை உடையது. கோயிலின் கருவறை அடுத்த முகமண்டபம் தாழ்ந்த பகுதி, இது ஒரே காலகட்டத்தில் கட்டப்பட்டதல்ல என்று தெரிகிறது. இக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை என்றாலும் பத்மநாபபுரம் அருங்காட்சியகத்தில் உள்ள ஒரு கல்வெட்டு இரணியல் சிவன்கோவில் உஷா பூஜைக்கு கீழ்ப்பேரூர் ஸ்ரீ வீரகேரள மார்த்தாண்டவர்மா திருவடி நிலக்கொடை வழங்கியதைத் தெரிவிக்கிறது. இக்கல்வெட்டு 1403 ஆண்டினது. வேணாட்டு அரசன் ஸ்ரீ வீரகேரள மார்த்தாண்டன் காலத்தது. இக்கல்வெட்டு தமிழ், சமஸ்கிருத மொழியில் அமைந்தது.

இக்கல்வெட்டுச் சான்றுவழி இக்கோயில் 1403–க்கு முன்பே சிவன் கோயிலாகிவிட்டது என்றும், முன் கட்டுமானம் இதே காலத்தில் நடந்திருக்கலாம் என்றும் ஊகிக்கலாம். கோயிலுக்கு என்ற சிறுகுளம் அருகில் உள்ளது.

## சிற்பங்கள்:

இக்கோயில் முன்மண்டபம், முகமண்டபத் தூண்களிலும் மேல்விதானத்திலும் ராமாயண பாகவதக்காட்சிச் சிற்பங்கள் உள்ளன. இவை தொடர்ந்த பராமரிப்பு இன்மையால் அடையாளம் காணமுடியாத நிலையில் உள்ளன.

## பூஜை

காலை 6.00 மணி திருநடை திறப்பு
காலை 6.30 மணி அபிஷேகம்
காலை 7.00 மணி தீபாராதனை
மாலை 5.00 மணி நடைதிறப்பு
இரவு 7.30 மணி தீபாராதனை
இரவு 8.00 திருநடையடைப்பு

சிவராத்திரி, மார்கழி திருவாதிரை போன்ற சிறுவிழாக்கள் மட்டும் நடக்கின்றன.

தொடர்பு தொலைபேசி எண் : 04651 – 250039.



# 26. அருள்மிகு மகாதேவர் திருக்கோயில்

கேரளபுரம், கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மகாதேவர் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | ஏகதளம் |

## அமைவிடம்

கேரளபுரம் நாகர்கோவிலிருந்து 24 கி.மீ தொலைவில் இருப்பது. நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் இருக்கும் தக்கலை ஊரிலிருந்து 5 கி.மீ தொலைவு. தக்கலையிலிருந்து ஆட்டோவில் செல்லலாம். தக்கலை சிறு நகரம். கேரளபுரம் ஊர் பாரம்பரியம் உடையது. வேணாட்டு அரசர்கள் காலத்தில் மதுரை நாயக்கர் படைகளுடன் போரிட்டு மடிந்த இரவிக்குட்டிப்பிள்ளை பிறந்த ஊர். பழைய கல்வெட்டுகளில் செங்குன்னூர் வளநாட்டுப் தென்னாட்டுப் பிரிவில் பாலக்கோட்டு தேசத்து முத்தளக்குறிச்சி என வழங்கப்படுகிறது. ஊரின் பழமை 13 ஆம் நூற்றாண்டு வரை செல்கிறது.

## தலபுராணம்:

கேரளபுரம் மகாதேவர் கோயில், விநாயகரின் பிரபலத்துக்காக அறியப்பட்டது. இக்கோயிலைக் கேரளபுரம் விநாயகர் கோயில் என்று கூறுவது பொது வழக்கம். ஆயினும் இக்கோயிலின் மூலவர் சிவன். கல்வெட்டுகளிலும் சிவன் என்றே வருகிறது.

இந்தச் சிவன் மாசானமூர்த்தி எனப்படுகிறார். இது வேணாட்டு அரசன் ஒருவனின் சமாதிக்கோயில் என்கின்றனர். இந்த அரசனின் பெயர் வீரகேரளன். இதற்கு வேறு சான்றுகள் கிடைக்கவில்லை. இது அரசன் அல்லது அரச குடும்பத்தார் ஒருவரின் சமாதிக்கோயில் என எடுத்துக்கொள்ளலாம்.

இக்கோயிலில் உள்ள விநாயகர் கோயில் உருவானது தொடர்பாக ஒரு கதை பேசப்படுகிறது. வேணாட்டு மன்னர் ஒருவன் இராமேஸ்வரம் சென்றிருந்தான். கடலில் நீராடினான். அப்போது சிறிய விநாயகர் கல்படிமம் கிடைத்தது. அதைக் கேரளபுரம் கோயில் வெளிப்பிரகாரத்தில் மரத்தின் அடியில் வைத்தான். விநாயகர் வளர்ந்து கொண்டே போனார். ஒருநாள் அரசனின் கால் பெருவிரல் தற்செயலாக உடைந்தது. அதோடு விநாயகர் உருவம் வளர்ச்சி தடைப்பட்டது.

## கோயில் அமைப்பு / கருவறை:

இக்கோயில் கருவறை, நந்தி மண்டபம், சுற்றாலை மண்டபம் என அமைந்தது. கருவறை வட்ட வடிவமானது. மூலவர் சிவன் லிங்க வடிவம். கருறை விமானம் கதை வடிவம். பிற்காலத்தது. கோயிலுக்கென்று 2 தேர்களும் சிறிய குளமும் உண்டு.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயில் பரிவார தெய்வங்கள் கணபதி, நாகர், சாஸ்தா ஆகியன. இவர்களில் விநாயகர் முக்கியமானவர். கோயில் பிரகாரத்தின் தென்கிழக்கில் அரச மரத்தின் கீழ் இருக்கும் இந்த அதிசய விநாயகர் உத்திராயண காலத்தில் (தை – ஆனி) வெள்ளை

நிறத்திலும், தட்சணாயண காலத்தில் (ஆடி – மார்கழி) கறுப்பு நிறத்திலும் நிறம் மாறுகிறார். இந்த அதிசயத்தைப் பார்க்க மக்கள் வருகிறார்கள்.

## வரலாறு/கல்வெட்டுகள்:

இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டுகள் வழி கோயில் கட்டுமானத்தைக் கணிக்க முடிகிறது. இக்கோயிலின் சுற்றாலை மண்டபங்கள், மடப்பள்ளி, ரிஷப மண்டபம், கருவறை விமானம் ஆகியவற்றை கட்டியவன் வேணாட்டு அரசன் வீர ரவிவர்மன் குலசேகரப்பெருமாள், கட்டிய ஆண்டு 1606. இவன் உமையம்மா ராணியின் மகன். அம்மாவின் ஆணைப்படி இக்கோவிலைக் கட்டியிருக்கிறான்.

இன்னொரு கல்வெட்டு வீர உதயமார்த்தாண்டவர்மா என்ற அரசன் இக்கோயிலுக்கு அளித்த நிபந்தத்தைக் கூறும். இது 1317 ஆம் ஆண்டுக் கல்வெட்டு. இதனால் இக்கோயில் கி.பி 1317 ஆம் ஆண்டில் வழிபடு கோயிலாக இருந்தது தெரிகிறது. இக்கோவிலின் சில மண்டபங்களைத் தனியார்களும் கட்டி உள்ளனர்.

## சிற்பங்கள்:

இக்கோயிலின் கருவறையை அடுத்து நடராஜர், சிவகாமி, கங்காளமூர்த்தி ஆகியோரின் செப்புப்படிமங்கள் உள்ளன. பெருமளவில் மலையாளிகள் வாழும் இவ்வூரில் மாணிக்க வாசகரும் தெய்வமாக உள்ளார். ரிஷப மண்டபத்தில் குலசேகரப்பெருமாள், சேரமான் பெருமாள், நாராயணர், சுந்தரமூர்த்தி, ராமர், லட்சுமணர் சிற்பங்கள் உள்ளனர். இக் கோயிலில் பணிபுரிந்த மாதுமைக்குட்டி, நீலமைக்குட்டி ஆகியோரின் அற்புதமான சிற்பங்களும் உள்ளன. இந்தச் சிற்பங்களைச் செய்யப் பணம் கொடுத்தவர் செண்பகம் மார்த்தாண்டம் குட்டி என்ற தேவதாசி. இவள் கணவன் கேரளபுரம் கோயில் ஸ்ரீகாரியம் செய்தவர்.

## பூஜை

காலை மணி 5 திருநடைதிறப்பு
காலை மணி 6 அபிஷேகம்
காலை மணி 7 தீபாராதனை
காலை மணி 11 திருநடைஅடைப்பு
மாலை மணி 5 திருநடைதிறப்பு
மாலை மணி 6 தீபாராதனை
மாலை மணி 7.30 திருநடை அடைப்பு

இக்கோயிலில் மாசி மாதம் ஆவணி நட்சத்திரம் தொடங்கி 10 நாட்கள் விழா நடக்கிறது. 9 ஆம் நாளில் சுவாமித் தேர், அம்மன் தேர் என இரு தேர்கள் வருகின்றன. கங்காளநாதர் வீதியில் வரல் நிகழ்வு உண்டு.



தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 27. அருள்மிகு பகவதியம்மன் திருக்கோயில்

## மண்டைக்காடு, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவி | – | ஸ்ரீ பகவதி அம்மன் |
| தலவிருட்சம் | – | வேம்பு |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

### அமைவிடம்

மண்டைக்காடு அருள்மிகு பகவதி அம்மன் கோயில் விளவங்கோடு வட்டம் குளச்சல் துறைமுகத்திலிருந்து 4 கி.மீ. தொலைவிலும், திங்கள் சந்தையிலிருந்து தெற்கே 5.கி.மீ. தொலைவிலும் உள்ளது. நாகர்கோவிலிலிருந்து 20 கி.மீ. தொலைவிலும், திருவனந்தபுரத்திலிருந்து 70 கி.மீ. தொலைவிலும் உள்ளது. நாகர்கோவில் பேருந்து நிலையத்திலிருந்து பஸ் வசதி உண்டு. இவ்வூரில் தங்கும் விடுதிகள் உள்ளது. இது கடற்கரை கிராமம் கோயிலை ஒட்டிய இடங்களில் சாதாரண வசதியுடன் கூடிய உணவு விடுதி உண்டு. செவ்வாய் கிழமை இக்கோயிலின் விஷேச நாள் கூட்டம் அதிகமிருக்கும்.

### தலபுராணம்:

இக்கோயில் தொடர்பான தலபுராணம் வாய்மொழியாக உள்ளது.

இந்த ஊரின் பெயரைக் குறித்த விளக்கமே கோயிலுடன் தொடர்புடையதாய் உள்ளது. மணல் + தைக்காடு = மண்டைக்காடு ஆனது. மந்தைகள்+ காடு மந்தைக்காடு மருவி மண்டைக்காடு ஆனது. மணல்கள் நிரம்பிய இடம், கன்று காலிகள் மேய்த்த இடம் என்னும் பொருள்களில் இது வழங்கப்பட்டது.

இக்கோயில் சித்தருடைய சமாதி என்பது ஒரு கதை. மண்டைக்காடு காடாய் இருந்த சமயம் ஒரு சித்தர் இங்கு வந்தார். அந்த இடத்தில் தெய்வ ஒளி வீசுவதைக்கண்டு அங்கே அமர்ந்தார். ஒரு இடத்தில் ஸ்ரீசக்கரம் வரைந்து தியானம் செய்தார். சித்து வேலைகள் செய்தார். ஒருநாள் அவர் மாயமாய் மறைந்துவிட்டார். சித்தர் ஸ்ரீசக்கரம் வரைந்த இடத்தில் ஒரு புற்று வளர்ந்தது. மாடுமேய்க்கும் சிறுவர்கள் அதை உடைத்தனர். அதிலிருந்து ரத்தம் கசிந்தது. அச்செய்தியை ஊர் மக்கள் அறிந்தனர். இதனால் அங்கே ஒரு கோயில் உருவானது. இத்தகவல்கள் 1909–ல் கொட்டாரத்தில் சங்குண்ணி என்பவர் தொகுத்திருக்கிறார். அவரது ஐதீகமாலா என்ற மலையாள நூலில் இச்செய்தி வருகிறது.

தென் கேரளத்தில் களரிப்பயற்று என்னும் போர்க்கலை பயிலும் இடங்களில் உள்ள வழிபாட்டு இடம் பிற்காலத்தில் அம்மன் கோயிலாக மாறின என்றும் பொதுவான கருத்தை இக்கோயிலுடன் இணைத்துக் கூறுகின்றனர். களரிப்பயற்று நடக்கும் இடங்களில் காளிப் படிமத்தை வடக்கு பார்த்து வைப்பர். முதலில் காளிக்கு வழிபாடு, பின் பயிற்சி. களரிபயிலுவது நின்றபின் காளி கோயில் பொதுமக்களின் வழிபாட்டிற்குரிய இடமாக ஆயிற்று. இதுவே பின் பகவதி கோயிலானது என்பது ஒரு செய்தி.

கேரள மாநிலம் கொல்லம் நகரிலிருந்து யோகினி ஒருத்தி மண்டைக்காடு வந்தாள். கடற்கரையில் தவம் இருந்தாள். அந்த இடத்தில் புற்று வளர்ந்தது. அதுவே பிற்காலத்தில் வழிபாட்டுக்குரியதானது. பகவதி தேவியானது, என்பது ஒரு செய்தி. அந்த யோகினியின் பக்தர்கள் இப்போதும் கொல்லத்திலிருந்து இக்கோயிலுக்கு வருகின்றனர்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் குறித்த நம்பிக்கை ஆழமானதாகவும் பழமைபானதாகவும் இருந்தாலும் இப்போதைய கோயில் கட்டுமானம் பிற்காலத்தில் ஏற்பட்டதே. ஆரம்பத்தில் கருவறையும் சித்தர் சமாதிப்பகுதியும் ஓலைக்கூரையாகவே இருந்தன. திருவிதாங்கூரின் திவானாக இருந்த வேலுத்தம்பி தளவாய் இக்கோயிலை முதலில் அரசுடைமையாக்கினார். (1805) திருவிதாங்கூரில் முதலில் அரசுடைமையான கோயில் இது.

1805–ஆம் ஆண்டிற்குப் பின் கோயில் கருவறைப்பகுதி கட்டப்பட்டது. கருவறை உட்பிரகாரம் உடையது. இது ஓட்டுப் பணியால் ஆனது. கோயில் வளாகத்தில் ஆலமரம் நடப்பட்டது இக்காலத்தின்தான். அம்மன் கோயிலுடன் தொடர்புடைய சாஸ்தாங்கோவில் கட்டப்பட்டதும், இதன் வளாகத்தில் பரச்சோற்றி மரம் நடப்பட்டதும் இக்காலத்தில்தான். 1929–ஆம் ஆண்டிற்குப் பின் கோயில் புதுப்பிக்கப்பட்டது. பாட்டுச்சாவடி, கருவறை சுற்றிய பிரகாரம், யானைக்கொட்டில், கோயிலைச்சுற்றி மதில் சுவர் எல்லாம் கட்டப்பட்டதும் இக்காலத்தின்தான்.

கன்னியாகுமரி மாவட்டம் கேரளத்திலிருந்து தனியாகப் பிரிந்த காலக்கட்டத்தில் (1956) தமிழக இந்து சமய அறநிலையத் துறையினரால் இக்கோயில் புதுப்பிக்கப்பட்டது. கொடிமரம் நடப்பட்டது. இப்போது செம்புத்தகடு பொதியப்பட்ட நிரந்தர கொடிமரம் உள்ளது. இக்கோயிலின் கருவறை, நமஸ்கார மண்டபம் அல்லது பஜனை மண்டபம் எல்லாம் ஓட்டுப்பணி பழைய கேரள பாணி.

## கருவறை இறைவி:

கருவறையில் இருக்கும் மண் புற்றே பகவதியாகும். இது ஒவ்வொரு நாளும் வளர்ந்து வருவது என்ற நம்பிக்கை உண்டு. இதனால் சந்தனக்காப்பு செய்து அம்மனை வடக்குநோக்கி ஸ்தாபித்தபின் வளர்ச்சி நின்றது. இப்போது சுமார் 15 அடி உயரம். இவள் ஐந்து திருமுகங்களைக் கொண்டவள். 1909–ஆம்

ஆண்டுமுதல் ஆண்டுதோறும் 30 முதல் 40 துலாம் அரைத்த சந்தனம் பூசப்படுகிறது.

வடக்கு திருமுகமும் வெள்ளியினாலானது. வெள்ளி மகுடம் உண்டு. அர்ச்சனா படிமமும், விழாப்படிமமும் கருவறையில் உள்ளன.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலின் பரிவார தெய்வங்கள், பிரசன்ன விநாயகர், கடல் நாகர், பைரவர் (சித்தர்) ஆகியோராவர். பைரவர் எனப்படும் சித்தர் சமாதி கோயில் பாட்டுச்சாவடியை ஒட்டி மேற்குப்புறம் உள்ளது. இதன் தலவிருட்சம் வேப்பமரம் என்கின்றனர். கருவறை பூசகரே இக்கோயிலுக்கும் பூஜை நடத்துவார். கருவறை வடகிழக்கில் ஒரு விநாயகர் கோயில் உள்ளது. இது அண்மையில் நிறுவப்பட்டது. கோயிலின் வடமேற்கில் உள்ள நாகர் மண்டைக்காடு கடலில் இருந்து 1979–ல் எடுக்கப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது.

இக்கோயிலில் கல்வெட்டுக்கள் மற்றும் சிற்பங்கள் எதுவும் இல்லை.

## பூஜை விவரம்

காலை 6.00 மணிக்கு உதயமார்த்தாண்ட பூஜை
பகல் 12.30 மணிக்கு உச்சகால பூஜை
மாலை 6.30 மணிக்கு சாயரட்சை பூஜை
இரவு 8.00 மணிக்கு அத்தாள பூஜை

வார செவ்வாய் கிழமைகளில் நடக்கும் பூஜைக்குப் பக்தர் கூட்டம் அதிகம் வருகிறார்கள். மாத வழிபாடுகளில் மாத பௌர்ணமி (குறிப்பாக சித்திரை மாத பௌர்ணமி) பங்குனி மாத பரணி, ஆவணி மாத அஸ்வதி நட்சத்திர பொங்கல் ஆகியன குறிப்பிடத்தகுந்தன. ஆடிமாத செவ்வாய் கிழமைகளில் தேவி பல்லக்கில் பவனி வருவாள். கார்த்திகை மாதத்தில் சிறப்பு வழிபாடுகள் இப்போது பெருகி வருகிறது.

## விழா:

இக்கோயிலில் மாசி மாதத்தில் நடக்கும் 10 நாள் திருவிழாவைக் கொடைவிழா என்றே அழைக்கின்றனர். பொதுவாக கன்னியாகுமரி மாவட்ட கோயில்களின் ஆண்டுவிழாக்கள் திதி அல்லது நட்சத்திரம் அடிப்படையில் நடக்கும். ஆனால் இந்த பகவதி கோயிலில்தான் திருவிழா கிழமையை அடிப்படையாக கொண்டு நடக்கிறது. மாசி மாதம் கடைசி செவ்வாய் கிழமைகளில் விழா நிறைவடையும் வகையில் 10 தினங்களுக்கு முன் கொடி ஏற்றுவிழா ஆரம்பமாகும். 6–ஆம் திருவிழாவில் (வெள்ளி) வலியபடுக்கை என்ற மகா பூஜை இரவு 12.00 மணிக்கு நடக்கும். இப்பூஜையில் திரளி கொழுக்கட்டை, அவல், பொரி, முந்திரி, கற்கண்டு, பதிமூன்று வகை வாழைப்பழங்கள், இளநீர், பிற பழவகைகள் ஆகியன அம்மனுக்கு முன் குவியலாகப் படைக்கப்பட்டு அவற்றின் மேல் தீப்பந்தங்கள் வைக்கப்பட்டு அலங்காரம் செய்யப்படும்.

10–ஆம் நாள் ஒடுக்கு பூஜை. இதில் சாஸ்தா கோயிலில் தயாரிக்கப்பட்ட பருப்பு உட்பட 11 வகை கறி, குழம்புகள், சாதம் ஆகியவற்றைத் தலையில் சுமந்துவந்து கோயிலின் கருவறையில் வைப்பர். இரவு 1.00 மணிக்குப் பூஜை. இந்த படைப்புக்குரிய சாதம் ஒரே நாளில் தயாரிக்கப்பட்ட புழுங்கல் அரிசியால் சமைக்கப்படுவது விஷேசம். இவற்றைத் தயாரிக்கும் முறை, கொண்டுவருதல் ஆகியவற்றில் மரபுவழி முறை இன்றும் கடைப்பிடிக்கப்படுகிறது. 10–ஆம் நாள் விழா முடிந்த 8–வது நாளும் வெள்ளிக்கிழமையில் விழா நடக்கும். அப்போது நேர்ச்சைக்கடன் செலுத்துபவர்கள் கூடுவர்.

## நேர்ச்சை:

இக்கோயிலில் உள்ள நேர்ச்சைகள் வில்லுப்பாட்டு, மரம் மற்றும் வெள்ளியால் செய்யப்பட்ட கை, கால் உறுப்பு காணிக்கை, வெடி வழிபாடு, முத்தப்பம், மண்டையப்பம் , பொங்கல், கைவிளக்கு, பூமாலை, குத்தியோட்டம், கறுப்பு வளையல், விளைச்சலில் முதல் பொருள் ஆகியன.

வில்லிசைக்கலை என்ற கிராமியக் கலைநிகழ்ச்சி பாடுமாறு நேருதல் இக்கோயிலில் சிறப்பு. காணிக்கை கொடுப்பவரின் ஊரிலிருந்து மண்டைக்காடு வரையுள்ள இடங்களைப் பாடுவது இதன் சிறப்பு. முள் முருங்கை, முருக்கு போன்ற மரங்களில் செய்யப்பட்ட சாயம் பூசப்பட்ட கைகால் உறுப்புகளை வாங்கி கோயில் தட்டுப்பந்தலில் எறிவது மற்றொரு நேர்ச்சை.

## நைவேத்தியம்:

கோயில் நைவேத்தியங்களில் முத்தப்பம், மண்டையப்பம் முக்கியம். அரிசிமாவு, சர்க்கரை சேர்த்து தயாரிப்பது முத்தப்பம். இது வெப்புநோய் வராமலோ, வந்தால் குணமாவதற்கோ உரிய நேர்ச்சை. மண்டையப்பம் அரிசி மாவு, சர்க்கரை, சிறுபயிறு முதலியவை கலந்து தயாரிக்கப்படுவது. இது உரித்த தேங்காய் அளவில் இருக்கும். தலைநோய் தீர கொடுக்கப்படும் நேர்ச்சை இது. இவை தவிர வெண்பொங்கல், சர்க்கரை பொங்கல் முதலியவைபும் உண்டு.



**ஒடுக்கு பூஜை**

திருக்கோயில் தொலைபேசி : 04651 – 222596
இணையதளம் : www. kanyakumaritemples.org
மின்னஞ்சல் : mondaikadudevitemple@gmail.com



# 28. அருள்மிகு மகிஷாசுரமர்த்தினி திருக்கோயில்

## வாள்வச்சகோஷ்டம், கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவி | – | மகிஷாசுரமர்த்தினி |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| தலவிருட்சம் | – | மருத மரம் |
| விமானம் | – | ஏகதள விமானம் |

## அமைவிடம்

மகிஷாசுரமர்த்தினி கோயில் வாள்வச்சகோஷ்டம் ஊரில் உள்ளது. இவ்வூர் நாகர்கோவில் – திருவனந்தபுரம் சாலையில் காட்டாத்துறை ஊரில் இருந்து இடதுபுறம் 5 கி.மீ. தொலைவில் இருப்பது. நாகர்கோவிலில் இருந்து இவ்வூர் 35 கி.மீ. தொலைவில் உள்ளது. காட்டாத்துறையில் இருந்து கோயிலுக்கு பஸ் வசதி மிகக் குறைவு. ஆட்டோவில் போகலாம்.

கோயில் செல்லும் வழியில் பச்சைப்பசேல் என்ற வயல் தோப்புகள், வாழைத்தோட்டங்கள், குளங்கள் என இனிய அனுபவம். தங்கும் இட வசதி இல்லை. நாகர்கோவில் அல்லது மார்த்தாண்டத்தில் தங்கிவிட்டும் கோயில் செல்லலாம்.

## தலபுராணம்:

அரசன் வாள்கழுவிய இடம் வாள்வச்சகோஷ்டமானது. இப்பெயர் 16–ஆம் நூற்றாண்டு கல்வெட்டில் வருகிறது. அரசன் வெற்றி பெற்றபின் இரத்தக்கறை படிந்த வாளைக் கழுவிய இடம் இது. பரசுராமன் சத்ரியர்களை அழித்தபின் துர்க்கைக்குக் கோயில் எடுத்தான். கோயில் அருகே குளமும் அமைத்தான், பின், தான் அமைத்த குளத்தில் பரசுவை (கோடாலி ஆயுதம்) வைத்து வணங்கினான். அது இந்த இடம். ஆதலால் இத்தலத்தைப் பரசுராமருடனும் சேர்த்துக் கூறுகின்றனர்.

இவ்வூர் கோயிலை மஹாபாரத கதையுடனும் இணைத்துக் கூறுகின்றனர். பாண்டவர்கள் 14 ஆண்டுகள் வனவாசம் செல்வதற்கு முன், தங்கள் ஆயுதங்களை மறைவான இடத்தில் வைக்க விரும்பினர். அதற்கு சரியான இடம் மகிஷாசுரமர்த்தினி குடிகொண்ட கோயிலே என முடிவு கட்டினார். இங்கே தங்கள் ஆயுதங்களை வைத்தனர். அதனால் இத்தலம் வாள்வச்சகோஷ்டம் ஆயிற்று.

இக்கோயில் இங்கே உருவானதற்கு வாய்மொழி வடிவில் ஒரு கதை வழங்குகிறது. சங்கரவாரியார் என்ற எடத்துவா போற்றி இப்பகுதியில் வரிப்பிரிக்கும் பொறுப்பில் இருந்தார். அவர் ஒருமுறை இந்த ஊர் வழி நடுஇரவில் சென்றுகொண்டிருந்தபோது அழகான இரண்டு பெண்களைக் கண்டார். ஒருத்தி இவரை அழைத்தாள். தாந்திரீகம் அறிந்த அந்த போற்றி அந்த யட்சிகளை அங்கு நின்ற மருதமரத்தின் கீழ் ஸ்தாபித்தார். இந்த மருதமரத்தின் அருகே பிற்காலத்தில் கோயில் உருவானது.

எடத்துவா போற்றியின் வேண்டுகோளால் உண்ணி கேரளவர்மன் என்ற வேணாட்டு அரசன் இங்கு ஒரு கோயில் எடுத்தான். அந்த யட்சிகள் முதலில் சங்கல்பம் செய்யப்பட்ட இடத்தில் மடப்பள்ளி உருவானது. பிற்காலத்தில் கருவறை ஈசான மூலைக்குச் சென்றது. அதனால்தான் மடப்பள்ளியிலும் சிறு கோபுரம் உள்ளது.

இக்கோயிலின் உரிமை வாரியர் குடும்பத்திற்கும் நிருவாகம் மகாராஜா குடும்பத்திற்கும் உரியது என்ற வழக்கம் 18–ஆம் நூற்றாண்டிலும் இருந்தது.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் அனுப்புமண்டபம், கொடிமரம் இருக்கும் முகமண்டபம், பலிபீடப் பகுதி இதன் இருபுறமும் சிற்ப மண்டபம், கதிர் மண்டபம், மருத மண்டபம், நமஸ்கார மண்டபம், ஒற்றைக்கல் மண்டபம், ஸ்ரீகோயில் சுற்று மண்டபம் என அமைந்தது. கோயிலைச்சுற்றி பெரிய மதில் உண்டு. மொத்த கோயிலும் வெளிப்பிரகாரமும் தரை மட்டத்தில் இருந்து 3 மீட்டர் உயரத்தில் உள்ளது. 12 படிகள் ஏறி கோயிலை அடைய வேண்டும்.

அனுப்பு மண்டபத்தின் இருபுறமும் திண்ணை, இதைக் கடந்ததும் இருப்பது முன் மண்டபம். எட்டு தூண்கள் கொண்ட இந்த முகமண்டப வாசலில் துவாரபாலகி சிற்பங்கள் உண்டு. முகமண்டபத்தில் கொடிமரம் உள்ளது. 45 அடி உயரமுடையது. கி.பி.2000–ல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. செப்புத்தகடு வேயப்பட்டது.

கொடிமரத்தை அடுத்து இருப்பது பலிபீடம். இதன் இருபுறமும் உள்ள தூண்களில் அருமையான சிற்பங்கள் உள்ளன. இம்மண்டபத்தில் சந்தான காளி வாரியார் என்பவரின் அஞ்சலிஹஸ்த சிற்பம் உள்ளது. மஹிஷாசுரமர்த்தினி குழந்தையாக வந்து இம்மண்டபத்தைக் கட்டும்படி வேண்டினாள் என்பது ஐதீகம். இந்த மண்டபத்தை அடுத்து இருப்பது கதிர் மண்டபம். இது நீண்ட வடிவிலானது. இதன் ஈசானிய மூலையில் யட்சியம்மன் சங்கல்பிக்கப்பட்டுள்ளாள்.

கதிர் மண்டபத்தை அடுத்து இருப்பது மருத மண்டபம். இது மருதமரத்தால் கட்டப்பட்டது. இங்கே நவகலச பூஜை, துலாபாரம், தாந்திரீக பூஜை ஆகியன நடக்கின்றன. இந்த மண்டபம் நாலுகால் மண்டபம், அலங்காரமண்டபம் எனவும்படும். இதை அடுத்து நமஸ்கார மண்டபம் உள்ளது. இது மரப்பணி, கேரள பாணி.

ஸ்ரீகோயில் என்னும் கருவறையில் முன் ஒற்றைக்கல் மண்டபம் உண்டு. கருவறை கிழக்கு பார்த்தது. இதில் வேலைப்பாடுள்ள தூண்கள் உண்டு. கருவறையில் சோபன படிகளும் நுட்பமானவை. கருவறையைச் சுற்றி உட்பிரகாரமும் சுற்றாலை மண்டபங்களும் உள்ளன. கருவறை கருங்கல்லால் ஆனது என்றாலும், மேற்பகுதி மரக்கூரையால் ஆனது. செப்புத் தகடு வேயப்பட்டது. தொங்குகூரையில் இச்சிற்பங்கள் உள்ளன. கோயிலின் வெளியேயும் ஒரு பிரகாரம் உண்டு.

இக்கோயிலின் கட்டுமானம் மூன்று காலகட்டங்களில் நடந்திருக்கிறது. ஸ்ரீகோயில் பகுதி பன்னிரெண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும். பலிபீட மண்டபம், கதிர் மண்டபம் போன்றவை 16–ஆம் நூற்றாண்டிலும், பிற 18–ஆம் நூற்றாண்டிலும் கட்டப்பட்டவை ஆகும்.

கோயிலின் விமானம் 32 அடி உயரமுடையது. ஏகதளம் உடையது. கோயிலின் வடக்கே ஆறாட்டு குளம், ஆறாட்டுபுரை, வடக்கே ஊட்டுப்புரை உண்டு. கோயில் வளாகத்தில் பலா, தென்னை, மா, நாகவல்லி, செண்பகவல்லி மரங்கள் உள்ளன.

## கருவறை வடிவம்:

நீள்சதுர கருவறையில் மகிஷாசுரமர்தினி நின்றகோலமாய் இருக்கிறாள். கல்படிமம். திரிபங்கா நிலை, வலதுகால் மகிஷன் தலையில் ஊன்றியிருக்கிறது. இடதுகால் பூமியில் தொட்டு நிற்கிறது. அம்மனுக்கு நான்கு கைகள். பின் வலதுகையில் பிரயோக சக்கரம், பின் இடது கையில் சங்கு, முன் வலது கை வரதம், முன் இடது கை கடிஹஸ்தமாயும் இருப்பது. கரண்டமகுடம் காலில் சிலம்பு, கழுத்தில் அணிகலன், இவள் முன்னே திரிசூலம் உள்ளது.

கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்களில் பெரிய அளவிலான மகிஷாசுரமர்தினி இவளே. இப்படிவம் தமிழக கேரள பாணியில் அமைந்தது அல்ல. இது ஆரம்பகால விஜயநகர பாணி சிற்பம். கருவறை கட்டப்பட்டகாலத்தில் இச்சிற்பம் சமைக்கப்பட்டிருக்கலாம். பெரும்பாலும் 12–ஆம் நூற்றாண்டாக இருக்கலாம். இதன் ரௌத்ரபாவம் இதன் அழகை கூட்டுகிறது.

அம்மனின் படிமம் முழுதும் மூடிய தங்கக்கவசம் உண்டு. கி.பி.18–ஆம் நூற்றாண்டில் மார்த்தாண்டவர்மா தன் வெற்றியின் அடையாளமாக இக்கவசத்தைக் கொடுத்திருக்கிறார். கருவறையில் இருந்து ரகசிய அறைக்குச் செல்லும் பாதை இருந்தது. அங்கே தாந்திரீக பூஜை நடந்தது என்ற வாய்மொழி செய்தி உண்டு. இந்த மகிஷி சக்தி உடையவள்.

## பரிவார தெய்வங்கள்:

உட்பிரகாரத்தில் உள்ள சிறு பலிபீடத்தை சாமுண்டி, பிராமி, மகேஷ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி என்றே கொள்ளுகின்றனர். பிற கோயில்களில் வெறும் பீடங்களாக கொள்ளப்படும்போது இங்கு சப்த மாதாக்களாக வழிபாடு செய்கின்றனர். கணபதி, நாகர் ஆகியோரும் பரிவார தெய்வங்களாக உள்ளனர்.

## சிற்பங்கள்:

இக்கோயிலில் பலிக்கல் மண்டபம், கதிர் மண்டபம், நமஸ்கார மண்டபம், முகமண்டபம் ஆகியவற்றில் உள்ள தூண்களில் புடைப்பு சிற்பங்கள் உள்ளன.

ஸ்ரீபலிக்கல் இருக்கின்ற மண்டபத்தில் உள்ள 10 தூண்களிலும் சிற்பங்கள் உள்ளன. இங்கு இந்த மண்டபத்தைக் கட்டிய சந்தனகாளி வாரியாரின் அஞ்சலிஹஸ்த சிற்பம் உள்ளது. இங்கு ரதியும், மன்மதனும் ஒருவரை ஒருவர் பார்த்தபடி உள்ளனர். ரதியின் கையில் கரும்பு வில், மலர் அம்பு, மன்மதனும் கரும்பு வில்லுடனும், அம்புடனும் இருகிறான். இரண்டும் நின்ற கோலமுடையவை.

மன்மதன் அருகே உள்ள விளக்குபாவை சிற்பம் அற்புதமானது. இம்மண்டபத்தில் தாடியுடன் கூடிய அர்ஜுனன் கையில் நாகபாஷத்துடன் கர்ணன் நர்த்தன காளி, இராம இலட்சுமணர் என சிற்பங்கள். காளி எட்டு கைகள் உடையவளாய் நிற்கிறாள். இவை ஆளுயர சிற்பங்கள்.

முன்மண்டபத்தில் உள்ள 12 தூண்களிலும் சிற்பங்கள் உள்ளன. இராவணேஸ்வரன், பிக்சாடனர், வேணுகோபாலன், இங்கு அபூர்வமான ஒரு சிற்பம், சங்கு, சக்கரம் ஏந்திய விஷ்ணு இரண்டு கைகளில் பெண் ஒருத்தியை ஏந்தி நிற்கிறார். இவள் பெயர் ஆபகந்தி. பாற்கடல் கடையும்போது விஷ்ணு கடலில் இருந்து எழுந்துவந்த லட்சுமியை ஏந்தி எடுத்த நிகழ்ச்சி இது. அப்போது லட்சுமி ஆபகந்தி எனப்பட்டாள். இது அபூர்வமான சிற்பம்.

## கல்வெட்டுக்கள்:

இக்கோயிலில் நான்கு கல்வெட்டுக்கள் உள்ளன. ஒன்று 1234–ஆம் ஆண்டினது. கருவறையின் தென்பகுதி சுவரில் உள்ள இக்கல்வெட்டு மேல்மரியத்தூரரை சார்ந்த காவல் அரங்க நாராயணர் என்பவர் இக்கோயில் கட்டியதைக் குறிப்பிடுகிறது. இது கிரந்தம் கலந்த கல்வெட்டு, 1521–ஆம் ஆண்டு கல்வெட்டு. முல்லை மங்கலம் திருவிக்ரமன் என்பவர் இங்கு முகமண்டபத்தைக் கட்டியதை கூறும். 1622–ஆம் ஆண்டு கல்வெட்டு. இக்கோயில் கட்டுமானத்தைச் செய்த முல்லை மங்கலம் தாமோதரன் இறந்ததைக் கூறும். ஒருவர் இறப்பை பற்றிய இக்கல்வெட்டு விருத்தப்பாடல் வடிவில் அமைந்தது. இதுபோன்ற கல்வெட்டு இம்மாவட்டத்தில் வேறு எங்கும் இல்லை.

## பூஜைகாலம்

காலை 6.00 மணிக்கு நடை திறப்பு
காலை 6.30 மணிக்கு அபிஷேகம்
காலை 7.00 மணிக்கு தீபாராதனை
காலை 10.00 மணிக்கு தீபாராதனை
காலை 10.20 மணிக்கு திருநடை அடைப்பு
மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு தீபாராதனை
மாலை 7.00 மணிக்கு தீபாராதனை
மாலை 7.15–க்கு திருநடை அடைப்பு

## விழா:

வைகாசி பெருந்திருவிழா
கார்த்திகை – கழுக திருவிழா

## நேர்ச்சை:

பூஜை, விழா தாந்திரீக ஆகமப்படி நடக்கிறது. நிர்மாலிய பூஜையில் திருமதுரம் படைக்கப்படும். செவ்வாய் சிறப்பு பூஜை. சுமங்கலிகள் தாலிபாக்கிய பூஜை. முழுநிலவில் புஷ்பாபிஷேகம், துலாபாரம் உண்டு. தேங்காய் மூடியில் நல்லெண்ணெய் விட்டு திரியிட்டு எரிப்பது கன்னி, சுமங்கலிகளுக்கு நல்லது என்ற நம்பிக்கை இங்கு உள்ளது.



**துர்க்கை செப்பு படிமம்**

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 29. அருள்மிகு குமாரசுவாமி திருக்கோயில்

வேளிமலை, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | முருகன் |
| இறைவி | – | வள்ளி தெய்வானை |
| தலவிருட்சம் | – | வேங்கை |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் குமாரகோயில் சந்திப்பிலிருந்து 2 கி.மீ மேற்குத் தொலைவில் கோயில் உள்ளது. நாகர்கோவிலிருந்து 15 கி.மீ தொலைவு பேருந்தில் சென்று குமாரகோயில் சந்திப்பில் இறங்கி நடந்து செல்லலாம், ஆட்டோ வசதி உண்டு. மினி பஸ் வசதி உண்டு. தங்கும் வசதி உண்டு. (தனியார்) உணவக விடுதிகள் உள்ளன.

## தலபுராணம்:

குமாரகோயில் முருகன் கோயில் இருக்கின்ற இடம் வேளிமலை எனப்படும். சுமார் 200 அடி உயரம் உடைய இம்மலை மேற்கு தொடர்ச்சி மலையின் ஒரு பகுதி. வேள் மன்னர்கள் ஆண்ட

பகுதி இது. ஆதனால் வேளிமலை ஆனது. இக்கோயிலுடன் தொடர்புடைய கல்வெட்டுகள் வேளிர் மலை என்றே கூறுகின்றன.

இக்கோயிலுக்கு என்று தனியான தலபுராணம் கிடையாது. கந்தபுராணக்கதையில் முருகன் வள்ளியை மணந்த வரலாற்றை இத்துடன் சார்த்தி சொல்கின்றனர். முருகப்பெருமான் வேள்வி நடத்திய இடமாதலால் வேளிமலை ஆயிற்று என்பது தலபுராணம். குற்றாலக்குறவஞ்சி என்ற சிற்றிலக்கியத்தில் திரிகூட இராசப்ப கவிராயர் நாஞ்சில் நாட்டு வேள்வி மலை எனக் கூறுகிறார்.

கவிராயர் இந்த மலையை முருகன் வள்ளியுடன் இணைக்கிறார். விநாயகர் யானையாக மாறி வள்ளியைப் பயமுறுத்தி விளையாடியதும், வேலவன் வேங்கை மரமாக மாறியதும் கடைசியில் வள்ளியம்மையை மணமுடித்ததும் ஆகிய செய்திகள் குறவஞ்சியில்

*வெருமி வருந்தினை குணத்தில் பெருமிருகம் விலக்கி*
*வேங்கையாய் வெயில் மறைத்த பாங்குதனை குறித்தே*
*அருளிறைஞ்சிவேலர்தமக்கொருபெண்ணைக்கொடுத்தோம்*
*ஆதினந்து மலைகளெல்லாம் சீதனமாக கொடுத்தோம்*

என வருகிறது.

தலபுராண கதையை நினைவுபடுத்தும் வகையில் இக்கோவிலைச் சுற்றிய பகுதிகள் வழங்குகின்றன. வேளிமலை அடிவாரத்தில் வாழும் குறவர்கள் வள்ளியின் உறவினர்கள் என்ற நம்பிக்கை உண்டு. இப்பகுதியில் வள்ளிகுகை, வள்ளிசோலை, கிழவன் சோலை, வட்டச்சோலை போன்ற இடங்கள் உள்ளன. இக்கோயில் திருவிழாவில் வள்ளியை முருகன் திருமணம் செய்த காட்சி நாடகத்தன்மையுடன் காட்டப்படுகிறது. இக்கோயில் அருகே உள்ள கிராமத்தின் பெயர் தினை வள்ளி.

## கோயில் அமைப்பு:

பிரமாண்டமான குளத்தின் இருகே 200 அடி உயரமுள்ள சிறு குன்றில் அமைந்த இக்கோயில் கிழக்கு நோக்கி உள்ளது.

பெருமளவில் மழையைப் பெறுவதால் இந்த மலைப்பகுதி பச்சைப்பலேனெ இருக்கிறது. கோயிலின் கிழக்கே பெரிய வாசலும் எதிரே காவடி மண்டபமும் உள்ளன என்றாலும் பக்தர்கள் மேற்கு வாசல் வழியே செல்கின்றனர். வாகனங்களை நிறுத்த வசதியான இடம் இங்கே உண்டு.

கோயிலைச்சுற்றி மதிலும், பக்தர்கள் உணவு உண்ணும் இடம், அலுவலகம், திருக்கிணறு உள்ளன. இப்பரந்த வெளியில் தான் கோயில் உள்ளது. இங்குள்ள திருக்கிணற்றுக்கு தரை மட்டத்தில் உள்ள படியில் இறங்கி குகை போன்ற அமைப்பில் நுழைந்து நீர் மட்டத்திற்கு செல்லலாம்.

கோயிலின் மேற்குப் பிரகாரம் வழி சென்று கிழக்கு பிரகாரத்தை அடையலாம். இப்பிரகாரம் முகப்பு மண்டபம் ஒன்றாக உள்ளது. இப்பெரிய மண்டபத்தில் கல்யாண விநாயகர், இடைய நயினார் கோயில்கள் உள்ளன. இம்மண்டபத்தை அடுத்து ஒரு உட்பிரகாரம், ஸ்ரீகோயிலும் உயரமான மேடையில் உள்ளன.

ஸ்ரீகோயிலுக்குச் சோபனப்படியில் ஏறிச்செல்லலாம். ஸ்ரீகோயில் கருவறை அந்தராளம், அர்த்தமண்டபம் என அமைந்தது. அர்த்தமண்டபத்தை நந்தி மண்டபம் என்கின்றனர். உட் பிரகாரத்தில் பரிவார தெய்வங்கள் உள்ளன.

இக்கோயில் பல காலகட்டங்களில் கட்டப்பட்டு இருக்க வேண்டும். இதன் கட்டுமானம் பற்றிய சான்றுகள் கல்வெட்டுகளில் இல்லை. கிழக்கு பிரகாரத்துடன் திருவிதாங்கூர் அரசர்கள் காலத்தில் படிப்படியாக கட்டப்பட்டது. இம்மண்டப தூண் ஒன்றில் துப்பாக்கிய ஏந்திய வீரனின் சிற்பம் உள்ளது. சங்கு முத்திரை புடைப்பு சிற்பமும் உண்டு. இவை இம்மண்டபத்தின் காலத்தை வரையறை செய்கின்றன.

முகப்பு மண்டபம் கல்யாண விநாயகர் கோயில் கருவறையில் ஒரு கல்வெட்டு உள்ளது. இது கி.பி. 16–ஆம் நூற்றாண்டினது. இதனால் உள் சுற்றுப்பிரகாரமும் பரிகார தெய்வங்களும் இதே காலத்தில் ஏற்பட்டிருக்கலாம். கருவறை கட்டுமானம் பழையது. இது 16–ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டு

12, 13 ஆம் நூற்றாண்டுகளில் கட்டப்பட்டிருக்கலாம். இதற்கு முன்பே இது வழிபாடு கோயிலாக இருந்தது.

## மூலவர்:

இக்கோயிலின் கருவறையில் முருகன், வள்ளி தெய்வானையுடன் இருக்கிறார். மூலவரான முருகன் 2.44 மீட்டர் உயரம்; நின்றகோலம் இரண்டு கரங்கள் அபய வரத முத்திரை. குமரிமாவட்டத்தில்இதுபோன்றகல்படிமம்எங்கும்இல்லை.தலையில் மகுடம், கழுத்தில் மாலைகள், இடதுபுறம் வள்ளி 1.88 மீட்டர் உயரம். மூலவர் தென்கிழக்கு நோக்கியவர். மூலவரின் காதுகள் சற்று நீண்டு உள்ளன.

வெளிப்பிரகார மேற்கு வாயிலின் அருகே மயில் மண்டபத்தில் செம்புத்தகடு வேயப்பட்ட கொடிமரம் உள்ளது. உட்பிரகாரம் வலதுபுறம் கல்யாண விநாயகர் தம்பியின் திருமணத்திற்கு உதவியவர். இம்மண்டப வாசலில் துவார பாலகர்கள் இவர்களுக்கு இங்கே பெயர் வீரபாகு, வீர கந்தர்வ மூர்த்தி.

உட்பிரகார தென்கிழக்கு மூலையில் இளைய நயினார் இவருடன் வள்ளி தெய்வானை சமேதராக இருக்கிறார். மேற்கு பிரகாரத்தில் காசி லிங்கம், இதையடுத்து ஒரு சித்தரின் சமாதி, வடமேற்கு மூலையில் மணவிடை குமாரர். இவர் விழாக் காலங்களில் வலம் வருபவர், செப்பு படிமம் நவராத்திரி பூஜையின் போதும் மார்கழி திருவிழாவின் போதும் திருவனந்தபுரத்திற்கு எழுந்தருள்கின்றவர் இவர்.

வடக்கு பிரகாரத்தில் தென் முகமாக ஆறுமுக நயினார் சன்னதி உள்ளது. வள்ளி தெய்வானை சமேதராக ஆறு முகங்களுடன் இருக்கிறார். இவரது கோயில் அருகே நடராஜர் சன்னதி உள்ளது. இங்கு அர்ச்சகர் எப்போதும் இருப்பதால் ஆறுமுகனாரை வழிபட எளிது. வேங்கை மரத்திற்கு தனிக் கோயில் உள்ளது. இக்கோயிலின் தலவிருட்சம் வேங்கை மரமே.

கிழக்கு பிரகாரத்தில் மகாதேவர், கிழக்கு நோக்கியும் சிவகாமி தெற்கு நோக்கியும் வடதுபுறம் சண்டிகேஸ்வரரும் இருக்கின்றனர். மகாதேவரின் எதிரே நந்தியும் கார்த்திகை மாதம் தீபம் ஏற்றும் ஸ்தம்பமும் உள்ளன. இக்கோயிலில் தட்சனுக்குத் தனிக்கோயில் உள்ளது. பக்தர்கள் ஆட்டுத்தலையுடன் கூடிய தட்சனை முதலில் வணங்கி விட்டு கிழக்கு வாசல் வழி கோயிலுக்குச் செல்வார்கள். வழிபாடு முடிந்து மேற்கு வாசலுக்கு வரும்போது கைகளால் கண்களை மறைத்த வண்ணம் தட்சன் வாசலைக் கடந்து செல்வார்கள். கோயிலிருந்து வெளியேறும்போது தட்சனை வழிபட்டால் ஐஸ்வரியம் போய் விடும் என்பது நம்பிக்கை.

கோயிலின் கிழக்கு நடையில் வெளிப்புறம் விநாயகருக்கு தனிச்சன்னதி உள்ளது. முருகனுக்குக் காவடி கட்டுவது, முடி காணிக்கை செலுத்துவது மற்றும் வெடி வழிபாடு ஆகியன இந்த கோயிலின் முன்மண்டபத்தில்தான் நடக்கிறது.

## கல்வெட்டுகள்:

இக்கோயிலில் 5 கல்வெட்டுகள் அடையாளம் காணப்பட்டுள்ளன. இவற்றில் இரண்டுதான் அச்சில் வந்துள்ளன. 18–ஆம் நூற்றாண்டு ஆரம்பத்தில் உள்ள ஒரு கல்வெட்டு உஷ பூஜைக்கு அளிக்கப்பட்டது. இக்கல்வெட்டு, குமாரகோயில் பகுதியை பிரம்மபுரம் வெள்ளிமலை என்றும் மூலவரை வேலாயுதப் பெருமாள் என்றும் குறிப்பிடும். அச்சில் வராத கல்வெட்டு மணவாள விநாயகர் கருவறையிலும் வேங்கைமர சன்னதி சுவரிலும் உள்ளவை. இவை 16–ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகள். இவை நிரந்தர கல்வெட்டுகளே. இவற்றில் சமூக செய்திகளும் உள்ளன.

இக்கோயிலின் கிழக்குப்பிரகார தூண்களிலும், முகப்பு மண்டப தூண்களிலும் புராண இதிகாச சிற்பங்கள் உள்ளன.

## பூஜை விவரம்

காலை 4.30 மணிக்கு திருநடை திறப்பு
காலை 5.00 மணிக்கு அபிஷேகம்

காலை 5.30 மணிக்கு உஷ பூஜை

காலை 6.00 மணிக்கு ஸ்ரீபலி

காலை 11.00 மணிக்கு அபிஷேகம்

பகல் 12.00 மணிக்கு அலங்கார தீபாராதனை

பகல் 12.00 மணிக்கு திருநடை சார்த்துதல்

மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு

மாலை 6.30 மணிக்கு தீபாராதனை

இரவு 8.00 மணிக்கு தீபாராதனை

இரவு 8.30 மணிக்கு திருநடை சார்த்துதல்

## நேர்ச்சை:

பலவகையான காவடி எடுத்தல், துலாபாரம், பிடிப்பணம் மாறுதல், குழந்தைகளுக்கு மொட்டை போடுதல், சோறு ஊட்டுதல், காது குத்துதல், மாவிளக்கு ஏற்றுதல், உப்புமிளகு காணிக்கை செலுத்துதல், அரிசி, பயறு, வகைகள் காய்கறி, பழங்கள் காணிக்கை, கஞ்சிப்புரையில் உருண்டு கொடுத்தல், வெளிப் பிரகார அங்கபிரதட்சனம் செய்தல்.

இக்கோயிலில் வெள்ளிக்கிழமை நடைபெறும் கஞ்சி தர்மம் முக்கியமானது. தீராத நோயைப் போக்க கஞ்சியை பிரசாதமாக உண்பது முக்கியம். கஞ்சி தர்மத்திற்கு கஞ்சிப்புரை உள்ளது. திருக்கல்யாண நிகழ்ச்சியில் வள்ளிகுகை போன்ற இடங்களிலும் கஞ்சி தர்மம் நடக்கிறது. இதற்குரிய கஞ்சி தொட்டிகளை இப்போதும் காணலாம்.

## திருவிழா:

சித்திரை விசு கணி காணுதல், வைகாசி திருவிழா 10 நாட்கள் ஆடி அமாவாசை (இம்மாதம் அனுச நட்சத்திரத்தில் கோயிலில் நிறை செய்வார்கள். கோயிலிருந்து நெல் கதிர்களை கொண்டு சென்று வீட்டில் வைப்பார்).

ஆவணி கடைசி வெள்ளி மலர் முழுக்கு விழா. மாலை 7 மணி முதல் இரவு 10 மணி வரை அலங்கார தீபாராதனை.

புரட்டாசி நவராத்திரி பூஜையை முன்னிட்டு மகம் நட்சத்திரத்தன்று காலை 5.30 மணிக்கு சுவாமி புறப்பட்டு பத்மநாபபுரம் சென்று அங்கிருந்து பத்மநாபபுரம் சரஸ்வதியம்மன், சுசீந்திரம் முன்னுதித்தநங்கையம்மன் திருவனந்தபுரம் ஆரியசாலை மண்டபத்தில் எழுந்தருளல்.

ஐப்பசி சூர சம்ஹார விழா. கார்த்திகை திருக்கார்த்திகை சொக்கப்பனை எரிக்கப்படுதல். கடைசி வெள்ளிக்கிழமையன்று பலவித காவடிகள் வரும்.

மார்கழி சுசீந்திரம் கோயில் தேரோட்ட விழாவினை காண முருகன் புறப்படுதல். தைப்பூச திருவிழா, திருக்கல்யாண கால்நாட்டு விழா. பங்குனி அனுசம் நாளில் இரவு திருக்கல்யாணம் நடைபெறும்.

வைகாசி திருவிழா 10 நாட்கள் நடைபெறும். 9ஆம் நாள் தேரோட்டம். இந்த திருவிழாவில் சுவாமி வேட்டைக்குச் செல்லுதல், நவதானியங்கள் நடுவில் இருத்தல் சிறப்பான நிகழ்வு பத்தாம் நாள் ஆறாட்டு. பங்குனி திருக்கல்பாண விழா. வள்ளிக்கும், முருகனுக்கும் நடந்த திருமணம் இவ்விழாவில் நடத்தி காட்டப்படும்.

இக்கோயிலிருந்து 2 கி.மீ தொலைவில் உள்ள வள்ளி குகை அருகே பாறையில் விநாயகர், வள்ளி, வேலவர் புடைப்பு சிற்பங்கள் உள்ளன. திருக்கல்பாணத்தில் பக்தர்கள் இச்சுனையில் நீராடுவார்கள். திருக்கல்யாணம் அன்று காலை முருகன் பல்லக்கில் எழுந்தருளி வள்ளி குகை அருகே செல்வார். அன்று கஞ்சி தர்மம் நடக்கும். பிற்பகல் 3.30 மணிக்கு முருகன் வள்ளியை பல்லக்கில் அழைத்து வரும் போது குறவர்கள் தடுப்பார்கள். குறவர்கள் தோல்வி அடைந்து சரண் அடைவார்கள். இந்த குறவர்கள் மலைப்பகுதியில் முருகன் கோயில் பின்புறம் வாழ்பவர்கள். இரவு 8 மணிக்கு திருக்கல்யாணம் நடக்கும். தேன், தினை மாவு பிரசாதமாக வழங்கப்படும்.

## சிறப்புகள்:

வேளிமலை இயற்கை எழில் சூழ்ந்த மலை, கோயிலின் எதிரே பெரிய குளம் வேளிமலையில் பல குகைகள் உள்ளன. இங்கு சித்தர்களும், ஞானிகளும் வாழ்ந்திருக்கின்றனர். இங்கே கோனார் சமாதியில் இருப்பவர் ஒரு சித்தர். இங்கே அடங்கிய இன்னொரு சித்தர் சுடலையாண்டி சுவாமி. திருவனந்தபுரத்தில் ஆஸ்ரமம் அமைந்திருந்த அபேயானந்த சுவாமிகள் குமாரகோயிலில் அருள் பெற்றவர்.

இக்கோயிலைப் பற்றி சில சிற்றிலக்கியங்கள் வந்துள்ளன. த. வேலப்பன் எழுதிய வேலாயுதபப்பெருமாள் பிள்ளைத்தமிழ் 1977ல் வந்தது. கவிராஜ பண்டித இராமசுப்பிரமணிய நாவலரின் குமாரக்கோயில் கலம்பகம் 1966–ல் வந்தது.

## அன்னதானம்:

இத்திருக்கோயிலில் தினமும் 100 பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.



திருக்கோயில் தொலைபேசி : 04651 – 250706
இணையதளம் : www. kanyakumaritemples.org
மின்னஞ்சல் : velimalaimurugantemple@gmail.com



# 30. அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## வெள்ளிமலை, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பாலமுருகன் |
| தலவிருட்சம் | – | ஜோதி மரம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | ஏகதள விமானம் |

## அமைவிடம்

கல்குளம் வட்டத்தில் அடங்கியது வெள்ளிமலை ஊர். நாகர்கோவிலிலிருந்து 10 கி.மீ தொலைவில் இருப்பது. நாகர்கோவிலிலிருந்து வெள்ளிச்சந்தை சாலையில் 4 கி.மீ தொலைவிலும் திங்கள்நகரிலிருந்து 7 கி.மீ தொலைவிலும் இருக்கிறது. கோயில் 250 அடி உயரமுள்ள 16 ஏக்கர் பரப்புள்ள சிறு மலையில் அமைந்துள்ளது. இம்மலை மரங்களும், செடிகளும் நிறைந்தது. மலையின் சுற்றுப்புற காட்சிகளின் அழகைக் காணவே இவ்விடத்திற்குச் செல்லலாம். இம்மலையின் மேலே செல்ல 101 படிகள் உள்ளன. இம்மலையைச் சுற்றி தோட்டங்களே அதிகம். இங்கே உணவு விடுதிகளோ, தங்கும் வசதிகளோ கிடையாது.

## தலபுராணம்:

இக்கோயில் குறித்த தலபுராணம் வாய்மொழியாக சொல்லப்படுகிறது. அதுவும் தோற்றக்கதையே. ஒரு இளம் பெண் வெள்ளிமலை அடிவார பகுதியில் பதநீர் காய்ச்சிக்கொண்டிருந்தாள். அப்போது சிறுவன் ஒருவன் வந்தான். அவன் கொஞ்சம் குடிக்க நீர் வேண்டும் என அவளிடம் கேட்டான். அவள் அவனைப் பார்த்து அந்த மலை மேல் ஒரு ஊற்று இருக்கிறது. அங்கே போய் தண்ணீர் குடி என்றாளாம். அதற்கு அவன் நீயும் என்னுடன் வந்து சுனையைக் காட்டு என்றான். அவள் அவனை அழைத்துக்கொண்டு குன்றின் மேல் குறிப்பிட்ட இடத்தில் வந்த போது சிறுவனைக் காணவில்லை. இந்த விசயத்தை ஊர் மக்களிடம் சொன்னாள் அந்த பெண். பின் அங்கே பாலசுப்பிரமணியனுக்கு கோயில் எடுத்தனர்.

## கோயில் அமைப்பு:

கருவறை, அந்தராளம், முன்மண்டபம் என அமைந்த சிறு கோயில். சுற்றி கூரையில்லா பிரகாரம் உண்டு. கருவறை கட்டுமானப்படி 17 அல்லது 18 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் என தெரிகிறது. 19–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நீலகண்ட ஆச்சாரியார் என்றும் தமிழ் அறிஞர் இக்கோயிலைப் பாடியிருக்கிறார். இப்பாடல்கள் அச்சில் வரவில்லை. இக்கோயில் ஒருமுறை ஏதோ காரணத்தால் அடைபட்டு விட்டது. பக்தர்களால் திறக்க முடிய வில்லை. ஆச்சாரியார் முருகனைத் துதித்து பாடினார். உடனே கதவுகள் திறந்தன என்னும் செய்தியைச் சதாசிவம் என்பவர் எழுதியுள்ளார்.

## கருவறை மூலவர்:

கருவறை மிகச்சிறியது. பழைய கட்டுமானம் மாறி இருக்கிறது. மூலவர் பாலசுப்பிரமணியன் நின்ற கோலத்தில் காட்சி அளிக்கிறார். இதன் உயரம் 90 செ.மீ ஆகும்.

## பரிவார தேவர்கள்:

கணபதி, சாஸ்தா, சிவன், நவக்கிரகங்கள் இவை எல்லாம் சிறு கோயில்களாக காணப்படுகின்றன.

## பூஜை விவரம்

காலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு
காலை 6.30 மணிக்கு உஷ பூஜை
மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு சாயராட்சை
மாலை 7.00 மணிக்கு தீபாராதனை
மாலை 8.00 மணிக்கு திருநடை அடைப்பு

## விழா:

கந்தசஷ்டி விழா, தைப்பூச விழா, சித்திரை விசு விழாக்கள் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது.

ஒவ்வொரு மாத கடைசி வெள்ளிக்கிழமை சிறப்பு விழா நடைபெறுகிறது. கோயிலை அடுத்துள்ள பரந்த வெளியில் கட்டப்பட்டுள்ள அரங்கில் நிகழ்ச்சிகள் நடத்துகின்றனர். கோயிலில் கஞ்சி நேர்ச்சைகள் பிரபலமாய் நடந்து வருகிறது. பக்தர்கள் எல்லோருக்கும் கஞ்சி வழங்கப்படுகிறது. சுற்றுப்புற ஊர்களில் இருந்து காவடி கட்டிக்கொண்டு இவ்வூருக்கு வருகிறார்கள்.

## சிறப்பு செய்திகள்:

இக்கோயிலின் வலது புறம் மலையடி வாரத்தில் ''ஸ்ரீ விவேகானந்த மந்திரம்'' என்னும் ஆஸ்ரமம் உள்ளது. இந்த ஆஸ்ரமத்தை நிறுவியவர் சுவாமி அம்பிகானந்த சுவாமிகள். இவர் இராமகிருஷ்ண பரமஹம்சரின் பத்தினி சாரதாதேவியாரிடம் மந்திர தீட்சை பெற்றவர். இவர். 1940ல் வெள்ளிமலையில் 4 ஏக்கர் பரப்பளவுள்ள ஆஸ்ரமத்தை அமைத்து தங்கினார். 1950ல் சமாதி ஆனார். இது இயற்கை எழில் கொஞ்சும் இடம். சமயப்பணி செய்யும் தலம்.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 31. அருள்மிகு பகவதியம்மன் திருக்கோயில்

## சிதறால், கல்குளம் வட்டம்.

இறைவி – பகவதி அம்மன்
ஆகமம் – தாந்திரீகம்

## அமைவிடம்

நாகர்கோவில் – திருவனந்தபுரம் சாலையில் இருக்கும் குழித்துறையில் இருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ள ஊர். அருமனை என்ற ஊர் அருகே உள்ளது. சிறிய கிராமம். குழித்துறையில் இருந்து திக்குறிச்சி செல்லும் சாலையில் அமைந்த இவ்வூருக்கு பஸ் வசதி குறைவு. குழித்துறையில் இருந்து சிதறால் மலையடிவாரம் வரை ஆட்டோவில் செல்லலாம். நல்ல உணவு விடுதி கிடையாது. மலைமேல் செல்லவேண்டி இருப்பதால் குடிநீர் வைத்துக்கொள்வது நல்லது. திருச்சாரணத்து மலை எனப்படும் இம்மலையின் அடிவாரம் வரை வாகனம் செல்லும். அதன் பிறகு மலைமேல் நடக்க வேண்டும். இந்த மலை மத்திய அரசு தொல்லியல் துறையின் கீழ் இருப்பது. தமிழக அரசு சுற்றுலாத்தலமாக அறிவித்து உள்ளது. மலையடிவாரத்தில் இருந்து சரிவான பாதையில் நடக்கும்படி அமைந்தது. இடையில் இளைப்பாற வசதி உண்டு.

## கோயில் அமைப்பு:

சமணக்கோயிலான திருச்சாரணத்து மலைக்கோயிலில் அண்மையில் (1913) வைக்கப்பட்ட பகவதி கோயில் இது. இக் கோயில் சமணக் கோயில். இப்போதும் அரசு வெளியீடும் அப்படியே கூறுகிறது. கன்னியாகுமரி மாவட்டத்தின் முக்கியமான சுற்றுலாத் தலம் ஆகையால் பக்தர்கள் இக்கோயிலைத் தரிசித்துவிட்டு இம்மலையையும் பார்க்கலாம்.

இந்த மலை மேற்குதொடர்ச்சி மலையின் ஒரு பகுதி. 80 ஏக்கர் பரப்புள்ள இந்த மலை மரங்கள், செடி கொடிகள் நிரம்பியது. அடிவாரத்தில் இருந்து மலைமேல் ஏறிச் சென்றால் பழைய சமண அடையாள கோபுரத்தைப் பார்க்கலாம். கோபுரம் அருகே பல்லவ காலத்தை நினைவுபடுத்தும் தோரணவாயில் உள்ளது. இதனுள் நுழைந்து குகைப்பகுதி வழி சென்றால் தொங்குபாறையில் சிறிய கூடத்தைப் பார்க்கலாம். இது சுமார் 4.50 மீட்டர் நீளம், 2.10 மீட்டர் அகலம் உடையது. தரையும் பக்கவாட்டுச்சுவரும், பிற்கால அமைப்பு தொங்குபாறையின் சிற்பங்கள், கல்வெட்டுகள் உள்ளன. இது வழிபாட்டிற்குரிய இடமல்ல. இப்பாறையின் மேல் விமானம் உண்டு. பழைய விமானத்தைப் போன்ற புதிய கட்டுமானம்.

தொங்குபாறை பகுதியிலிருந்து இறங்கி 30 மீட்டர் நடந்தால் இன்றைய பகவதி கோயிலையும் பார்க்கலாம். இது பழைய சமணக் கோயில். கோயில் முன் பலிபீடம் உண்டு. இது பிற்காலத்தது. இக்கோயில் இயல்பாக அமைந்த பெரிய குகைக்கோயிலின் முன்பு கட்டப்பட்ட கோயில். குகைக்கோயில் என்னும் அடையாளத்தை வெளியில் இருந்து பார்க்க முடியாது. இது மேற்கு நோக்கிய கோயில். இக்கோயிலின் முன் நின்று பார்த்தால் கண்ணுக்கு எட்டிய தூரம் மலை. அதையும் தாண்டி தேங்காப்பட்டணம் கடல். இங்கு நின்று மலையைப் பார்ப்பது சுகமான அனுபவம். இக்குகையின் முன் உள்ள கட்டுமானம் இது.

இக்குகைக்கோயில் 6 மீட்டர் நீளமும், 4.20 மீட்டர் அகலமும், 2.10 மீட்டர் உயரமும் கொண்டது. இதில் 3 கருவறைகள் உள்ளன.

வலப்புற இரண்டு கருவறைகளில் பார்சுவநாதரும், மகாவீரரும் உள்ளனர். முதல் கருவறையில் பகவதி.

குகையின் முன்பகுதி கட்டுமானம் 13–ஆம் நூற்றாண்டிற்கு உட்பட்டது. முன்மண்டபம் அர்த்தமண்டபம் என அமைந்தது. தரைமட்டத்தில் இருந்து 1.80 மீட்டர் உயரமுள்ள இப்புதிய கட்டுமானம் முழுவதும் கருங்கல்லால் ஆனது. இங்குள்ள சமையல் அறையின் கிழக்கு பக்கம் குகை உள்ளது என்கின்றனர். இக்கோயிலின் முன் வற்றாத நீர் சுனை உண்டு. இதன் தரையில் அமர்ந்து மலை வளாகத்தைக் காணலாம்.

## மூலவர்:

குகைக்கோயிலின் பகுதி மூன்று கருவறைகள். ஒன்றில் பகவதி மற்ற இரண்டிலும் சமண தெய்வங்கள். (பார்சுவநாதர், மகாவீரர்) முதல் கருவறையில் பகவதி, இதில் பாவைவிளக்கு ஒன்றும் உள்ளது. பரிவார தெய்வங்கள் இங்கு இல்லை.

## கல்வெட்டுக்கள்:

இக்கோயிலின் அருகே பாறையிலும் தொங்குபாறையிலும் 17 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவற்றில் 12 கல்வெட்டுகள் சமண சமயம் தொடர்பானவை. பிற ஐந்து கல்வெட்டுகளும் இக் கோயில் இந்துகோயிலாக மாற்றம் பெற்றபின் வெட்டப்பட்டவை. இதன்படி இக்கோயில் 13–ஆம் நூற்றாண்டு இந்துகோயிலாக மாற்றம் பெற்றது என்று தெரிகிறது. இங்குள்ள பாறையில் உள்ள ஒரு கல்வெட்டு பாண்டிய நாட்டு அமைச்சன் தமிழ் பல்லவராயன் கி.பி. 1263–ல் இக்கோயில் வழிபாட்டிற்கு நிபந்தம் அளித்ததைக் கூறும். இதனால் கி.பி.13–ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட அளவில் இக்கோயில் பகவதி கோயிலாக இருந்தது தெரிகிறது. 1913–ஆம் ஆண்டு மலையாள கல்வெட்டு மூலம் திருநாள் என்னும் திருவிதாங்கூர் அரசர் புதிதாக ஒரு பகவதி படிமத்தைக் கருவறையில் பிரதிஷ்டை செய்ததைக் கூறும்.

இம்மலையில் காணப்படும் கல்வெட்டுகளில் " திருச்சாரணத்து" மலை என்றே குறிக்கப்படுகின்றது. இங்குள்ள

பழைய கல்வெட்டு விக்ரமாதித்ய வரகுணன் என்ற ஆய் மன்னனைக் குறிப்பிடுகிறது. இவன் கி.பி.885 முதல் 925 வரை ஆண்டவன். இக்கல்வெட்டு கி.பி.913–ஆம் ஆண்டினது. இந்த அரசனின் பெயர் இங்குள்ள ஒரு வட்டெழுத்து கல்வெட்டிலும் காணப்படுகிறது. இது 906–ஆம் நூற்றாண்டினது. இது நிபந்த கல்வெட்டு.

## சிற்பங்கள்:

தொங்குபாறையின் கீழ் ஏராளம் அருகர் திருமேனிகள் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. இந்த தீர்த்தங்கரர்களின் சிற்பங்களின் கீழ் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் உள்ளன. இவை சிற்பங்களைச் செய்வித்தவர்கள் பெயர்களைக் குறிப்பிடுகின்றன. இங்கே 24 தீர்த்தங்கரர்கள் உள்ளனர் என்ற கருத்து உள்ளது.

இப்பாறையில் அருகச் சிற்பங்கள் மூன்று இடம் பெறுகின்றன. நடுவில் நிற்பவர் பார்சுவநாதர். நாககுடையின் கீழ் நிர்வாணமாய் நின்ற கோலத்தில். இவரது வலதுபுறம் பூவுடன் நாகக்குடையின் கீழ் யட்சி. அருகனின் தலை அருகே பறந்த நிலையில் சாமரம் வீசும் வானவர்கள் உள்ளனர்.

அமர்ந்த கோல அருகன் மகாவீரரோ ஆதி பகவானாகவோ இருக்கலாம். வடக்கோடியில் நேமிநாதர். அடுத்து அம்பிகா யட்சி, நேமிநாதரின் யட்சி, மிக அற்புதமான சிற்பம் பார்சுவ நாதரைத் தவிர பிறர் முக்குடையின் கீழ் உள்ளனர். இக்கோயிலில் செல்பவர் இந்த சிற்பங்களைப் பார்ப்பது தனி அனுபவம்.

## பூஜை

காலை மணி 7.00

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 261928.



# 32. அருள்மிகு பார்த்தசாரதி திருக்கோயில்

## பார்த்திவபுரம், விளவங்கோடு வட்டம்.

இறைவன் – பார்த்தசாரதி
விமானம் – திராவிடம்
ஆகமம் – தாந்திரீகம்

### அமைவிடம்

நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் இருக்கும் மார்த்தாண்டம் ஊரிலிருந்து தேங்காய்பட்டணம் செல்லும் வழியில் உள்ள புதுக்கடை என்ற ஊரை அடுத்து இருக்கும் பார்த்திவபுரம் ஊரில் உள்ளது. நாகர்கோவிலிலிருந்து இவ்வூர் 48 கி.மீ தொலைவில் இருப்பது. நாகர்கோவிலிலிருந்து மார்த்தாண்டம் சென்று அங்கிருந்து புதுக்கடை பேருந்து நிலையத்தில் இறங்கி இக்கோயிலுக்கு ஆட்டோவில் செல்லலாம். புதுக்கடை ஊரில் சிற்றுண்டி நிலையம் உண்டு. பார்த்திவபுரம் சிறிய ஊர் ஆனதால் மார்த்தாண்டத்தில் தங்கிச் செல்லலாம்.

### தலபுராணம்:

இக்கோயில் இருந்த இடத்தில் சமஸ்கிரதக் கல்விக்கூடம் இருந்தது. அக்கூடத்தில் இருந்து விஷ்ணு கோயிலே பின்னர் வளர்ச்சி பெற்றது என்பது ஒரு செய்தி.

## மூலவரும் பரிவார தெய்வங்களும்:

மூலவர் பார்த்தசாரதி எனப்படுகிறார். நின்றகோலம். 4 கைகள் சங்கு, சக்கரம், அபய, வரதம், கல் படிமம். இக்கோயிலின் வெளிப்பிரகாரத்தின் வடக்கன் பெருமாள், விநாயகர், கரைகண்டேஸ்வரர், மகாதேவர், அம்பாடி கிருஷ்ணன், சாஸ்தா, நரசிம்மன், நாகர் ஆகியோர் பரிவார தெய்வங்களாக உள்ளனர்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் நடுவன் அரச தொல்லியல் துறைபால் பராமரிக்கப்படுகிறது. இக்கோயில் மிகப்பரந்த வளாகத்தில் இருப்பது. கோயிலைச் சுற்றி மதில் உண்டு. பிற்காலக் கட்டுமானம். கோயிலின் பரந்த வெளியிலும் நிழலைக்கொடுக்கும் மரங்களும், கோயிலின் பழமை பற்றிய செய்திகளும் இக்கோயிலுக்குப் புதிய அழகைக் கொடுக்கின்றன. 4 ஏக்கர் பரப்புள்ள வளாகத்தின் நடுவே இக்கோயில் உள்ளது. கிழக்கு நோக்கிய இக்கோயிலின் முன்பகுதியில் நிற்கும் மரங்களின் கீழ் நாகர் முதலான பழைய சிற்பங்க உள்ளன.

கோயிலின் முன் பகுதி முகமண்டபம் கற்கால கட்டுமானம், நமஸ்கார மண்டபம் வேணாட்டரசன் காலத்தது. கோயில் கருவறை, அர்த்த மண்டபம் என அமைத்தது இக்கட்டுமானமும் விமானமும் இதன் காலம் பழமையானது எனப் பறை சாற்றுவன/ அண்மையில் இது பழமை கெடாதவாறு புதுப்பிக்கப்பட்டுள்ளது. உள் பிரகாரம் வெளிப்பிரகாரம் என அமைந்தது. உள் பிரகாரத்தில் சுற்றாலை மண்டபம் இருந்ததன் அடையாளம் உண்டு.

## வரலாறு / கல்வெட்டுகள்:

கன்னியாகுமரி மாவட்டத்தில் மிகப் பழைய கோயில்களில் ஒன்று, இக்கோயிலில் 5 கல்வெட்டுகளும் செப்பேடும் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டுகளின் வழி இக்கோயில் கட்டுமானம் பற்றிய செய்தியை அறிய முடிகிறது. இக்கோயிலைக் கட்டிய ஆய் அரசன் கோக்கருநந்தடக்கன் கிபி 857 முதல் 885 வரை ஆய்நாட்டை ஆண்டவன்.

இவன் தன்னை வல்லபன் பார்த்திவசேகரன் என அழைத்துகொண்டான். இதனால் இந்தப் பேரிலேயே இக் கோயில் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இக்கோயில் இருக்கும் ஊரே பார்த்திவசேகரபுரம் என்று அழைக்கப்படுகிறது.

இக்கோயிலின் சிறப்பு இங்கு ஒரு சமஸ்கிருதக்கல்லூரி இயங்கியது என்பது தான். கவிபாஷனின் ஸ்வப்பனவாசவ தத்தா என்னும் புகழ் பெற்ற நாடகத்தின் சரியான பிரதி இக்கோயிலில் தான் கிடைத்தது.

இக்கோயிலின் அருகே ஒரு சாலை (சமஸ்கிரதப்பாடசாலை) இருந்தது. இக்கோயிலைக் கட்டிய கோக்கருநந்தடக்கன் இந்தச் சாலையைப் பாதுகாத்திருக்கிறான். இவன் பெயராலேயே இந்த ஊரும் இச்சாலையும் அழைக்கப்பட்டது. இச்சாலை கிபி 866ல் ஆரம்பிக்கப்பட்டது இங்கு 95 மாணவர்கள் பயின்றனர். வேதங்கள் புராணங்கள் இதிகாசங்கள் இங்கு கற்பிக்கப்பட்டன.

## பூஜை

| | |
|---|---|
| காலை | 6 மணி திருநடைதிறப்பு |
| | 6.30 மணி தீபாராதனை |
| | 8.00 மணி தீபாராதனை |
| | 10.30 மணி திருநடைசார்த்தல் |
| மாலை | 5 மணி திருநடைதிறப்பு |
| | 6.30 மணி திருநடை திறப்பு |
| | 8.00 மணி தீபாராதனை திருநடை அடைப்பு |

ஆவணி திருவோணத்திருவிழா 10 நாட்களில் நடக்கிறது.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 261928.



# 33. அருள்மிகு கரியமாணிக்கத்தாழ்வார் திருக்கோயில்

### திப்பிறமலை, விளவங்கோடு வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | ஸ்ரீ கிருஷ்ணன்/ கரியமாணிக்கத்தாழ்வார் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

திப்பிறமலை விளவங்கோடு வட்டம் கருங்கல் அருகே உள்ள சிற்றூர். நாகர்கோவிலிருந்து கருங்கல் வழியாக 20 கி.மீ தொலைவில் உள்ளது. கோயில் இருக்கும் இடம் சானல்கரையில் உள்ளது.

## தலபுராணம்:

பாகவத கதையுடன் தொடர்புடைய கதை. கண்ணன் ஆயர்பாடியில் வெண்ணெய் திருடி உண்ணுகின்றான். ஆயர் பெண்கள் யசோதையிடம் முறையிடுகின்றனர். அவள் கண்ணனுக்கு பலவாறு தண்டனை கொடுக்கிறாள். ஒருமுறை அன்னைக்கு தன் பேருருவத்தைக் காட்டுகிறான். அந்த நிகழ்ச்சியே இக்கோயிலின் மூலவர் வடிவாய் காட்டப்பட்டுள்ளது.

## கோயில் அமைப்பு:

சானல் கரையில் 3.00 மீட்டர் ஆழமான பரந்து கிடக்கும் ஒன்றரை ஏக்கர் பரப்பளவுடைய தோட்டத்தின் நடுவே கோயில் உள்ளது. பச்சை பசேலென்ற மரங்கள், பட்டப்பகலிலும் இருள் சூழ்ந்த அழகு இதன் நடுவே கிருஷ்ணன் இருக்கின்றார்.

தரைமட்டத்திலிருந்து 120 செ.மீ உயரம் உடையது. இக்கோயில் கிழக்கு பக்கம் பார்த்த நிலையில் உள்ளது. ஒரே வாசல். கருவறை, அர்த்த மண்டபம், உட்பிரகாரம் என அமைந்துள்ளது. அர்த்த மண்டபத்தில் ஐந்து பக்தர்களுக்கு மேல் நிற்க முடியாது. உட்பிரகாரம் பக்தர்களின் பயன்பாட்டில் இல்லை. கேரளப்பாணி வட்ட வடிவ கோயில் ஒடு வேயப்பட்டுள்ளது. உச்சியில் ஒரு கும்பம் உள்ளது.

## கருவறை:

கருவறை மிக சிறியது. மகா விஷ்ணுவின் நின்ற கோலம் 4 மீட்டர் உயரம் உடையது. குமரி மாவட்டத்திலுள்ள கோயில்களில் மிக உயரமான விஷ்ணு சிலை, கல் படிமம், நான்கு கைகள், சங்கு, சக்கரம், ஒரு கை கதாயுதத்தை பிடித்தப்படி உள்ளது. மறு கை அபயமுத்திரை காட்டுகிறது. தலையில் கரண்ட மகுடம், கழுத்தில் ஆபரணங்கள், இடையில் பீதாம்பரம் கலை வண்ணமுடைய சிற்பமாக உள்ளது. மூலவரின் வலதுகால் உடைந்துள்ளது. மூலவர் வளர்ந்து கொண்டே இருப்பதால் சிற்பியே உடைத்தான் என்பது நம்பிக்கை.

விஷ்ணுவின் வலது புறம் தேவகி அமர்ந்த கோலத்திலும் வலது கையில் வெண்ணெய், இடது கையில் கரண்டியும் உள்ளது. மூலவர் உயரமானவா. கருவறை மிகச் சிறியது. அதனால் மூலவரின் பிரம்மாண்டமான தோற்றம் தெரியவில்லை. மூலவருக்கு மாலை சார்த்த கருவறையில் படிக்கட்டு வசதி உண்டு.

## பரிவார தெய்வங்கள்:

விநாயகர், மகாதேவர், சாஸ்தா மற்றும் நாகர் சிலைகள்

## பூஜை விவரம்

காலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு

காலை 6.00 மணிக்கு உஷ பூஜை

காலை 10.00 மணிக்கு உச்ச பூஜை

மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு

இரவு 7.30 மணிக்கு தீபாராதனை

இரவு 8.00 மணிக்கு திருநடை சார்த்துதல்.

## திருவிழா:

இத்திருக்கோயிலில் திருவோண விழா பத்து நாட்கள், அஷ்டமி, ரோகிணி விழா, கிருஷ்ண ஜெயந்தி விழா மிக சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

## கல்வெட்டுகள்:

இக்கோயிலுக்கு வெளியே பலிபீடக்கல்லில் ஒரு கல்வெட்டு உள்ளது. வட்டெழுத்து வடிவம் கி.பி.11–12 ஆம் நூற்றாண்டு. இதில் மூலவர் கரியமாணிக்கத்தாழ்வார் என்றும், இவ்வூர் திருப்பிறைமலை என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இது நிபந்த கல்வெட்டு, பீடக்கல்லை 11– ஆம் நூற்றாண்டில் பிரதிஷ்டை செய்த விவரமும், செய்தவரின் பெயரும் உள்ளது. இதனால் இக்கோயில் பழைமையானது என தெரிகிறது. 10–ஆம் நூற்றாண்டிலேயே வழிபாட்டுக்குரியதாய் இருந்திருக்கலாம்.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 261928.



# 34. அருள்மிகு ஆதிகேசவப்பெருமாள் திருக்கோயில்

## திருவட்டாறு, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | ஆதிகேசவப்பெருமாள் |
| தலவிருட்சம் | – | செண்பகம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | துவிதல விமானம் |

### அமைவிடம்

திருவட்டாறு நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் உள்ள மார்த்தாண்டத்திலிருந்து குலசேகரம் நெடுஞ்சாலையில் உள்ளது. நாகர்கோவிலிலிருந்து 30 கி.மீ தொலைவு அரசினர் விடுதி உண்டு. எளிய உணவகங்கள் கோயில் அருகே உண்டு. கோயில் முன் பகுதியில் வாகனங்களை நிறுத்தும் வசதி உண்டு.

### தலபுராணம்:

ஆதிகேசவப்பெருமாள் கோயிலின் தலபுராணம் மலையாளம் மற்றும் சமஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளிலும் உள்ளது. இவை அச்சில் வந்துள்ளன. மலையாள மொழியில் உள்ள ஹரிஹர ஐயர் எழுதிய திருவட்டார் ஸ்தல மகாத்மியம், கேசவரு

சங்கரநாராயணரின் கேசிமதனம் துள்ளல், கேசிமதன ஆட்டக்கதை ஆகிய மூன்றும் சமஸ்கிருத மொழி தலபுராண பாதிப்பால் எழுந்தவை. இத்தலப்புராண கதைகள் 17 அல்லது 18 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம்.

ஆதிகேசவப்பெருமாள் கோயில் தலபுராணம் திரேதாயுகத்தில் நடந்ததாகக் கூறப்படுகிறது. பிரம்மா, விஷ்ணுவைத் தரிசிக்க யாகம் செய்தார். யாகச்சடங்கு பிறந்ததால் கேசன் என்ற அரக்கனும் கேசி என்ற அரக்கியும் பிறந்தனர். அவர்கள் பிரம்மனை வேண்டி மரணமில்லா வாழ்வு பெற்றனர்.

கேசன் தேவர்களையும் முனிவர்களையும் துன்புறுத்தினான். இந்திரனுடன் போரிட்டான். இந்திரன் ஓடி மறைந்தான். விஷ்ணு கேசனை அழிக்க முயன்றான். முடியவில்லை. அப்போது பராசக்தி கேசனை அழிக்க முடியாது. ஆதிசேசன் கேசனைச் சுற்றி அரண் கட்டட்டும், விஷ்ணுவே அதன் மேல் சயனிப்பாய் என்றார். விஷ்ணு அப்படியே செய்தார். கேசி ஆதிசேசனை அழிக்க கங்கையைத் தியானித்து இரண்டு நதிகளாக வந்தாள். ஆனால் அறிதுயில் பெருமாளின் அருளால் அந்த ஆறுகள் கோதையாறும், பரளியாறும் ஆக ஆயின.

இக்கோயில் தொடர்பான ஹாதலேய மகரிஷியைக் குறிக்கும் ஒரு கதை உண்டு. சோமயானி முனிவரின் மகன் ஹாதலேயர். அவர் ஆதிகேசவனின் அருளால் அஷ்டாங்க மந்திர உபதேசம் பெற்று ரிஷி ஆனார். ஆதிகேசவன் அருகேயே இருக்க வரம் கேட்டிருந்தார்.

## தலச்சிறப்பு:

2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட புறநானூறு என்ற நூல் திருவட்டாறு ஊரைக் குறிப்பிடுகிறது. (பாடல் 396) இந்த ஊரில் எழினி ஆதன் என்ற அரசன் இருந்தான். இறையனார் அகப்பொருள் உரை, பாண்டிக்கோவை, கலிங்கத்துப்பரணி போன்ற நூல்களும் இவ்வூரைக் குறிப்பிடுகின்றன.

பன்னிரு ஆழ்வார்களில் தலைமை சான்றவரான நம் மாழ்வார் இத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளார். இவர் தம்

பதிகத்தில் வாட்டாறு வளம் மிக்கது. வன்னெஞ்ச இரணியனை மார்பு இழந்தது, வானுலருக்கு வழி திறப்பது, அரவணை மேல் பள்ளி கொண்ட திருவுருவம் இருப்பது என்கிறார். இவரது ஒரு பாடல் வருமாறு.

*அருள்பெறுவார் அடியார்தம் அடியனேற்கு ஆழியன்*
*அருள்தருவான் அமைகின்றான் அது நமது விதி வகையே*
*இருள்தருமா ஞாலத்துள் இனிப்பிறவி யான் வேண்டேன்*
*மருள்ஒழிநீ மடநெஞ்சே வாட்டாற்றான் அடிவணங்கே*

வங்காள வைணவத்தின் பக்தி மறுமலர்ச்சிக்குக் காரணமான சைதன்யர் (1485–1533) திருவட்டாறு ஆலயத்துக்கு 1510–ல் வந்திருக்கிறார். இங்கு இருவருக்கு பிரம்மஸம்ஹிதையின் பாடபேதம் இல்லாத மூலப்பிரதி கிடைத்தது. இதன் ஐந்தாம் அத்தியாயத்திற்கு இங்கிருந்து உரை எழுதியிருக்கிறார்.

இஸ்கான் இயக்கத்தை நிறுவிய வேதாந்த சுவாமியின் சீடரான லோகநாதசுவாமி 1977 ஏப்ரல் 12ல் மாட்டுவண்டியில் திருவட்டாறு கோயிலுக்கு வந்தார். கேரளவர்மா என்ற அரசன் ஆதிகேசவனைப் படசங்கீரித்தனம் என்ற தலைப்பில் பாடியுள்ளான்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் 3 ஏக்கர் 27 செண்ட் பரப்புடையது. தரைமட்டத்திலிருந்து 5 மீ உயரமுள்ள பெரிய திட்டில் கோயில் உள்ளது. கோயிலின் பிரமாண்டமும் கோயிலைச்சுற்றி மூன்று புறமும் ஓடும் ஆறும் இதன் சிறப்பு.

கருவறை வாசல் மேற்கு பார்த்தது. ஆதிகேசவரின் சிரசு தெற்கே, பாதம் வடக்கே என அமைந்துள்ளது. பரளியாறு சிரசிலிருந்து பாதம் வழி ஓடி கோதையாற்றில் கலக்கிறது. மேற்கு வாசலில் சிங்க முகப்பு தூண்கள் 18 படிகள், இக்கோயிலின் முக்கிய வாசல் மேற்கு நோக்கியது என்றாலும் கிழக்கு வாசலேயே மக்கள் பயன்படுத்துகின்றனர்.

மேற்கு வாசலில் நுழைந்ததும் கொடிமரம், ஸ்ரீ பலிக்கல் பீடம், நான்கு பிரகாரங்கள் உள்ளன. ஸ்ரீபலி மண்டபத்தில் (சித்திரை சபை) நிறைய சிற்பங்கள் உள்ளன. இதை அடுத்து இருப்பது நாலம்பலம். இம்மண்டபம் 12 ஆம் நூற்றாண்டு ஆரம்பத்தில் கட்டப்பட்டது. முந்தைய காலங்களில் நாலம்பலத்தில் கதகளி, சாக்கியார் கூத்து, பாடகம் போன்ற கலைகள் நடந்தன.

நாலம்பலத்தின் எதிரே இருப்பது நமஸ்கார மண்டபம் (உதயமார்த்தாண்ட மண்டபம்) அதை அடுத்து ஸ்ரீ கோயில். இவற்றைச் சுற்றி உட்பிரகாரம், இதைச் சுற்றி கீழ்பகுதியில் திருமடப்பள்ளி, தென்மேற்கில் திருவோலக்க மண்டபம் உள்ளன. உட்பிரகாரத்தைச் சுற்றிலும் மேல்மாடியுள்ள சுற்றுமாடம் உண்டு. கன்னியாகுமரி மாவட்டத்தில் இத்தகை அமைப்புடைய ஒரே கோயில் இது ஒன்று தான்.

நமஸ்கார மண்டபம் 17 ஆம் நூற்றாண்டில் சீரமைக்கப் பட்டது. இம்மண்டபம் 12 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும். இம்மண்டபம் நுட்பமான மரவேலைப்பாடுகள் உடையது.

ஸ்ரீகோயில், கருவறை ஒற்றைக்கல் மண்டபம் என்னும் இரு பகுதிகளை உடையது. ஒற்றைக்கல் மண்டபம் 12 ஆம் நூற்றாண்டில் செப்பனிடப்பட்டது என்பதற்குக் கல்வெட்டு சான்று உள்ளது. அதனால் அதற்கு முன்பே இம்மண்டபம் கட்டப்பட்டிருக்கலாம். ஒரே கல்லால் ஆனது இம்மண்டபத் தளம்.

கருவறை மூன்று வாசல்களை உடையது. இது செவ்வக வடிவமானது. இடதுபுற வாசல் வழி கேசவனின் திருப்பாதங் களையும் வலதுபுற வாசல் வழி சிரசு பகுதிகளையும் நடு வாசல் வழி மார்ப்பு பகுதியையும் தரிசனம் செய்பலாம். ஸ்ரீ கோயில் அதிஷ்டானம், உபானம், சக்தி, முப்பட்டை, குமுதம், கண்டம், பட்டி, வேதிகை என்னும் முறைப்படி கட்டப்பட்டது. கருவறையைச் சுற்றி கந்தவார் என்னும் போலி வாசல்கள் உண்டு. இது பிற்கால சோழர்களின் ஆரம்பகால அமைப்பு.

இக்கோயிலின் விமானம் துவிதள விமானம் ஆகும். இது மரத்தால் ஆனது. சாப்வு கூரை வடிவு. ஐந்து ஸ்தூபிகளைக்

கொண்டது. ஸ்தூபிகள் செம்பால் செய்யப்பட்டு தங்க முலாம் பூசப்பட்டவை. விமானம் முழுவதும் மரப்பலகையால் மூடப்பட்டு செப்புத்தகடு வேயப்பட்டுள்ளது. இதைக் கேரள, திராவிட பாணி விமானம் என்பர்.

## கருவறை இறைவன்:

கருவறையில் ஆதிகேசவன், பாம்பின் மேல் பள்ளி கொண்ட வடிவில் இருக்கிறான். 16008 சாளக்கிராமங்களால் உருவாக்கப்பட்ட படிமத்தின் மேல் கடுசர்க்கரை சாந்து பூசப்பட்டு உருவாக்கப்பட்டது இந்த சயன படிமம். இவர் ஐந்து தலை கேசனின் மூன்று மடிப்பு அரவணையில் (புண்டலி மடிப்பு) சயன நிலையில் தென் வடலாக காட்சி தருகிறார். முகம் சற்று மேல் நோக்கி பார்த்தது போல் அமைந்தது.

கேசவனுக்கு இரண்டு கைகள். வலது கை மடிந்து முகத்தை நோக்கி சிம்மகர்ண முத்திரை காட்டுகிறது. இடது புஜம் இடையாக நீட்டி கைத்தலத்தையும் விரல்களையும் தளிர் இலை போல் தொங்க விட்டு பிரகாசித உறஸ்தமாய் அமைந்தது. கிரீடாமகுடம் அழகிய அணிகள்.

கருவறை கிழக்கு சுவரில் வரிசையாக மது, கைடவர், சூரியன் ஆகியோரும் ஆயுத புருசர்களான சக்கரம், வாள், கதை, வில், சங்கு ஆகியோரும் சந்திரன், கருடன் இருவரும் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. பாம்பணையின் முன் பூதேவி, ஸ்ரீதேவி, ஹாதலேய முனிவர் கடுசர்க்கரை படிமங்கள் உள்ளன.

கருவறையில் அர்சனா மூர்த்தி பஞ்சலோகம் படிமங்கள் உள்ளன. கேசவன் நின்ற கோலத்தில் ஏக பங்கம், நான்கு கைகள் சங்கு சக்கரம் ஏந்தியவை. பிற லோலாஹஸ்தம், அபயமுத்திரை மூர்த்தியின் இடதுபுறம் பூ தேவி, வலதுபுறம் ஸ்ரீதேவி உள்ளனர்.

## பரிவார தெய்வங்கள்:

ஆதிகேசவர் கோயிலில் வடமேற்கு பிரகாரத்தில் இருக்கும் திருவம்பாடி கோயிலை உபகோயிலாக கொள்ள வேண்டும்.

கருவறை தெய்வம் வேணு கோபாலன். திருவம்பாடி என்பது திரு அகம்பாடி என்பதன் மருவி ஆகும்.

அகம்பாடி கோயில் சோழர்கால பாணி. ஏகதள விமானம். திராவிட பாணி 12 ஆம் நூற்றாண்டு கட்டுமானம். கருவறை வேணுகோபாலன் நின்றகோல கல்படிமம். இடது காலை தரையில் ஊன்றி வலது காலை சற்று வளைத்து பாதம் படிய நிற்பது. உதட்டோரத்தில் பொருந்திய புல்லாங்குழலை இரு கைகளும் பிடித்துள்ளன.

தெற்கு பிரகாரத்தில் சாஸ்தா பரிவார தெய்வமாக உள்ளார். ஆதிகேசவர் கோவிலில் திருப்பணி நடந்த போது (1615) இக் கோயில் கட்டப்பட்டது. இக்கோவில் கருவறை நமஸ்கார மண்டபம் என அமைந்தது. சாஸ்தா உத்கடிக ஆசனத்தில் இருக்கிறார். இரண்டு கைகள், இடது கை ஆசனத்தைத் தொட்டு இருப்பது பூஸ்வரிச முத்திரை காட்டுவது; வலது கை சின் முத்திரை காட்டுகிறது. சாஸ்தாவின் எதிரே உள்ள நமஸ்கார மண்டபத்தின் கூரையில் அஷ்டதிக் பாலகர்களின் மரச்சிற்பங்களும், ராமாயண சிற்பங்களும் உள்ளன.

## சிற்பங்கள்:

இக்கோயிலின் நான்கு பிரகாரங்களிலும் உள்ள 224 தூண்களிலும், நாலம்பல மண்டபத் தூண்களிலும், ஸ்ரீ பலி கல் மண்டப தூண்களிலும் அருமையான சிற்பங்கள் உள்ளன. உதய மார்த்தாண்ட மண்டம், ஒற்றைக்கல் மண்டபம், சாஸ்தாங்கோயில் நமஸ்கார மண்டபம் கருவறை தொங்கு கூரை ஆகியவற்றில் அருமையான மரச்சிற்பங்கள் உள்ளன. ஆதிகேசவர் சுற்றுச்சுவர்களிலும் திருவம்பாடி கருவறை சுவர்களிலும் தாவரச் சாய ஓவியங்கள் உள்ளன.

இக்கோயில் வைஷ்ணவ கோயில் ஆயினும் சிவபுராண சிற்பங்கள் உள்ளன. ஸ்ரீ பலி மண்டபத்திலும் ஆள் உயர தாண்டவச் சிற்பம் உள்ளது. சிவன் காலினை வலது காது வரை தூக்கிய படி நிற்கிறார். அவருக்கு பத்து கைகள். கைகளில் தமரு, பரசு, அங்குசம் என உள்ளன. ஒரு கை கஜஹஸ்தம், ஒரு கை அபய முத்திரை.

சிவனின் சூலம் காலின் கீழ் கிடக்கும் அரக்கனைக் குத்துவது போல் உள்ளது.

இங்கே ஒரு தூணில் நந்தி தேவர் இருக்கிறார். இவருக்கு 4 கைகள். நந்தியின் முகம் குரங்குச் சாபலுடன் உள்ளது. இது போன்ற ஒரு சிலை கேரளம் கோட்டுக்கால் ஊர் குகைக்கோயிலில் உண்டு. ஒரு முனிவர் நந்தியைக் குரங்காகும் படி சபித்தார். சாப விமோசனமாக ராவணன் பிணத்தைப் பார்த்து வானரவீரர்கள் சூழ்ந்து நின்று பரிகாசம் செய்யும்போது நந்தியின் முகம் பழைய முகம் ஆகும் என்றான். அந்தக்கதை இங்கு சிற்பமாக உள்ளது.

இக்கோயிலில் பாகவதம், ராமாயணம், மகாபாரதம் தொடர்பாக நிறைய சிற்பங்கள் உள்ளன. இராமாயணச் சிற்பங்கள் அதிகம். தெற்கு பிரகார இடது புறக்கோடியில் கும்பகர்ண வதைக்காட்சி சிற்பம் உள்ளது. இது கம்பனின் காவியத்தைச் சித்திரிப்பது.

ஸ்ரீபலிக்கல் மண்டபம் மேல்சுவரில் ராவணப்போர்க் காட்சிகள் உள்ளன. நாலம்பலத்தில் உள்ள மன்தமன் ரதி சிற்பங்கள் மிக அற்புதமானவை. இச்சிற்பங்களின் மேல் சூரியஒளி படுவதால் சிற்பத்தின் அழகு இன்னும் ஜொலிக்கிறது. ரதி அன்னத்தின் மேல் அமர்ந்திருக்கிறாள். வலது கையில் தாமரை மொட்டு, மன்மதன் திரிபங்க வடிவமாய் நிற்கிறான்.

## கல்வெட்டுகள்:

ஆதிகேசவர் கோயிலில் 47 கல்வெட்டுகள் உள்ளன. இவை சமஸ்கிருதம், தமிழ், மலையாள மொழியில் அமைந்தவை. தமிழ் வட்டெழுத்து கிரந்த மலையாள வரி வடிவங்களில் உள்ளன. இங்குள்ள பழமையான கல்வெட்டு பிற்காலசோழ அரசனான முதல் குலோத்துங்கன் காலத்தது (1070–1120.) இது தவிர ஸ்ரீவீர ரவி வர்மன் (1604), இரவிவர்மன் குலசேகரப்பெருமாள் (17 நூற்றாண்டு), கோதைமார்த்தாண்டவர்மா (18 நூற்றாண்டு) ஆகியோரின் காலத்து கல்வெட்டுகளும் உள்ளன.

முதல் குலோத்துங்களின் கல்வெட்டு கருவறை இறைவனைத் திருவட்டாற்றுப் பள்ளிகொண்டான் எனக் கூறும்.

பிற கல்வெட்டுகள் பள்ளிகொண்டருளி நின்றபெருமான் ஆதிகேசவப்பெருமாள் (1603) எனக் கூறும்.

இக்கோயில் அதிக அளவில் கட்டுமானப் பணி செய்தவன் வீரரவிவர்மன் ஆவான் (1604) இவன் சுற்றாலை மண்டபம், மடப் பள்ளி, ஸ்ரீ பலிக்கல் மண்டபம் ஒற்றைக்கல் மண்டபம் ஆகியவற்றைக் கட்டியவன். இவனது இரு மனைவிகள் இக்கோயிலுக்கு நிபந்தம் கொடுத்துள்ளனர்.

## பூஜை

காலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு

காலை 5.30 மணிக்கு அபிஷேகம்

காலை 6.30 மணிக்கு உஷபூஜை

காலை 10.00 மணிக்கு தீபாராதனை

காலை 10.30 மணிக்கு உச்சகால பூஜை

மாலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு

மாலை 6.30 மணிக்கு சாயரட்சை பூஜை

மாலை 7.40 மணிக்கு நைவேத்யம்

இரவு 8.15 மணிக்கு திருநடை அடைப்பு

தாந்திரீகமுறை வழக்கில் உள்ளது. பூஜையைப் பித்த பூஜை, மூர்த்தி பூஜை, பிரசன்ன பூஜை, மானச பூஜை எனக் குறிப்பிடுவர். இப்பூஜைகள் ஆதிகேசவப்பெருமாள் கோயிலில் உண்டு. இங்கு மூலவருக்கு அபிஷேகம் கிடையாது. மூலவரான அர்ச்சனா மூர்த்திக்கு அபிஷேகம் உண்டு. இது பித்த பூஜை, நைவேத்தியம், தீபாராதனை காட்டுதல் பிரசன்ன பூஜை. இறை உருமுன் அமர்ந்து முத்திரை காட்டி வழிபாடு செய்தல் தாந்திரீகம் மானச பூஜை.

தின விசேஷங்களில் அபிஷேகம், தனி அலங்கரிப்பு, நமஸ்காரம், ஸ்ரீ பலி, வாகனம் உலாவரல் ஆகியன நடக்கும். இங்கு இப்போது நடக்கும் பூஜைகளை உஷபூஜை, எதிரெத்த பூஜை, பந்திரபடி பூஜை, உச்ச பூஜை, கந்த அர்ச்சன தீபாராதனை அத்தாழ பூஜை என வகைப்படுத்தலாம்.

## விழா:

சித்திரை – விஷு, பௌர்ணமி, ஸ்ரீராமநவமி, பரணி

வைகாசி – விசாகம்

ஆடி – மகர சங்கராந்தி, கோவில் நிறை

ஆவணி – கிருஷ்ணஜெயந்தி, திருவோணம்

கார்த்திகை – விருச்சிக விளக்கு

மார்கழி – சொர்க்கவாசல் ஏகாதசி,

ஐப்பசி, பங்குனி மாதங்களில் பத்து நாட்கள் விழா நடக்கும். பங்குனி மாத ஆறாட்டு விழா சிறப்பானது.

## சிறப்பு பிரசாதம்:

வைகாசி விசாகம் – மாம்பழம் பாயாசம்

ஆடி சங்கராந்தி – நல்லமிளகு, தேங்காய் கலந்து சமைக்கப்பட்ட பலகாரம், கூட்டு, பொடி அரிசி கஞ்சி

ஆவணி அஷ்டமி – உண்ணியப்பம்

கார்த்திகை – உச்ச பூஜை கஞ்சி சிவப்பு அல்லது வெள்ளை காய்ச்சிக்கிழங்கு, தேங்காய் நல்லமிளகு சேர்த்து தயாரிக்கப்படும் கூட்டுக்கறி கஞ்சி.

மார்கழி மஞ்சள் பொங்கல்; பெருந்திரு அமிர்து (தை ஆடி)

பிற நைவேத்யங்கள் – எரிசேரி, ஒலன், புளிசேரி, உப்பேரி, உப்பு மாங்காய், இடிச்சு பிழிஞ்ச பாயாசம், உண்ணியப்பம், ஒற்றவடை, துலாபாயசம், சதுர்சதம், அரவணை, பால் பாயசம், நெய் பாயசம் ஆகியன.

திருக்கோயில் தொலைபேசி : 04651 – 261298
இணையதளம் : www. kanyakumaritemples.org
மின்னஞ்சல் : thiruvattarperumal@gmail.com



# 35. அருள்மிகு திருவாழ்மார்பன் திருக்கோயில்

## திருப்பதிசாரம், தோவாளை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | திருவாழ்மார்பன் |
| இறைவி | – | கமலவல்லி ( சுவாமி மார்பில்) |
| தீர்த்தம் | – | சோமசுந்தர தீர்த்தம்/லட்சுமி தீர்த்தம் புஷ்கரணி |
| ஆகமம் | – | தாந்திரீகம்– பாஞ்சராத்தியம் |
| விமானம் | – | இந்திர கல்யாணி |

### அமைவிடம்

நாகர்கோவில் – திருநெல்வேலி பாதையில் 6 கி.மீ வடகிழக்கே உள்ளது திருப்பதிசாரம். தேசிய நெடுஞ்சாலையில் இருந்து 2 கி.மீ தொலைவு. பேருந்து வசதி உண்டு. ஆட்டோவில் செல்லலாம். வயல்களும், தோட்டங்களும் சூழ்ந்த ஊர். பழையாற்றங் கரையில் உள்ளது. நாகர்கோவிலில் தங்கி விட்டு இங்கு செல்லலாம். சிறிய ஹோட்டல்களும் உண்டு.

### தலபுராணம்:

திருப்பதிசாரம் எனப்படும் திருவெண்பரிசாரம் என்ற ஊர் திருவாழ்மார்பன் கோயில் குறித்த தலபுராணம் அச்சில்

வந்துள்ளது. இத்தலபுராணம் முதலில் சமஸ்கிருதத்தில் இருந்தது. இதனைத் தமிழில் சுப்பிரமணியசர்மா என்பவர் மொழிபெயர்த்து வெளியிட்டார். இப்பதிப்பில் சமஸ்கிருத மூலமும் உள்ளது.

திருவாழ்மார்பன் கோயில் தலபுராணம் நரசிம்ம அவதார கதையுடன் தொடர்புடையது. நரசிம்மர் இரணியனை வதம் செய்தபின் தன் சினம் மாறாமல் நின்றார். அவரது ஆவேசம் அடங்கவில்லை. பிரபஞ்சம் நடுங்கியது. இரணியனின் மகனான பிரகலாதன் நரசிம்மனைத் துதித்தான். அப்போதும் வேகம் அடங்கவில்லை. லட்சுமி தாமரை மலர்மீது அமர்ந்து தவம் செய்தாள். பெருமாள் அமைதி ஆனார். லட்சுமியை அவரது மார்பில் அமர்த்திக்கொண்டார். அந்த கோலத்தில் குடிகொண்டது இந்த கோயில். லட்சுமியை மார்பிலே இருத்திக்கொண்ட மார்பன் திருவாழ்மார்பன் ஆனார். திருவாகிய இலக்குமி தன் பதியாகிய விஷ்ணுவைச் சார்ந்து இவ்வூரில் தங்கியதால் இவ்வூர் திருப்பதிசாரம் என அழைக்கப்பட்டது.

சுசீந்திரம் கோயில் தலபுராணத்தில் இவ்வூர் பற்றிய கதை வருகிறது. ஒரு காலத்தில் சுசீந்திரம் ஞானாரண்யம் என அழைக்கப்பட்டது. சப்தரிஷிகள் இங்கு தவமிருந்தனர். இறைவன் அவர்களுக்கு சிவ வடிவில் காட்சி அளித்தார். முனிவர்கள் திருமால் வடிவில் சிவனைக் காணவிரும்பினர். அதற்காக சோமதீர்த்தம் என்ற இடத்தில் தவம் செய்தனர். அப்போது திருமால் காட்சியளித்த கோலமே திருவெண்பரிசாரம். இதனால் திருமால் சப்தரிஷிகள் சூழ பிரசன்னமூர்த்தியாக அமர்ந்து அருள்புரிகிறார்.

## நம்மாழ்வாரின் தாயின் ஊர்:

திருப்பதிசாரம் நம்மாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஊர். நம்மாழ்வார் ஆழ்வார்களில் திறமை சார்ந்தவர். இவர் ஆழ்வார்திருநகரியில் (திருநெல்வேலி மாவட்டம் காசி என்பவருக்கும் திருவெண்பரிசாரத்தில் இருந்த திருவாழ்மார்பன் என்னும் பெரியவரின் புதல்வியான உடையநங்கைக்கும் அவதாரம் செய்தவர்.) சிறு வயதில் 16 ஆண்டுகள் புளியமரத்தின் அடியில்

இருந்தவர் என்பது குருபரம்பரை கதை. இவரது காலம் கி.பி.8-ஆம் நூற்றாண்டு. பராந்தக பாண்டியன் காலம். இவர் பாடியவை 1359 பாடல்கள். இவற்றை வேதங்களில் சாராம்சம் என்பர். நம்மாழ்வார் சம்சார சம்மந்தமின்றி அமர்ந்திருக்கும்போது பெருமாள் தன் சௌந்தர்ய ரூபத்தைக் காட்ட ஆழ்வார் துக்கம் மறந்து இந்த பெருமானைப் பாடுவேன் எனக் கூறினாராம். நம்மாழ்வாரின் முன் பெருமாள் காட்சியளித்த இடம் இது எனவும் தலபுராணம் கூறும். நம்மாழ்வாரின் திருவாய்மொழி, 8-ஆம் பக்கத்தில் அங்கும் இங்கும் என்ற தலைப்பில் திருப்பதிசாரம் திருவாழ்மார்பன் பற்றி 11 பாடல்கள் உள்ளன. ஒன்று வருமாறு..

*வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த என்*
*திருவாழ் மார்பர்க்கு என்திறம் செல்வார் செய்வதென்*
*உருவார் சக்கரம் சங்கு சுமந்து இங்கு உம்மோடு*
*ஒருபாடு உழல்வான் ஓரவிபானும் உளனென்றே*

திருவாழ்மார்பன் இத்தலத்தில் பூதேவி, ஸ்ரீதேவி, ஆய்மகள் (நீளாதேவி அல்லது நப்பின்னை) சகிதம் இருக்கிறார் என்கிறார் நம்மாழ்வார். இத்தலம் பற்றி வேறொரு கதை வழங்குகிறது.

ஒருமுறை வேணாட்டு மன்னன் ஒருவனின் வெள்ளைநிற குதிரை தொலைந்து போயிற்று. காவலர் பல இடங்களில் தேடினர். மன்னரும் தேடிச் சென்றார். அது சோமதீர்த்த கரையில் புல் மேய்ந்து கொண்டிருப்பதைக் கண்டு அவ்விடத்திற்குத் திருவெண்பரிசாரம் எனப் பெயரிட்டார். சோமதீர்த்தத்தில் நீராடி அங்கு கோயில் கொண்ட திருமாலை வணங்கினார். கோயிலையும் பெரிதாகக் கட்டினார்.

## கோயில் அமைப்பு:

கோயில் முன்வாசலை அடுத்து இருப்பது கிழக்குப்பிரகாரம். இது மகாமண்டபம் எனவும் படுகிறது. இம்மண்டப வேலை திரு விதாங்கூர் அரசரான ஸ்ரீமூலம் திருநாள் காலத்தில் (1931 – 1948) முடிந்தது. இந்த மண்டபத்தில் கொடிமரம் உள்ளது. 40 அடி உயரமுள்ள இக்கொடிமரம் செம்புத்தகடு வேயப்பட்டது. இதன் உச்சியில் தங்கமுலாம் பூசப்பட்ட கருடனின் விக்ரகம் உள்ளது.

கோயிலின் பிற பிரகாரங்களில் சுற்றுமண்டபம் உண்டு. இது வெட்டவெளி பிரகாரம், கிழக்கு பிரகாரத்தில் கொடிமரத்தை அடுத்து இருப்பது ஸ்ரீ பலிக்கல். இதன் இருபுறமும் வைணவ அடையாளத்துடன் துவாரபாலகர்கள் உள்ளனர். இவர்களைத் தாண்டியதும் இருப்பது கொலுமண்டபம். முந்தைய காலங்களில் கோயில் கலைநிகழ்ச்சிகள் நடந்தன. இந்த மண்டபக் கட்டுமான அமைப்பின்படி 16–ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம். கொலுமண்டபத்தை அடுத்து இருப்பது அலங்கார மண்டபம். இதன் மேல்விதானம் முட்டை வடிவக் கல்லால் ஆனது. மரப்பணி அமைப்பு . இதில் 25 தாமரை மலர்கள் உள்ளன. இந்த மண்டபத்தை அடுத்து இருப்பது அர்த்தமண்டபம். இதை நமஸ்கார மண்டபம் என்கின்றனர். இங்கு பரிவார தெய்வ கோயில்கள் உள்ளன. இந்த மண்டபத்தின் மேல் விதானத்தில் தாமரை புடைப்பு சிற்பங்கள் உள்ளன. இவ்விதானம் இருக்கும் இடத்தை ஒற்றைக்கல் மண்டபம் என்கின்றனர்.

கருவறையைச் சுற்றி உட்பிரகாரம், மண்டபம் உண்டு. கருவறையின் கட்டுமான அமைப்பின்படி 11–ஆம் நூற்றாண்டு எனலாம். இது அதிஷ்டானம், உபானம், ஜகதி, முப்பட்டை, குமுதம், வேதிகை என அமைப்புடையது. கருவறையைச் சுற்றிய கர்ணகூடு ஆரம்பகால சோழர்பாணி. கருவறை விமானத்தை இந்திர விமானம் எனப்படுகிறது.

## சிற்பங்கள்:

இக்கோயிலின் கிழக்குப்பிரகார தூண்களில் தசாவதார சிற்பங்களும், பிற கடவுளரின் சிற்பங்களும் உள்ளன. இம்மண்டபம் கிழக்கு வரிசைத் தூண் ஒன்றில் நம்மாழ்வாரின் சிற்பம் உள்ளது. அமர்ந்த கோலம், சின்முத்திரை, அபயம் காட்டும் கைகள், கழுத்தில் மாலை, தலையில் பின் குடுமி, இவரது தலையின்மேல் ஐந்து தலை நாகம்.

கொலுமண்டபத்தில் வாமன விருத்தி, குழலூதும் கலைஞன், குதிரை வீரன், பாலகிருஷ்ணன், புடைப்புச்சிற்பங்கள்

உள்ளன. அலங்கார மண்டபத்தில் தெற்கு இறுதி தூணில் தலையில் மூன்று பானைகள், கையில் ஒரு பாத்திரம், இன்னொரு கையில் கோல் ஏந்தி நிற்கும் ஆண் சிற்பம் உள்ளது. இது கோயிலுக்கு பால் கொடுக்கும் யாதவரின் சிற்பம் என்கின்றனர். மேற்கு வெளிப்பிரகார அத்தாள மண்டப தூண்களில் இரு வணிக செட்டிகளின் சிற்பங்கள் உள்ளன. இவர்கள் இக்கோயிலுக்கு நிபந்தம் அளித்தவர்களாக இருக்கலாம்.

## மூலவர்:

கருவறை மூலவர், திருவாழ்மார்பன் 2.24 மீட்டர் உயரம். வலதுகாலை மடக்கி இடது காலை தொங்கவிட்டு அமர்ந்த கோலம். நான்கு கரங்கள் பின் கைகள் சங்கு, சக்கரம் ஏந்தியவை, முன் இரண்டும் அபய வரத, முத்திரை காட்டுபவை. கழுத்தில் லெட்சுமி உருவம் பொறிக்கப்பட்ட பதக்கம். மூலவர் கடுசர்க்கரை படிமம், திருமஞ்சனம் இல்லை. மூலவரின் பின் சுவரில் அத்திரி , வசிஷ்டர், காசியபர், பரத்வாசர், விஸ்வாமித்திரர், ஜமதக்னி, கௌதமர் ஆகியோர் புடைப்புச்சிற்பங்களாய் உள்ளனர்.

## பரிவார தெய்வங்கள்:

நமஸ்கார மண்டபத்தின் வடபுறம் விஷ்வசேனர், நடராஜர், நம்மாழ்வார் ஆகியோர் பரிவார தெய்வங்கள் சிறு கோயில்களில் உள்ளனர். விஷ்வசேனர் நான்கு கைகளுடன் சங்கு சக்கரம் ஏந்தி விஷ்ணுவின் அம்சமாக உள்ளார். இது நின்றகோல கல்படிவம். மூலவருக்கு அணிவித்த மாலையை விஷ்வசேனருக்கு அணிவித்தல் என்ற நடைமுறை இக்கோயிலில் இல்லை.

விஷ்வசேனர் கோயிலை அடுத்து விழாக்கால படிமங்கள் இருக்கும் சிறு கோயில் உள்ளது. இதில் உமா மகேஸ்வரர், நடராஜர், காரைக்கால் அம்மையார், சிவகாமி, சாஸ்தா ஆகியோரின் செப்புப் படிமங்கள் உள்ளன. அடுத்து நம்மாழ்வார் இருக்கிறார். பத்மாசனம் இட்டு அமர்ந்த கோலம்; இடதுகை மடியில்; வலது கை சின் முத்திரை.

நமஸ்கார மண்டபத்தின் தென்மேற்கில் இராமர், லெட்சுமணர், சீதை ஆகியோர் கோயில் கொண்டுள்ளனர். அருகே

விபீஷனர், அகத்தியர், குலசேகர ஆழ்வார் உள்ளனர். இவை கல்படிமங்கள். 1961 வரை சுதை வடிவங்கள். இவை எல்லாமே பரிவார தெய்வங்கள்.

## கல்வெட்டுக்கள்:

இக்கோயிலில் மூன்று கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவற்றில் முதல் கல்வெட்டு கி.பி. 1029–ஆம் ஆண்டினது. இது இரண்டுவரி கல்வெட்டு. மலைபாள ஆண்டு 304 (1129) விழிஞம் என்ற இராஜேந்திரகோடி பட்டணத்தில் (இன்றைய திருவனந்தபுரம் மாவட்டம்) வாழும் இராமநாதன் செட்டி என்பவர் இக்கோயிலுக்குக் கொடுத்த நிபந்தம் பற்றியது.

முதல் உட்பிரகாரத்தில் கிழக்கு சுவரில் 1614ஆம் ஆண்டு கல்வெட்டு உள்ளது. சம்பு நாராயண நம்பி என்பவர் இக்கோயில் திருவோண நட்சத்திரத்தில் விழா நடத்த 150 பணம் நிபந்தமாக கொடுத்துள்ளார். இங்குள்ள இன்னொரு கல்வெட்டு 1614–ஆம் ஆண்டினது. கல்குளம் வட்டம் பிள்ளையார் கோயில் ஊரைச் சார்ந்த இக்கோயிலின் ஒற்றைக்கல் மண்டபத்தில் தரைதளம் பணி செய்ததைக் கூறும்.

இக்கல்வெட்டுக்களின் வழி இக்கோயில் கட்டுமான பணிகள் பிற்காலச்சோழர் காலத்திற்கு முன்பே ஆரம்பித்து விட்டதாகக் கருதலாம். கி.பி.8–ஆம் நூற்றாண்டு நம்மாழ்வார் இக்கோயிலை மங்களாசாசனம் செய்திருப்பதால் இக்கோயில் 1200 ஆண்டுகளுக்கு முன்பே வழிபாடு பெற்றதாகவும் இருந்திருக்க வேண்டும். கோயில் மங்களாசாசனம் செய்யும் அளவுக்கு பழமையுடையது என்பதன்படி இக்கோயிலின் பழமை 1500 ஆண்டுகளுக்கு முன்பு செல்கிறது.

## பூஜை

காலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு, உற்சவர் அபிஷேகம்

காலை 5.30 மணிக்கு உஷபூஜை

காலை 9.00 மணிக்கு நிஷ்டான பூஜை

காலை 10.00 மணிக்கு உச்சபூஜை, திருநடை சார்த்துதல்.

மாலை 5.30 மணிக்கு திருநடை திறப்பு

மாலை 6.30 மணிக்கு சாயரட்சை பூஜை

இரவு 8.00 மணிக்கு அத்தாள பூஜை

## விழா:

சித்திரை திருவிழா 10 நாட்கள், மார்கழி வைகுண்ட ஏகாதசி (பரமபத வாசல் திறப்பு) புரட்டாசி சனிக்கிழமை, ஆவணி திருவோணம் ஆகியன. சித்திரை மாதம் மிருகசீரிஷம் நட்சத்திரத்தில் விழா ஆரம்பமாகிறது. ஐந்தாம்நாள் கருட சேவை, 9–ஆம் நாள் தேரோட்டம்; சுவாமி தேர் மட்டும் வலம் வரும் விஜயதசமியில் திருவாழ்மார்பனின் தங்கையான திருப்பதி நங்கை வெள்ளை குதிரை வாகனத்தில் அம்பெய்யச் செல்லும் நிகழ்ச்சி கோலாகலமாய் நடக்கும். இக்கோயிலில் ஊஞ்சல் சேவை உண்டு.

## நேர்ச்சை:

திருமாலின் அவதாரமான திருவாழ்மார்பனை வழிபடுவதால் நோய்கள் நீங்கும். மகப்பேறு கிடைக்கும் என்ற நம்பிக்கை உள்ளது. துலாபார நேர்ச்சை, பெருமாளுக்குத் திருமஞ்சனம் சார்த்துதல் முக்கியம். வழிபாடு நைவேத்தியங்களில் அரவணை, பால்பாயாசம் இரண்டும் குறிப்பிடத்தகுந்தவை.



நம்மாழ்வார்



திருவாழ்மார்பன்

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 282495.



# பன்னிரு சிவாலயங்கள்

## சிவாலய ஓட்டக் கோயில்கள்

கன்னியாகுமரி மாவட்டம் கல்குளம், விளவங்கோடு வட்டங்களில் உள்ள பன்னிரு சிவலாயங்களுக்கும் மாசி மாத மகா சிவராத்திரியில் நடந்தோ, ஓடியோ செல்லும் வழக்கத்தைச் சிவலாய ஓட்டம் என்கின்றனர்.

சிவன் கோயில்களில் பொதுவாக நடத்தும் பிரதோஷம், மகாசிவராத்திரி போன்றவற்றிலிருந்து சிவாலய ஓட்டம் வேறுபட்டது. 18–ஆம் நூற்றாண்டு ஓலைச் சுவடி ஒன்று முஞ்சிறை திருமலையில் சிவராத்திரி நடந்த நிகழ்ச்சியைக் கூறும்.

முஞ்சிறை ஊர் சிவன்கோயிலில் இருந்து சிவலாய ஓட்டம் தொடங்கி திக்குறிச்சி, திற்பரப்பு, திருநந்திக்கரை, பொன்மனை, திருப்பன்னிப்பாகம், கல்குளம், மேலாங்கோடு, திருவிடைக்கோடு, திருவிதாங்கோடு, திருப்பன்றிக்கோடு, நட்டாலம் ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களுக்குச் சென்று தரிசிப்பது நடைமுறை. முதல் கோயிலிருந்து கடைசி கோயில்வரை உள்ள தூரம் 102 கி.மீ.

சிவலாய ஓட்டக்காரர்கள் கோவிந்தா, கோபாலா என்றும், அப்பனே சிவனே வல்லபா என்றும் சொல்லிக்கொண்டே ஓடுவது வழக்கம். நிறைவுக் கோயிலான நட்டாலம் கோயிலுக்குச் சென்று

விட்டு திருவட்டாறு ஆதிகேசவப்பெருமாள் கோயிலுக்குச் செல்வது என்ற நடைமுறை உண்டு. சிவாலய ஓட்டக்காரர்கள் கையில் விசிறியும், கோயில்களில் காணிக்கையிட சிறு துணிப்பையும் வைத்திருப்பர். காவி அல்லது மஞ்சள் வேஷ்டி கட்டுவது வழக்கம்.

கருவறை சிவனைப் பார்த்து விசிறியால் வீசுவது இப்போதும் நடைமுறையில் உள்ளது. முந்தைய காலங்களில் ஆண்கள் மட்டுமே ஓடினர். இப்போதோ நிலை வேறு. பெரும்பாலும் இருசக்கர வாகனம், கார், வேன் என வாகனங்களிலேயே பக்தர்கள் பயணிப்பது சகஜமாகிவிட்டது. வாகனங்களில் சென்றாலும் ஐந்து முதல் 20 கி.மீ. நடக்கவேண்டிய சூழ்நிலை இன்று ஆகிவிட்டது.

சிவாலயங்களில் ஓடிச் செல்லும் பக்தர்களுக்கு வழிப்பாதையில் மோர், பானைக்காரம், சுண்டல் மற்றும் கஞ்சி என இலவசமாக விநியோகிப்பதும் உண்டு. பொன்மனை கோயிலில் பலாக்காய் எரிசேரி கறியும், தினை அரிசிக்கஞ்சியும், நல்லமிளகு நீரும் கொடுப்பது பல ஆண்டுகளாக நடக்கிறது. இப்போதும் கல்குளம் கோயிலில் சுவையான குழம்பு கறிகளுடன் வயிறு நிரம்ப சாப்பாடு போடுகின்றனர்.

பன்னிரு சிவாலயம் குறித்த பொதுவான ஒரு கதை வழங்குகிறது.

மகாபாரத யுத்தம் முடிந்த சமயம்; தர்மர் பெரிய யாகம் செய்ய விரும்பினார். யாகத்தில் கொடிய மனிதனும் சிங்கமும் கலந்த புருஷா மிருகத்தின் பால் வேண்டும் என தெரிவிக்கப்பட்டது. அதனிடம் பால் கறக்க பீமன் சென்றான். கண்ணன் அவனிடம் 12 ருத்ராட்சங்ளைக் கொடுத்து “பீமா புருஷா மிருகம் சிவன் நாமம் தவிர வேறு எதையும் கேட்காது, நீ கோவிந்தா கோபாலா என்று சொல்லிக்கொண்டு போ, அது உன்னைத் துரத்தும், அப்போது ருத்ராட்சத்தை வை, அது சிவலிங்கமாக மாறும். மிருகம் சிவனை வழிபட்டு மயங்கும். அப்போது பால்கறந்துவிடு” என்றார்.

பீமன் கண்ணன் சொல்லியபடி செய்தான். ருத்ராட்சம் சிவனாக மாறியபோது மிருகம் மயங்கி நின்றது. ஆனால் பால்

கறக்க தொடங்கியதும் விழித்துவிட்டது. அதனால் ஓடினான், 12 ருத்ராட்சங்களும் தீர்ந்துவிட்டன. கடைசியில் மிருகம் அவன் ஒரு காலைப்பிடித்துவிட்டது. அந்த கால் மிருகத்துக்குச் சொந்தமான காட்டில் பதிந்திருந்தது. இந்தச் சமயம் அங்கு வந்த தருமர் பீமனின் ஒரு காலை மிருகம் எடுத்துக்கொள்ளலாம் என்று நியாயம் சொன்னார். உடனே ருத்ராட்சங்கள் விஷ்ணு உருவங்களாக மாறின.

இதனைக்கண்ட புருஷா மிருகம் ஞானம் பெற்றது. பீமனும் தன் அகந்தை ஒழித்தான். பீமன் ஸ்தாபித்த 12 சிவாலயங்களும் வழிபாட்டிற்கு உரியதாயின. இப்படி ஒரு கதை காலம் காலமாய் வழங்குகிறது. பன்னிரு சிவாலயங்களில் ஒன்றான திக்குறிச்சி கோயில் முன் மண்டபத்தில் பீமன் கதையுடன் நிற்பதும், சிங்கமும் மனிதனும் கலந்த ஒரு உருவம் நிற்பதுமான புடைப்புச் சிற்பம் உள்ளது.

ஆண்டுக்கொருமுறை சிவராத்திரி என்பது வழக்க மாயினும் மாத சிவராத்திரியிலும் பக்தர்கள் செல்வது வழக்கமாய் உள்ளது. இக்கோயில்களில் பக்தர்களுக்குரிய வசதிகளும் செய்யப்பட்டு உள்ளன.







# 36. அருள்மிகு திருமலை மகாதேவர் திருக்கோயில்

முஞ்சிறை, விளவங்கோடு வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மகாதேவர் (சூலபாணி) |
| தலவிருட்சம் | – | வில்வமரம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

பன்னிரு சிவாலயங்களில் முதல் கோயில். நாகர்கோவிலிருந்து மேற்கே திருவனந்தபுரம் செல்லும் சாலையில் இருக்கும் மார்த்தாண்டம் ஊரிலிருந்து தேங்காய்பட்டணம் செல்லும் சாலையில் 8 கி.மீ தொலைவில் உள்ளது முஞ்சிறை ஊர். நாகர்கோவிலிருந்து 35 கி.மீ தொலைவில் இருப்பது. திருமலை என பொதுவாக அழைக்கப்படும். முஞ்சிறை பேருந்து நிறுத்தத்தில் அரை கி.மீ தொலைவில் இக்கோயில் உள்ளது. நடந்து செல்லலாம். மார்த்தாண்டத்திலிருந்து முஞ்சிறைக்குப் பேருந்து வசதி உள்ளது.

## தலபுராணம்:

இக்கோயில் உருவானது பற்றிய கதைகள் உள்ளன. மதுரை அரசரான திருமலை நாயக்கரின் தாய் உதிச்சி என்பவர் கட்டிய

கோயில் இது என்பது ஒரு செய்தி. முஞ்சிறை கிராமத்துடன் ராமாயணக்கதையை இணைக்கும் வாய்மொழிச் செய்திகள் காலங்காலமாய் பேசப்படுகிறது. ராவணன் சீதையைச் சிறை வைத்த முதல் இடம் (முன்சிறை) என்பது ஒரு கதை இக்கதைத் தொடர்பாக சில இடங்கள் உள்ளன என்பது மரபு வழி செய்தி. ராமனும் லட்சுமணரும் சீதையைக் காணாமல் தேடி வந்தபோது திருமலை சிவனைக்கண்டு வழிபட்டனர் என்று ஒரு கதை.

மூலவரை சூலபாணி என்று கூறும் மரபு தொடர்பான கதை உண்டு. பிரணவத்தின் பொருள் தெரியாததால் படைப்புக் கடவுளான பிரம்மனை முருகன் சிறைப்பிடித்து வைத்தான். இந்த இடமே முஞ்சிறை ஆயிற்று. அப்போது பிரம்மனின் முன் தோன்றிய வடிவமே சூலபாணி என்ற ஒரு கதையும் உண்டு.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் தரைமட்டத்திலிருந்து 12 மீட்டர் உயரமான பாறையில் உள்ளது. கிழக்கு நோக்கியது. 38 படிகள் ஏறி முன் வாசலில் செல்லலாம். வடக்கு வாசல் வழியாக சரிவான பாறை உண்டு. கோயிலின் முன் ஓட்டுக்கூரை. கட்டிடம் இங்கு செப்புக்கொடிமரமும் பலிபீடமும் உண்டு.

தெற்கு பிரகாரம் மேற்கு பகுதியில் ஒரு சிறிய குளம். எல்லா பக்தர்களும் குளிப்பதற்கு உரியது. சுமார் ஒரு ஏக்கர் பரப்பளவுள்ள ரம்மியமான சூழ்நிலையில் உள்ள இக்கோயிலைச் சுற்றி பெரிய மதில் உண்டு. உள்வளாகத்தில் சிவன் விஷ்ணு இருவருக்கும் கோயில். சிவன் கோயில் முகமண்டபம், நந்தி மண்டபம், வெளி, உள்பிரகாரங்கள், நமஸ்கார மண்டபம், கருவறை என்னும் அமைப்புடையது.

சிவன் கோயிலைப் போலவே விஷ்ணு கோயில் கருவறை அர்த்தமண்டபம், நமஸ்கார மண்டபம் என்னும் பகுதிகளை உடையது. சிவன், விஷ்ணு திருக்கோயில்களைச் சுற்றி உள் பிரகாரமும் திருச்சுற்று மண்டபமும் உண்டு. இக்கோயிலைச் சுற்றி யானைக்குளம், வடக்கே குளம், பற்றுக்குளம், தீர்த்தகுளம் என்று நான்கு குளங்கள் உள்ளன.

## கருவறை:

கோயில் கருவறை அர்த்தமண்டபம் உடையது. மூலவர் சூலபாணி சிவலிங்கம் ஆவுடையில் இருக்கிறார். மிகவும் பழைய கல்வெட்டு மூலவரை திருமலை மகாதேவர் எனக் குறிப்பிடுகிறது.

## பரிவார தெய்வங்கள்:

திருமலை கோயிலினுள் விஷ்ணு தனிக்கோயிலில் உறைகிறார். இக்கோயிலிலும் கொடிமரம் உண்டு. மூலவர் விஷ்ணு சதுர்புஜம், சங்கு, சக்கரம், வலது கை அபயம் காட்டுவது. இடது கீழ்கை கதையைப் பிடித்தது. விஷ்ணு இருபுறமும் ஸ்ரீதேவியர், பூதேவியர் உள்ளனர்.

விஷ்ணு கோயில் வடசுவரை சுற்றி சிறிய விநாயகர் கோயில்; மேலும் ஸ்ரீ கிருஷ்ணன், சாஸ்தா, நாகர் ஆகியோர் பரிவார தெய்வங்கள் ஆவார்.

## கல்வெட்டு:

இக்கோயிலில் மிக பழைமையான கல்வெட்டு பிரகாரப் பாறையில் உள்ளது. இந்த வட்டெழுத்து கல்வெட்டு கி.பி.9 ஆம் நூற்றாண்டினது. இந்தக் கல்வெட்டு இக்கோயில் இன்றைக்கு 1500 ஆண்டுகளுக்கு முற்பட்டு வழிபாட்டில் இருந்ததைச் சூட்சகமாய் உணர்த்தும். முதல் இராஜேந்திர சோழரின் கல்வெட்டு இக்கோவில் 11ஆம் நூற்றாண்டிலேயே திருமலை என வழங்கப்பட்டதைக் குறிப்பிடும். இதே காலத்தில் இக்கோயிலை நிருவகிக்க ஒரு சபை இருந்ததும் தெரிகிறது. இக்கோயிலின் கல்வெட்டுகளில் வழியும் இவை குறிக்கப்பட்ட அடையாளங்கள் வழியும் கிபி 9 ஆம் நூற்றாண்டிற்கும் கிபி 11ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலங்களில் மகாதேவர் கோயிலும், விஷ்ணு கோயிலும் கட்டப்பட்டிருக்கலாம் என்றும், கிபி 11 ஆம் நூற்றாண்டில் திருச்சுற்று மண்டபமும் 19 ஆம் நூற்றாண்டில் முன்மண்டபமும் கட்டப்பட்டிருக்கலாம் என்றும் தெரிகிறது.

## சிற்பங்கள்:

திருச்சுற்று மண்டபம் வடபகுதித் தூணில் ஆள் உயர அரச சிற்பம் உள்ளது. தொந்தியும் வடிந்த காதும் ஆபரணங்களும் இதை நாயக்க அரசரர்களில் ஒருவர் எனக் காட்டுகிறது. சிவன் கோயிலுக்கு எதிரே 22 தூண்கள் கொண்ட நீண்ட மண்டபம் உள்ளது. இங்கு தூண்களில் அர்ஜுனன் தபசு, சண்டை செய்யும் மல்லர்கள், பாவை விளக்குகள் என சில சிற்பங்கள் உள்ளன.

## பூஜை

காலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு
காலை 5.30 மணிக்கு அபிஷேகம்
காலை 6.30 மணிக்கு தீராதனை
காலை 8.30 மணிக்கு தீராதனை
பகல் 11.00 மணிக்கு உச்சகால பூஜை, திருநடை சார்த்துதல்
மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு சாயராட்சை
இரவு 8.00 அத்தாழ பூஜை, திருநடை சார்த்துதல்

## விழா:

இக்கோயிலில் மாசி மாதம் கும்பாஷ்டமி. கார்த்திகை மாதம் விருச்சிகாஷ்டமி, பிரதோஷம் போன்ற விழாக்களும் திருவாதிரை ஆயில்யம் நட்சத்திரங்களில் பூஜைகளும் கிருததாரையும் நடக்கின்றன. பங்குனி, புரட்டாசி நட்சத்திரத்தில் மகாதேவர் கோயிலிலும், விஷ்ணு கோயிலிலும் கொடியேற்று ஆரம்பித்து பத்து நாட்கள் விழா நடக்கிறது.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 261298.



# 37. அருள்மிகு மகாதேவர் திருக்கோயில்

திக்குறிச்சி, விளவங்கோடு வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மகாதேவர் (சூலபாணி) |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

பன்னிரு சிவாலயங்களில் இரண்டாவது கோயில். முதல் கோயிலான முஞ்சிறை திருமலை கோயிலிலிருந்து மார்த்தாண்டம் வழி 17 கி.மீ தொலைவில் இருப்பது. கிழக்கிருந்து மேற்காக ஒடும் தாமிரபரணி ஆற்றங்கரையை ஒட்டியிருக்கும் கோவில். நாகர்கோவிலிருந்து 36 கி.மீ தூரம். சிறிய ஊர். கோயில் வரை வாகனங்கள் செல்லும்.

பிற சிவாலய ஊர்களைப் போல இந்த ஊரும் மரங்கள் செடிகள் என செழிப்புடன் உள்ளது. தாமிரபரணி இந்த ஊரில் நீண்டு கிடப்பதால் இதன் வளம் தெரிகிறது. கோயில் கிழக்கு பார்த்தது. மக்கள் வடக்குவாசலையே பயன்படுத்துகின்றனர்.

## தலபுராணம்:

நம்பூதிரி ஒருவரின் கனவில் சிவன் தோன்றி ஆற்றின் கரையில் கோயில் எடுக்கக் கட்டளை இட்ட

தாகவும், அவர் தன் சொத்துகளை விற்று கோவில் கட்டியதாகவும் ஒரு கதை வழங்குகிறது. இக்கோயிலில் நந்தி இல்லை. பன்னிரு சிவாலயங்களில் இக்கோயிலில் மட்டும் தான் நந்தி இல்லை. இதற்கு ஒரு காரணம் கூறப்படுகிறது.

திக்குறிச்சி ஊருக்கு ஒரு முறை காளை ஒன்று வந்தது. ஊருக்கு மிகுந்த தொல்லை கொடுத்தது. ஊர் மக்கள் கல்லை எறிந்து அதை விரட்டிப்பார்த்தனர். அது மிரண்டு எதிர்த்தது. கம்பால் அடித்தனர். இது அறிந்த தரணநல்லூர் நம்பூதிரி அந்தக் காளையைத் தாமிரபரணி ஆற்றின் கரையில் மூழ்கச் செய்தார். அப்போது இக்கோயிலில் இருந்த நந்தி மாயமாகி விட்டது. அதன் பிறகு இக்கோயிலில் நந்தி வைக்க வேண்டாம் என ஊர் மக்கள் முடிவு செய்தனர்.

## கோயில் அமைப்பு:

இக்கோயிலைச்சுற்றி கருங்கல் சுவர், கிழக்கிலும், வடக்கிலும் சிறு மண்டபம் உண்டு. வெளிப்பிரகாரம் மரங்கள் நிறைந்தது. வடக்கு பிரகாரத்தில் நின்றபடி தாமிரபரணி ஆற்றைப் பார்க்க முடியும். கோயிலைச் சுற்றி வடக்கு, மேற்கு, தெற்கு பக்கங்களில் கல்லால் ஆன தொங்குகூரை உண்டு. இந்தக் கட்டுமான அமைப்பு பிற சிவன் கோயில்களில் இல்லை.

கிழக்கு முன்மண்டபத்தை அடுத்து தெற்கு வடக்காக நீண்டு கிடக்கும் கல்மண்டபம் உள்ளது. அடுத்து நமஸ்கார மண்டபம். கருவறையைச் சுற்றி சிறு பிரகாரம் உண்டு. இதை அடுத்தும் ஒரு உள் பிரகாரம் உண்டு. திருச்சுற்று மண்டபம் உண்டு.

## கருவறை:

கருவறை சிறியது. அர்த்தமண்டபமும் உண்டு. மூலவர் கல் படிமம். லிங்க வடிவம். 30 செ.மீ உயரம். கருவறை பிற்காலக் கட்டுமானம். கருவறை அதிஷ்டானம் மேற்கே நரசிம்மர் இருப்பது வழக்கம். இங்கே விஷ்ணு இருக்கிறார்.

## பரிவார தெய்வங்கள்:

வெளிப்பிரகார வடகிழக்கில் சாஸ்தாவும், அருகே கால பைரவரும் நிற்கின்றனர். தென்மேற்கில் விநாயகர். மேற்கு வாயு மூலையில் ஆகாச யட்சி இருக்கிறான்.

## சிற்பங்கள்:

இக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை. கட்டுமான அமைப்பின் படி கருவறைப் பகுதி 12 ஆம் நூற்றாண்டினும் பிற பகுதிகள் 16, 17 நூற்றாண்டிலும் கட்டப்பட்டிருக்கலாம். இக்கோயிலின் கிழக்கு பகுதியில் உள்ள மண்டபத்தூண்களில் சிற்பங்கள் உள்ளன. வடபுறத் தூணில் பீமனும், வியாக்கரபாதரும் நின்றகோலத்தில் உள்ளனர். பீமன் கையில் கதை உள்ளது. பீமன் அவனைக் அடிக்கத் தயாராவது போல் கையை உயர்த்தி நிற்கிறார். இச்சிற்பம் சிவாலயம் ஓட்டம் கதை தொடர்பானது. இதே மண்டபத்தில் இராமயண, பாரதக்கதை தொடர்பான சிற்பங்களும் உள்ளன.

## பூஜை

காலை 6.00 மணி திருநடை திறப்பு
காலை 6.30 மணி தீபாராதனை
காலை 10.30 மணி தீபாராதனை
மாலை 5.00 மணி திருநடை திறப்பு
மாலை 7.00 மணி தீபாராதனை
இரவு 7.30 மணி திருநடை சார்த்துதல்.

## விழா:

இக்கோயிலில் மார்கழி, சதய நட்சத்திரத்தில் கொடியேற்றம் ஆரம்பமாகி 10 நாட்கள் விழா நடக்கிறது. திருவாதிரை நட்சத்திரத்தில் ஆறாட்டு விழா. வேட்டை நிகழ்ச்சியில் யானை ஸ்ரீபலி உண்டு.

தொடர்பு தொலை பேசி எண் : 04652 – 227774.
உதவி ஆணையர் அலுவலகம், நாகர்கோவில்.



# 38. அருள்மிகு மகாதேவர் திருக்கோயில்

திற்பரப்பு, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மகாதேவர்/வீரபத்திரர் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | ஏகதளம்/நாகரம் |
| தலவிருட்சம் | – | வில்வம் |

## அமைவிடம்

பன்னிரு சிவாலயங்களில் மூன்றாவது ஆலயம். இரண்டாவது ஆலயமான திக்குறிச்சி ஊரிலிருந்து கிழக்கே அருமனை வழி 14 கி.மீ. தொலைவில் உள்ளது. நாகர்கோவில் –திருவனந்தபுரம் சாலையில் உள்ள மார்த்தாண்டம் நகரிலிருந்து 18 கி.மீ. தொலைவிலும், நாகர்கோவிலில் இருந்து 41 கி.மீ. தொலைவிலும் இருப்பது.

திற்பரப்பு ஒரு சுற்றுலாத்தலம். குமரியில் உள்ள அருவி விழும் இயற்கை எழில் கொஞ்சும் இடம். ஆதலால் தங்கும் வசதியும் உணவு விடுதியும் உண்டு. வாகனங்கள் நிறுத்த வசதி உண்டு. கோயில் அருகே அருவியும் பூங்காவும் உள்ளதால் பக்தர்கள் ஒரு முழு நாளை இங்கே கழிக்கலாம்.

## தலபுராணம்:

கோயில் மூலவரான சிவன் வீரபத்திரர் என அழைக்கப்படுகிறார். வீரபத்திரரும் காளியும் தட்சனை வதை செய்தபிறகு தியானம் செய்வதற்குத் திற்பரப்பு ஊரில் அமர்ந்தனர். இறைவன் ஆற்றைப் பார்க்கவே மேற்கே அமர்ந்திருக்கிறான். மூலவரின் எதிரே நந்தி சற்று ஒதுங்கி இருக்கிறது. திற்பரப்பு என்னும் சொல் ஸ்ரீவிசாலம் என்ற சமஸ்கிருத சொல்லில் இருந்து வந்ததாகச் சொல்கின்றனர். ஸ்ரீ – திரு, விசாலம் – பரப்பு சிறப்பாக அமைந்த பரந்த இடம் என்பது இதன் பொருள். ஸ்ரீ–விசாலபுரம் மனதிற்கு ரம்யமான இடம்.

## கோயில் அமைப்பு:

கோயிலைச் சுற்றி உயரமான கருங்கல் மதிலும், நான்கு புறமும் வாசல்களும் உள்ளது என்றாலும் வடக்கு வாசலையே பக்தர்கள் பயன்படுத்துகின்றனர். கோயில் மேற்கு பார்த்தது. முன்னே கொடிமரம். வடக்குப் பிரகாரத்தில் புதிதாக கட்டப்பட்ட திருமண மண்டபம், தெற்கு பக்கத்தில் பக்தர்கள் உணவருந்தும் ஊட்டுப்புரை. இக்கோயில் பிரதோஷ பிரசாதத்திற்காக திருவிதாங்கூர் அரசர் காத்திருந்த காலம் உண்டு. அப்படியாக பெருமளவு பிரசாதம் தயார் செய்யப்பட்ட சமையலறை (மடப்பள்ளி) இங்கே காணப்படுகிறது. மேற்கு வாசலை அடுத்திருப்பது முன்மண்டபம். இங்கு பலிபீடம் 12 நாக்குகள் கொண்ட வெண்கல வாடாவிளக்கு ஆகியன உள்ளன. இது அணையா விளக்கு. முன் மண்டபத்தை அடுத்து இருப்பது வாத்திய மண்டபம். இப்போது இங்கு ஹோமம் போன்ற சடங்குகள் நடக்கின்றன. இதை அடுத்து பூஜா மண்டபம் உள்ளது. இது ஒட்டுப்பணி. இம்மண்டப அறை 36 கோல் அளவு. இது கோளபாணி. இங்கு கலசபூஜை நடக்கிறது. அதனால் இங்கு பக்தர்கள் ஏறுவது கூடாது என்பது நடைமுறை. ஸ்ரீகோவில், பூஜா மண்டபம் இரண்டையும் சுற்றிய திருச்சுற்று மண்டபம் உள்ளன. இதன் உட்பிரகாரம் பெரியது.

வடக்கு திருச்சுற்று மண்டபத்தில் நந்தி இருக்கிறார். மூலவரின் எதிரே நந்தி இல்லை. வடிவமற்ற ஒரு கல்படிமம் தரை மட்டத்தில் உள்ளது. இதற்குத் தலபுராணம் தொடர்பான கதை

உண்டு. தட்சனை வதை செய்த பிறகு சிவனும் பார்வதியும் மேற்குதிசை நோக்கி அமர்ந்து தியானம் செய்துகொண்டிருந்தனர். அப்போது எதிரே வந்த நந்தியை வடபுறத்தில் இருக்க சொன்னார். திருச்சுற்று மண்டபத்தின் தென்மேற்கில் உள்ள ஒரு அறையில் அருவியின் அடியில் குகைக்குச் செல்லும் வழி உள்ளது.

கருவறை வட்ட வடிவு; செப்புத்தகடு வேயப்பட்டது. கூம்பு வடிவம், உள்பகுதி செவ்வக வடிவம், கூம்பு கூரையில் மூன்று கும்பங்கள் உள்ளன.

## கருவறை மூலவர்:

கருவறைத் தெய்வமான சிவன், வீரபத்திரர், ஜடாதரர் எனப்படுகிறார். லிங்க வடிவினர். மூலவர் மேற்கு பார்த்து இருக்கிறார். இவருக்குத் தீபாராதனை கொடுக்கும்போது சூடத்தட்டை இடதுபுறம் வழிச் சுற்றி பூஜை செய்கின்றனர்.

## பரிவார தெய்வங்கள்:

மேற்கு பிரகாரம் தென்மேற்கில் தர்மசாஸ்தா பூரண புஷ்கலையுடன் சுகாசனத்தில் இருக்கிறார். இதே பிரகாரத்தில் நாகர் சிற்பங்கள், கிருஷ்ணன் கோயில், முருகன் கோயில் இரண்டும் உள்ளன. தெற்கு பிரகாரத்தில் ஆஞ்சநேயர் கோயில் கல்லால் ஆனது. இதன் பொதிகை அமைப்புகளின்படி 14–ஆம் நூற்றாண்டு எனலாம். இதன் கருவறையைச் சுற்றி உட்பிரகாரம் உண்டு. இங்கு இருக்கும் ஆஞ்சநேயர் வடிவம் அற்றவர்.

## கல்வெட்டுக்கள் / வரலாறு:

இக்கோயிலில் இரண்டு கல்வெட்டுக்களும் ஒரு செப் பேடும் கிடைத்துள்ளன. செப்பேடு கி.பி.9–ஆம் நூற்றாண்டினது. ஆய் அரசன் கோக்கருநந்தடக்கன் காலத்தினது. இது ஒரு வரலாற்று நிகழ்ச்சியை விளக்கும் முக்கியமான செப்பேடு. ஒரு கல்வெட்டு, மதுரையைச் சார்ந்த கவிஜடாதரன் இக்கோயிலுக்கு வந்திருக்கிறான் என்பதையும், அவன் பல கவர்கள் கொண்ட விளக்குகள் நிபந்தம் அளித்ததையும் கூறும்.

இக்கோயில் கி.பி.9—ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது. இதனால் 1500 ஆண்டுகளுக்கு முன்பே வழிபாடு உடையது என்று கூறலாம்.

## சிற்பங்கள்:

கோயில் முன்மண்டபத் தூண்களில் பத்து தலை இராவணன், சண்டையிடும் வாலி சுக்கிரீவன் சிற்பங்கள் உள்ளன. வாத்திய மண்டபத்தில் கிருஷ்ணன், ஆஞ்சநேயர் சிற்பங்களும், பூஜா மண்டபத்தில் நவக்கிரக மரச்சிற்பங்களும் உள்ளன.

## பூஜை

காலை 5.00 மணிக்குத் திருநடை திறப்பு
காலை 6.30 மணிக்குத் தீபாராதனை
காலை 10.00 மணிக்குத் உச்சகால பூஜை
மாலை 5.00 மணிக்குத் திருநடை திறப்பு
மாலை 6.00 மணிக்குத் தீபாராதனை
இரவு 8.00 மணிக்கு திருநடை சார்த்துதல்.

## விழா

பங்குனி மாதம் 10 நாள் திருவிழாவும், மகாசிவராத்திரி விழாவும் நடக்கிறது. இவை தவிர மார்கழி திருவாதிரை, பிரதோஷங்கள், ருத்ரபூஜை, ருத்ர கலசபூஜை, ம்ருத்புஞ்ஜய ஹோமம் போன்ற சடங்குகளும் நடக்கின்றன. பங்குனி பூரட்டாதி நட்சத்திரத்தில் 10 நாட்கள் திருவிழாவில் திருவாதிரையில் ஆறாட்டும், முளைப்பாரி சடங்கும் உண்டு.

## நேர்ச்சை:

கன்னிப்பெண்கள் நல்ல கணவன் கிடைக்கவேண்டும் என்பதற்காக இத்தலத்தில் வழிபடுவது வழக்கம். இங்கு தினமும் 50 பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

## சிறப்புச் செய்திகள்:

இக்கோயிலின் சிறப்பு கோயிலை ஒட்டியிருக்கும் அருவி. தமிழகத்தில் உள்ள அருவிகளில் அதிக நாட்கள் நீர்

விழ்ந்து கொண்டிருக்கும் இடம் திற்பரப்பு அருவி. இந்த ஊர் கோதையாற்றின் கரையில் உள்ளது. திருவனந்தபுரத்திலிருந்து 52 கி.மீ. தொலைவு, மார்த்தாண்டத்திலிருந்து ரயிலில் இறங்கி காரில் வரலாம்.

பேச்சிப்பாறை அணையிலிருந்து விழும் இந்த நீர் 13 கி.மீ. தொலைவு வரை வந்து வடக்கே பாய்ந்து மேற்கே வளைந்து சென்று தென்புறம் அருவியாக விழுகிறது. அருவி 50 அடி (15 மீட்டர்) உயரம் உடையது. வருடத்தில் 7 மாதங்கள் நீர் நிரம்பியிருக்கும். இந்த ஆறு கோதையாறு/குழித்துறை ஆறு எனப்படுகிறது.

இக்கோதையாறு 85 மீட்டர் முதல் 90 மீட்டர் அகல முடையது. கோயிலின் மேற்கே ஓடும் ஆற்றின் நடுவே தடுப்பணை உள்ளது. சித்திரை திருநாள் மன்னரால் விவசாயிகளின் நன்மைக்காக 1948–ல் இந்தத் தடுப்பணை கட்டப்பட்டது. பயணிகளின் பொழுதுபோக்கிற்காக படகுசவாரியும் உண்டு.

அருவி விழும் பகுதியில் நாற்கால் மண்டபம், சிறுவர்கள் நீராடுவதற்கு சிறிய நீச்சல் குளம், மீன்காட்சி சாலை பூங்கா ஆகியன உள்ளன. பயணிகள் அமர்ந்து பேசவும் வசதி உண்டு. குளிப்பவர்கள் உடை மாற்ற வசதியும், கழிப்பிட வசதியும் உண்டு. இங்கு பெரிய உணவு விடுதியும் உண்டு. இந்த அருவியும், சுற்றுப்பகுதியும் பழைய இடம் என்பதற்கு கல்வெட்டுச்சான்று உண்டு. 100 ஆண்டுகளுக்கு முன்பே பக்தர்கள் இந்த அருவியில் குளித்துவிட்டு கோயிலுக்குச் சென்றுள்ளனர்.

அருவிபாயும் பகுதியில் ஒரு குகை உள்ளது. 1929–ல் இதை தொல்லியல் துறையினர் கண்டுபிடித்தனர். இக்குகை முகப்புப்பகுதி 2.10 மீட்டர் உயரம், 90 செ.மீ. அகலம் உடையது. முகப்பிலிருந்து 45 மீட்டர் செல்கிறது. உள்ளே இரண்டு சிறிய அறைகள் உள்ளன. ஒன்று பத்ரகாளி கோயில், இங்கு காளி புடைப்பு சிற்பமாக இருக்கிறாள். தாந்திரீக பூஜை நடந்தது குகை முடிவில் 24 மீட்டர் நீளம் 6 மீட்டர் அகலமுடைய விசாலமான கூடம் உண்டு. இந்தக் கூடத்தில் இருந்தால் அருவி பாயும் ஒலி கேட்கும்.

கூடம் சுட்ட செங்கல்களால் கட்டப்பட்டது. கூடத்திலிருந்து மகாதேவர் கோயிலுக்குச் செல்ல அருகே வழி உண்டு. இக்குகை முன்புற வாசல் அடைக்கப்பட்டுவிட்டது. மகாதேவர் கோயிலில் இருந்து குகைக்கு செல்லும் வாசல் உள்ள வழியும் மூடப்பட்டுள்ளது.





**திற்பரப்பு அருவி**

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 261298.



# 39. அருள்மிகு திருநந்தீஸ்வரர் திருக்கோயில்

## திருநந்திக்கரை, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | நந்தீஸ்வரர் |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |
| விமானம் | – | கூம்பு வடிவ செப்புக்கூரை |

## அமைவிடம்

பன்னிரு சிவாலயங்களில் நான்காவது கோயில். மூன்றாவது கோயிலான திற்பரப்பு கோயிலிலிருந்து கிழக்கு தெற்காக குலசேகரம் சந்திப்பு வழி 8 கி.மீ சென்று திருநந்திக்கரை அடையலாம். நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் உள்ள மார்த்தாண்டத்திலிருந்து வடகிழக்கே பேச்சிப்பாறை செல்லும் சாலையில் 15 கி.மீ தொலைவில் இருப்பது. வெயில் அறியாத ஊர். நந்தி ஓடையில் (முன்பு நந்தியாறு) கரையில் மரங்கள் அடர்ந்த சோலையில் நடுவே உள்ளது. பக்தி உருவாக சூழலும் குளிர்ந்த பருவமும் வேண்டும் என்பதை இங்கு செல்பவருக்கு புரியும். திருநந்திக்கரை சிறு கிராமம். ஆதலால் மார்த்தாண்டத்திலிருந்து காரில் வரலாம்.

## தலபுராணம்:

இக்கோயில் நந்தி என்ற சமணத்துறவியின் பெயரால் அறியப்படுவது. இந்த ஊர்த்தலைவர் உளுத்துப் பாறை அடிவார ஏரியின் நடுவில் குடைவரைக்கோயில் சிவலிங்கம் மிதப்பது போல் கனவு கண்டார். அடுத்த நாள் ஏரியின் நடுவில் சுயம்புவாக ஒரு சிவலிங்கம் முளைத்திருப்பதையும் ஊர் மக்கள் கண்டனர். பின் அரசரின் உதவியுடன் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

நந்தி கருவறைக்கு எதிரே சிறு குழியில் உள்ளது. இது தொடர்பாகவும் ஒரு கதை வழங்குகிறது. இக்கோயில் உருவான காலத்தில் எல்லா லட்சணமும் பொருந்திய ரிஷபம் ஒன்று இவ்வூருக்கு வந்தது. அது ஊர் மக்களைப் பயமுறுத்தியது. மக்கள் இறைவனிடம் முறையிட்டனர். சிவன் அந்த நந்தியைத் தன் எதிரே அமர்த்திக்கொண்டார். அது எழுந்து விடாமல் இருக்க குழியில் அமர்த்திக்கொண்டார்.

## கோயில் அமைப்பு:

கோயில் பெரிய கோட்டை மதில், வெளிப்பிரகாரம், பலிபீடம் ஒட்டுப்பணியால் ஆன நீண்ட அரங்கு, நமஸ்கார மண்டபம், உட்பிரகாரம் சுற்றுமண்டபம், கருவறை என அமைந்தது.

## மூலவர்/கருவறை:

கருவறை வட்டவடிவினது. வாசலில் துவாரபாலகர்கள். கருவறையை ஒட்டி இடதுபுறம் விநாயகர் கோயில். சிவன் ஆவுடையில்; லிங்க வடிவம்; கருவறையில் உள்ள 27 கட்டங்கள் நட்சத்திரங்களைக் குறிப்பன. தொங்குகூரையின் கீழ் பூதவரிகள். தாவரச்சாறு ஓவியங்கள் இருந்தன. இவை இப்போது அழிந்து விட்டன. பழைய வரைபட அடையாளம் உள்ளது. இவை 18 ஆம் நூற்றாண்டு ஓவியம்.

கருவறை கூம்பு வடிவிலானது. உச்சியில் கலசம். மேற்கூரை 10 செ.மீ கனமுள்ள தேக்கு மரப்பலகையால் செய்யப்பட்டு கனமாக செப்புத்தகடு வேயப்பட்டது. இதில் 52 கழிக்கோல்கள். இவை ஒரு வருஷத்தின் 52வாரங்களைக் குறிப்பன.

## பரிவார தெய்வங்கள்:

கோயில் கிழக்கு பிரகாரத்தில் சாஸ்தா அடுத்து கிருஷ்ணன்கோயில். நின்ற கோலம். கல்படிமம் கோயில் வெளியே கிழக்கில் அரசமரம் அடியில் நாகர், சிவன், கணபதி ஆகியோர் உள்ளனர். இங்கு ஒரு சிற்பத்தைப் பரசுராமர் என்கின்றனர். தாயைக் கொன்ற பாவம் தீர இங்கே வந்து தவம் செய்தார். இங்குள்ள காற்றும் தண்ணீரும் அவருக்கு ஆறுதல் அளித்தன.

நீண்ட ஒட்டுப்பணி அரங்கு ஈசான மூலையில் திருமலையப்பன் இருக்கிறார். நின்ற கோலம். சங்கு சக்கரம் அபய முத்திரை உண்டு.

மேற்கு சுற்று மண்டபம் சுவரில் உள்ள பெண் தெய்வம் கொட்டாரம் யட்சி. இவள் இரண்டு கைகளிலும் வாள் ஏந்தியவள். தாவரச்சாய ஓவியம்.

## கல்வெட்டுகள் / வரலாறு:

இக்கோயிலிலும் அருகில் உள்ள குடைவரைக் கோயிலிலும் ஆறு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவை தமிழிலும் வட்டெழுத்திலும் அமைந்தவை. இக்கோயில் பழைமையானது என்பதற்கு ஒரு கல்வெட்டு சான்று உண்டு. இதனால் இதன் பழமை 1000 ஆண்டுகளுக்கு முன் செல்கிறது. இக்கோயிலை மாடக்கோயில் என ஒரு கல்வெட்டு கூறும். இது ஆரம்பகால நிலை.

கோயில் முன்மண்டபத்தில் உள்ள கல்தூண்களில் பாவைவிளக்குகள் ஏந்திய பெண்கள், அஞ்சலிஹஸ்த அடியவர், வேணாட்டரசன், குறுவாளுடன் புலியுடன் போர் செய்யும் வீரர், குதிரையில் சென்று பன்றியை வேட்டையாடுபவன், அர்ஜுனன், யோகப்பட்டத்துடன் கூடிய சாஸ்தா, ரிஷபாந்தகர் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

ரிஷப மண்டபம் அல்லது நமஸ்கார மண்டபம் கல் தூண்களில் மேற்கூரையில் மரச்சிற்பங்கள் உள்ளன. அஷ்டதிக் பாலகர், பிரம்மா ஆகியோர் உள்ளனர். கேரளப்பாணி. இந்த மண்டபத்தில் இருந்த வேலைப்பாடுள்ள மரச்சிற்பங்கள் இப்போது திருவனந்தபுரம் அருங்காட்சியகத்தில் உள்ளன.

## பூஜை

காலை 5.30 மணிக்கு திருநடை திறப்பு
காலை 6.00 மணிக்கு பூஜை
காலை 7.00 மணிக்கு பூஜை
காலை 10.00 மணிக்கு பூஜை
காலை 11.00 மணிக்கு திருநடை சார்த்துதல்
மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு பூஜை
மாலை 7.30 மணிக்கு பூஜை
இரவு 8.00 திருநடை சார்த்துதல்

கோயில் திருவிழா மாசி மாதம் சிவராத்திரியில் 10 நாட்கள் நிகழ்கிறது. சிவராத்திரியின் முந்திய நாள் மாலையில் கொடியேற்றப்படும். கொடிமரம் தற்காலிகமாக நடப்படுவது. பத்து நாட்களிலும் விழாவில் ஸ்ரீபலி, ஆறாட்டு, யானை ஊர்வலம் உண்டு.

## சிறப்பு செய்தி:

இக்கோயிலைத் தரிசிப்பவர்கள் இக்கோயிலின் பின்புறம் சிறு மலையை ஒட்டி இருக்கும் குடைவரைக்கோயிலையும் பார்க்கலாம்.

மகாதேவர் கோயிலின் கிழக்கே குடைவரைக்கோயில் உள்ளது. இது மத்திய அரசின் தொல்பொருள் துறை கட்டுப்பாட்டில் இருப்பது. இக்குடைவரை இருக்கும் இடம் உளுத்துப்பாறை எனப்படுகிறது. இக்குடைவரை 5.30 மீ நீளம் 4.50 மீ அகலம் உடையது. முன் திண்ணை. இரண்டு முழுத்தூண்கள் இரண்டு அரைத்தூண்கள் உள்ளன. மண்டபம் தென் வடலாக கிடப்பது. முன் மண்டபம் இடதுபுறம் சிறிய அறையில் சிவலிங்கம் பிரதிஷ்டை உள்ளது. இக்குடைவரையின் சுவர்களில் தாவரச்சாய ஓவியங்கள் இருந்தன. சுமார் 70 ஆண்டுகளுக்கு முன்பு வரை இங்கு கணபதி, விநாயகர், தட்சிணாமூர்த்தி, காளி, நடராஜர் ஓவியங்கள் இருந்ததைப் பதிவு செய்திருந்தனர். குடைவரைப்பாறை வெளிப்புறம் தட்சிணாமூர்த்தி சிற்பங்கள் உள்ளன.

இக்குடைவரைக்கோயில் கி.பி.8 ஆம் நூற்றாண்டினது. ஆய் மன்னர்கள் உருவாக்கியது. ஒவியங்கள் 1000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. உளுத்துப்பாறையின் மேல் ஒரு அயினி மரம் உள்ளது. இதனருகே ஒரு சுனை இருக்கிறது. இச்சுனையில் சிவனின் பாதங்கள் தோன்றின என்று பக்தர்கள் நம்புகின்றனர்.



விசிறி வியாபாரம்



சண்டேஸ்வரர்



வடாவிளக்கு திருநந்திக்கரை

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 40. அருள்மிகு தீம்பிலான்குடி மகாதேவர் திருக்கோயில்

## பொன்மனை, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | தீம்பிலான்குடி மகாதேவர் |
| தலவிருட்சம் | – | வில்வமரம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

### அமைவிடம்

சிவாலய ஓட்டக்கோயில்களில் ஐந்தாம் கோயில். நான்காம் ஆலயமான திருநந்திக்கரையிலிருந்து கிழக்கே ஏழு கி.மீ தொலைவில் இருக்கிறது. நாகர்கோவில் – திருவனந்தபுரம் சாலையில் மார்த்தாண்டம் ஊரிலிருந்து 15 கி.மீ தொலைவில் உள்ளது. குலசேகரம் ஊரிலிருந்து சுருளோடு செல்லும் பாதையில் 5 கி.மீ தொலைவில் தாமிரபரணி ஆற்றின் இடதுபுறம் அமைந்தது பொன்மனை. கோயிலின் எதிரே மக்கள் குளிப்பதற்குரிய குளமும் வடக்கே குளமும் உள்ளன.

### தலபுராணம்:

இக்கோயில் தொடர்பாக வாய்மொழி கதை உள்ளது. இது காடாக இருந்த சமயம் காணிக்காரர் என்னும் சமூகத்தைச் சார்ந்த தீம்பிலான் என்பவர் மரம் வெட்டிக்கொண்டிருந்த போது

சுயம்புவாக முளைத்திருந்த சிவலிங்கத்தைக் கண்டான். இது ஊர் மக்களுக்குத் தெரிந்து அங்கே ஒரு கோவில் கட்டினர். அது தீம்பிலான்குடி என்னும் பெயரால் வழங்கப்பட்டது.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் 1 ஏக்கர் பரப்புடையது. கிழக்கு பார்த்து அமைந்தது. கோயிலைச்சுற்றி பெரிய மதில், வெளிப்பிரகாரத்தில் மிகப்பெரிய கல் விளக்கு, செம்புத்தகடு வேய்ந்த கொடிமரம் உள்ளது. கோயில் சமதளமான அமைப்புடையது. நடுவில் கருவறை. எதிரே நந்தி மண்டபம். சுற்றிலும் சுற்றாலை மண்டபம். கிழக்கு வெளிப்பிரகாரத்தை ஒட்டிய பெரிய ஒட்டுக்கூடம் என அமைந்தது.

## கருவறை:

கோயில் கருவறை வட்ட வடிவில் அமைந்தது. கூம்பு வடிவக் கூரை. கேரளப்பாணி செம்புத்தகடு வேயப்பட்டது. உள் பகுதி நீள் சதுர வடிவு. முன் அர்த்தமண்டபம் உண்டு. கருவறை முன் துவாரபாலகர்கள் உள்ளனர். கருவறை லிங்கத்தின் மேல் வெட்டுப்பட்ட அடையாளம் உள்ளது. இது தலபுராணக் கதையுடன் தொடர்புடையது. லிங்கத்துக்கு ஆவுடையில்லை. அஷ்டபந்தனம் செய்யப்படாத சுயம்புலிங்கம்.

## பரிவார தெய்வங்கள்:

கிழக்கு பிரகாரம் தென்கிழக்கில் நாகர் சிற்பங்கள் உள்ளன. வெளிப்பிரகார வடமேற்கு மூலையில் யட்சி பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளார். இது பூட வடிவம். கருவறை தெற்கே விநாயகர். அமர்ந்த வடிவம். தெற்கு உள்பிரகாரம் நடுவில் சாஸ்தா இருக்கிறார்.

## சிற்பங்கள்:

கிழக்கு உள்பிரகாரத்தில் சுற்றுமண்டபத்தூண்களில் பாவைவிளக்கேந்திய பெண் சிற்பங்களும், ஆண் சிற்பங்களும் உள்ளன. நந்தி மண்டப மேற்கூரையில் அழகிய வேலைப்பாடுடைய மரச்சிற்பங்கள் உள்ளன. முழுவதும் இராமாயண சிற்பங்கள். வட

புறம் ராமன் வால்மீகி மீது அம்பு எய்யும் காட்சி, லட்சுமணன் இராவணன், சீதையைத் தேரில் அமர்ந்து செல்லும் காட்சி. இராவணன் சீதையைத் தேரில் கவர்ந்து செல்லும் காட்சி என இப்படியான 35க்கு மேற்பட்ட ராமாயணச் சிற்பங்கள் உள்ளன. இவை பெரும்பாலும் கம்பனின் கதை சார்புடையபவை. இச்சிற்பங்கள் முழுமையாக உள்ளன. பழுதடையவில்லை. இந்த சிற்பங்கள் இக்கோயிலுக்குப் பெருமை தருவன. பன்னிரு சிவாலயங்களில் இத்தகு மரச்சிற்பங்கள் இக்கோயிலில் மட்டுமே உள்ளன.

இக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை. கட்டுமானம் பற்றி அறிய சான்றுகள் இல்லை. கருவறையின் அமைப்பு 15 ஆம் நூற்றாண்டினதாக இருக்கலாம். முன்மண்டபம் பிற்காலத்தது.

## பூஜை

காலை 6.00 மணிக்கு திருநடை திறப்பு
காலை 6.30 மணிக்கு உஷபூஜை
காலை 10.00 மணிக்கு உச்சபூஜை
காலை 10.30 மணிக்கு நடை அடைப்பு
மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு
மாலை 6.00 மணிக்கு பூஜை
மாலை 7.30 மணிக்கு அர்த்தசாம பூஜை

## விழா:

மகா சிவராத்திரி விழா இங்கு சிறப்பு. பங்குனி திருவாதிரை நாளில் திருவிழா ஆரம்பம். 10 நாள் விழா. விழாவில் கலசபூஜை முக்கியம். முகபடாம் போர்த்திய யானையின் மேல் உற்சவமூர்த்தி பிரகாரத்தைச் சுற்றும் நிகழ்வு பத்து நாட்களிலும் நடக்கும். ஏழாம் திருவிழா யானை ஊரின் எல்லா பகுதிகளிலும் செல்லும். சிவராத்திரி விழா தினை அரிசி கஞ்சி, நல்லமிளகு தண்ணீர், சக்கா எரிசேரி, ஆகியன இலவசமாய் வழங்கப்படும்.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 41. அருள்மிகு கிராதமூர்த்தி திருக்கோயில்

## திருப்பன்னிப்பாகம், கல்குளம் வட்டம்.

இறைவன் – கிராதமூர்த்தி
தலவிருட்சம் – வில்வமரம்

### அமைவிடம்

பன்னிரு சிவலாயங்களில் ஆறாவது கோயில். ஐந்தாம் ஆலயமான பொன்மனையிலிருந்து சித்திரங்கோடு குமாரபுரம் முட்டைக்காடு வழி 12 கி.மீ தொலைவில் இருப்பது. நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் தக்கலையிலிருந்து சுருளக்கோடு சாலை வழி 6 கி.மீ சென்று முட்டைக்காடு சந்திப்பை அடைந்து அங்கிருந்து 3 கி.மீ தொலைவில் இக்கோயிலை அடையலாம். முட்டைக்காடு சந்திப்பிலிருந்து ஆட்டோவில்தான் செல்ல முடியும். கோயில்வாசல் வழி வாகனங்கள் செல்லும். இக்கோயில் இருக்குமிடம் ஊர்ப்பகுதி அல்ல.

### தலபுராணம்

இக்கோயில் தொடர்பான தலபுராணக்கதை மகாபாரதத்துடன் தொடர்புடையது. பாசுபதாஸ்திரம் வேண்டித் தவம் செய்த

அர்ஜுனன் கிராதனாக (வேடன்) இருந்த சிவனுடன் மோதி தோற்ற நிகழ்வுடன் தொடர்புடையது.

## கோயில் அமைப்பு:

முட்டைக்காடு சந்திப்பிலேயே இக்கோயிலின் தோரணவாயில் உள்ளது. இக்கோயில் 2 ஏக்கர் பரப்புடையது. உயரமான பெரிய மதில் வெளிப்பிரகாரம், திறந்த வெளி உட் பிரகாரம். கருவறையைச்சுற்றிய உட்பிரகாரம், முன்மண்டபம், நந்தி மண்டபம், திருச்சுற்று மண்டபம், விமானம் என்னும் அமைப்புடையது கோயிலில் சென்று நீராடும் குளம் உண்டு.

## கருவறை:

மூலவரான மகாதேவர் கிராதமூர்த்தி இருக்கும் கருவறை மூன்று சிறு மண்டபங்களைக் கொண்டது. கல்லால் ஆனது கருவறை விமானம் மூன்று அடுக்குகள் உடையது. விமானத்தில் தட்சிணாமூர்த்தி, வீணா தட்சிணாமூர்த்தி, விஷ்ணு நரசிம்மர், யோக நரசிம்மர், பிரம்மா ஆகியோர் உள்ளனர். மூலவர் லிங்க வடிவினர். ஆவுடையில் இருக்கிறார்.

## பரிவார தெய்வங்கள்:

வெளிப்பிரகாரத்தில் பலிபீடம் உள்ளது. தெற்கு பிரகாரத்தில் சிறிய விநாபகர் கோயில். இதனருகே 2 சமாதிகள். லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டவை. இரண்டும் அண்ணன், தம்பி ஆகிய இரு யோகிகளுக்குரியது. இச்சமாதிக்களுக்கருகே கிளிமரம் என்ற மரம் உள்ளது. இது தலவிருட்சம் ஆகும்.

வடக்கு வெளிப்பிரகாரக் கோயில் கால பைரவர் இருக்கிறார். கம்பீரமான தோற்றம். குமரி மாவட்டக் கோயில்களில் உயரமான காலபைரவர் இவர். கருவறையை ஒட்டி கிழக்கில் சாஸ்தா இருக்கிறார். அமர்ந்த கோலம். வடக்கு உள்பிரகார நடுப்பகுதியில் நிர்மால்ய தேவர். லிங்க வடிவம். கேரள மாந்திரீக ஆகம முறைப்படி நிர்மால்ய தேவருக்கு வழிபாடு கிடையாது.

## கல்வெட்டுகள் / வரலாறு:

இக்கோயிலில் நான்கு கல்வெட்டுகள் உள்ளன. மிகப்பழையது. 9 ஆம் நூற்றாண்டினது. நிபந்தக்கல்வெட்டு. இதன் வழி இக்கோயில் மிகப்பழையது என கருதலாம். நந்தி மண்டபத்தில் உள்ள 1559 ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக் கோயிலில் மூன்று நேரமும் புல்லாங்குழல் வாசிக்க கொடுத்த நிபந்தம் பற்றி கூறும். குமரி மாவட்டக் கோயில்களில் பூஜையில் போது புல்லாங்குழல் இசைத்த ஒரே கோயில் இது ஒன்று தான்.

## பூஜை

காலை 6.00 மணிக்கு திருநடை திறப்பு

காலை 6.30 மணிக்கு பூஜை

காலை 9.00 மணிக்கு பூஜை

மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு

மாலை 7.30 மணிக்கு பூஜை

## விழா

மகா சிவராத்திரி விழா ஒன்று தான் இங்கே நடக்கும் சிறப்பு விழா. பிற விழாக்கள் இல்லை.



தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 42. அருள்மிகு நீலகண்டசுவாமி திருக்கோயில்

### பத்மநாபபுரம், கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | நயினார், நீலகண்ட சிவன் |
| இறைவி | – | ஆனந்தவல்லி |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

பன்னிரு சிவாலயங்களில் ஏழாவது கோயில் நீலகண்ட சுவாமி கோயில். ஆறாவது கோயிலான திருப்பன்னிப்பாகத்திலிருந்து 7 கி.மீ தொலைவில் இருப்பது. கல்குளம் என அழைக்கப்படும் பத்மநாபபுரம் ஊரில் இருப்பது. இந்த ஊர் நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் தக்கலையிலிருந்து இடதுபுறம் 3 கி.மீ தொலைவில் இருப்பது. நாகர்கோவிலிலிருந்து 16 கி.மீ தொலைவு.

இவ்வூரின் பழைய பெயர் கல்குளம். இது 1790 ஆம் ஆண்டு வரை திருவிதாங்கூரின் தலைநகராக இருந்தது. இவ்வூரைச்சுற்றி கல்கோட்டையும், பெரிய அரண்மனையும் உண்டு. அதனால் நீலகண்டசுவாமி கோயிலுக்கு வருபவர் இந்த அரண்மனையையும்

இதன் அருகே உள்ள அருங்காட்சியகத்தையும் பார்க்கலாம். இந்த ஊரில் இராமசாமி கோயில் உள்ளது. இதையும் தரிசிக்கலாம்.

இவ்வூரில் தங்கும் வசதியில்லை. இது சுற்றுலாத் தலமானதால் உணவு விடுதிகளும் சிறு கடைகளும் உள்ளன. தனிக் கடைவீதி உண்டு. நாகர்கோவிலிலிருந்து பத்மநாபபுரத்திற்கு தனியே பேருந்து உண்டு. கோட்டை வாசலில் நிறுத்தம் உண்டு. அங்கிருந்து கோயிலுக்கு 1 கி.மீ நடந்தே போகலாம். காலையில் கோயிலைத் தரிசித்து விட்டு அரண்மனையைப் பார்க்கலாம். அரண்மனையைப் பார்த்து விட்டு கோட்டை வாசலிலிருந்து பேருந்தில் ஏறி நாகர்கோவில் செல்லலாம். காரில் வருபவர்கள் நேராக நீலகண்டசுவாமி கோயில் வடக்கு வாசலுக்கு சென்று தரிசித்து விட்டு அரண்மனைக்கு வரலாம்.

## தலபுராணம்

இக்கோயிலின் மேற்கே தோட்டத்தில் உள்ள சிவன் ஆதிசிவன் எனப்படுகிறார். இந்த லிங்கம் உயரம் 160 செ.மீ இந்த சிவன் சுயம்புவாக வளர்ந்தவர் என்பது ஐதீகம். வேணாட்டரசர்கள் இங்கே இருந்த போது தறிகெட்டு ஓடிய குதிரை ஒன்று இந்த கோயில் இருக்கும் இடத்திற்கு வந்து அடைபட்டு நின்றதாம். அரசன் குதிரை நின்ற இடத்தில் சுயம்புவான லிங்கத்தைக் கண்டான். அந்த இடத்தில் ஒரு கோயிலைக் கட்டினான் என்பது ஒரு கதை.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் கிழக்கு நோக்கியது. கோயிலின் எதிரே தெப்பமண்டத்துடன் கூடிய தெப்பக்குளம். சிவன் சன்னதி எதிரே மூன்றடுக்கு கோபுரம். பெரும்பாலும் பக்தர்கள் கோயில் வடக்கு வாசல் வழியே வருகின்றனர். கிழக்கு வாசல் அதிக பயன்பாடில்லாததால் பழைமை கவிழ்ந்துள்ளது.

இக்கோயில் சதுர வடிவினது. 4 மீட்டர் உயரமுடைய கோட்டை மதில்சுவர் உண்டு. இந்த வளாகத்தில் சிவனுக்கும் அம்மனுக்கும் தனிக்கோயில்கள் உள்ளள. இரு கோயில்களையும் இணைக்கும்

மண்டபம் உண்டு. பன்னிரு சிவாலயங்களில் அம்மனுக்குத் தனிக்கோயில் இருப்பது இங்கு மட்டும்தான்.

கோயிலின் வெளிப்பிரகாரம், உட்பிரகாரம், முக மண்டபம், அர்த்த மண்டபம், கருவறை என்னும் அமைப்புடையது. கிழக்கு பிரகாரம் சித்திரசபை என்றும் அழைக்கப்படுகிறது. பிரமாண்டமான தோற்றமுடையது. 25 தூண்கள் கொண்ட இந்த மண்டபத்தில் தென்புறம் சிவன் கோயில் வாசலும், வடபுறம் அம்மன் கோயில் வாசலும் உள்ளன. இரு சன்னதிகளிலும் கொடிமரங்களும் பலிபீடங்களும் உள்ளன. இதே மண்டபத்தில் திருக்கல்யாணம் நடக்கும் சிறுமண்டபமும் உள்ளது.

வெளிப்பிரகாரத்தில் திருச்சுற்று மண்டபம் உண்டு. இது திறந்த வெளிப்பிரகாரம். உட்பிரகாரத்திலும் தரைமட்டத்திலிருந்து உயரமான திண்ணை உண்டு. இது கல்லால் ஆன மேற்கூரை உடையது. வெளிச்சமும் காற்றும் வரும்படியான வசதியுடையது. சிவன் இருக்கும் கருவறை தேவகோஷ்டம் அதிஷ்டானம் அமைப்பின் படி இது பத்தாம் நூற்றாண்டினது எனக் கூறமுடியும்.

அம்மன் கோயில் கருவறை சிவன் கோயிலுக்கு வடக்கே உள்ளது. இக்கோயிலின் முன்மண்டபம் உண்டு. அம்மன் கோயில், கருவறை பிரகாரம் சுற்று மண்டபம் என அமைந்தது. சிவன் கோயிலைப் போன்ற அமைப்புடையது. உட்பிரகாரத்தைச் சுற்றி திண்ணை உண்டு. வடக்கு பிரகாரம் கோடியில் பள்ளியறை உள்ளது. அம்மன் கோயிலில் நந்தி மண்டபம் உண்டு.

கோயில் கட்டுமானம் பற்றிய ஆதாரபூர்வமான ஆவணங்கள் இல்லை. கிழக்கு பிரகாரம் கி.பி 17–ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம். கோபுரமும் இதே காலத்தது. இந்த மண்டபத்தை மதுரை நாயக்கப் பேரரசரான திருமலை நாயக்கர் கட்டினார் என்பது மரபுவழிச் செய்தி. இம்மண்டபத்தின் மேற்கே அம்மன் கோயில் வாசலின் எதிரே உள்ள தூண்களில் திருமலை நாயக்கரும் (1623–1659) அவரது தம்பியும் சிற்பமாய் உள்ளனர். இதனால் இம்மண்டபத்தின் காலத்தை கணிக்க முடிகிறது.

## மூலவர்:

கோயில் மூலவர் நீலகண்டர். இவர் லிங்க வடிவானவர். ஆவுடையில் இருக்கிறார். கல் படிமம்; இறைவி ஆனந்தவல்லி, நின்ற கோலம்; இரண்டு கைகள். கல் படிமம்.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலில் கணபதி, சாஸ்தா, பூதத்தான், மாடன், தம்புரான், ஆதிமூல சிவன், ஆகியோர் பரிவார தெய்வங்களாய் உள்ளனர். கிழக்கு பிரகாரம் வடக்கே சிறு கரு வறையில் நடராஜரும் சிவகாமியும் உள்ளனர். இவை செப்புப் படிமங்கள்.

## தேர்:

இக்கோயிலுக்கென்று சுவாமித்தேர், பிள்ளையார் தேர் என இரண்டு தேர்கள் உள்ளன. கோயில் தெப்பக்குளமும், தெப்ப மண்டபமும் நாயக்கர் கட்டுமானப்பணி; பெரும்பாலும் இவை கி.பி 17 ஆம் நூற்றாண்டு எனலாம்.

## சிற்பங்கள்:

இக்கோயிலின் கிழக்கு பிரகாரத்தைச் சித்திரசபை எனக் கல்வெட்டு குறிப்பிடும். உண்மையில் இது சிற்பக்கூடமே. இங்கே கலை நுட்பமுடைய சிற்பங்கள் உள்ளன. இம்மண்டபம் வடக்குப்பகுதி தூண்களில் கர்ணன், கங்காளநாதர், வேணு கோபாலன், அர்ஜுனன் தபஸ் சிற்பங்கள் உள்ளன. இவை ஆளுயரக் கருங்கல் சிற்பங்கள். கர்ணனின் இரண்டு கைகளில் சர்பமும் வில்லும் உள்ளன. கங்காளநாதர் அருகே சட்டி ஏந்திய குள்ளப்பூதம் உள்ளது. கங்காளரின் கழுத்தில் கங்காளம் அதில் பிணமும் தொங்குகின்றன. கங்காளரின் வலது கை மானுக்கு உணவு ஊட்டுவது போல் காட்டப்பட்டுள்ளது. மான் துள்ளி நிற்கிறது.

வேணுகோபாலன் 4 கைகள் உடையவர். இரு முன் கைகள் புல்லாங்குழலைப் பிடித்துள்ளன. இந்த இசைக்கருவி

வேணுகோபாலனின் உதட்டின் கீழ் பொருந்திலிருக்கிறது. இவரை அடுத்து அர்ஜுனன், தாடியுடன் காட்சியளிக்கும் சிவன் வில் அம்புடன் இருக்கிறார். திருமலை நாயக்கர் சிற்பத்தின் அருகே உள்ள விளக்கேந்திய பாவை பலவகை ஆபரணங்களை அணிந்திருக்கிறாள். இவள் தலைமுடியைப் பின்னிப் போட்டிருப்பது நுட்பமாக காட்டப்பட்டுள்ளது.

இம்மண்டபம் கிழக்கு பக்கத்தூணில் தலையிலும் கையிலும் பலாப்பழத்தைச் சுமந்து கொண்டு பெண்ணொருத்தி நிற்கும் காட்சியும் வேறு சிற்பக்காட்சிகளும் உள்ளன. அம்மன் கோவிலின் முன்பகுதி மண்டபத்தில் ஒப்பனைப்பெண், வில்லுடன் ராமர், இளவரசியைக் கவர்ந்து செல்லும் குறவர் என பல சிற்பங்கள். இங்குள்ள முன்மண்டபத்தூணில் மானை சுமந்து செல்லும் வேடனின் சிற்பம், பாம்பு படுக்கையில் சிவன் என சில சிற்பங்கள் உள்ளன.

## கல்வெட்டுகள் / வரலாறு:

பத்மநாபபுரம் கோயிலிலும் ஊரிலும் 15 கல்வெட்டுகள் உள்ளன. இவை தமிழ், வட்டெழுத்து வடிவில் அமைந்தவை. இக்கோயிலில் 5 கல்வெட்டுகள் அடையாளம் காணப்பட்டுள்ளன. இவற்றின் வழி கோயில் கட்டுமானத்தை ஓரளவு கணிக்க முடிகிறது.

வீரகேரள வர்மன் என்னும் வேணாட்டு மன்னனின் கி.பி.1237 ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயிலில் இரணிய சிங்க நல்லூரில் நிலம் கொடுத்ததும், கோயிலில் புத்தரிசி நிகழ்சில் பிராமணருக்கு உணவு வழங்க ஏற்பாடு செய்ததையும் கூறும். இக்கோயில் கலா மண்டபத்தில் 1577 ஆம் ஆண்டு கல் வெட்டுள்ளது. இது இக்கோயிலில் 1577 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 9 ஆம் தேதி புதன்கிழமை உத்திர நட்சத்திரம் அமரபட்சத்து திரயோதிசியில் கோயிலில் கும்பாபிஷேகம் நடந்ததைக் கூறும். இதே கல்வெட்டில் பிரகாரத்தில் கல்தளம் பதித்து கிழக்கு நடை வைத்ததும் ஆகிய மராமத்து பணிகள் குறிக்கப்படுகின்றன.

1579 ஆம் ஆண்டு கல்வெட்டு இரணியவர்மன் என்ற வேணாட்டரசனின் நேரடிப்பார்வையில் கலச மண்டபம் பணி நடந்ததைக் கூறும். மடப்பள்ளி கல்வெட்டு 1600ல் இங்கு பணி நடந்ததைக் கூறும்.

பத்மநாபபுரம் ஊர் அருங்காட்சியகத்தில் உள்ள சில கல்வெட்டுகளில் இக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிபந்தம் கட்டுமானம் பற்றிய குறிப்பு உள்ளது. இதன்படி கருவறைப்பகுதி 12 ஆம் நூற்றாண்டுக்கு முன்பும், சிவன், அம்மன் கோயில் முன் மண்டபங்கள், கிழக்கு பிரகாரம் ஆகியன 16 ஆம் நூற்றாண்டிலும், வேறு சிலபகுதிகள் 17 ஆம் நூற்றாண்டிலும் கட்டப்பட்டது எனத்தெரிகிறது.

## பூஜை

காலை 5.30 மணிக்கு நிர்மால்யம்

காலை 6.00 மணிக்கு உஷபூஜை

காலை 10.00 மணிக்கு அபிஷேகம்

காலை 11.00 மணிக்கு உச்சகாலபூஜை

மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு

மாலை 6.30 மணிக்கு சாயராட்சை

மாலை 7.30 மணிக்கு அர்ச்சாமபூஜை

இக்கோயிலில் பங்குனி உத்திரம் நட்சத்திரத்தில் ஆறாட்டு வரும்படி கொடியேற்றி 10 நாட்கள் திருவிழா நடக்கிறது. 9 ஆம் நாள் தேரோட்டம். புரட்டாசிமாத தசமியில் தெப்பவிழா என்பது இக்கோயிலின் சிறப்பு திருக்கல்யாண விழா உண்டு.

## பத்மநாபபுரம் அரண்மனை:

கல்குளம் நீலகண்டசுவாமி கோயிலைத் தரிசித்து விட்டு பத்மநாபபுரம் அரண்மனைக்குச் செல்லலாம். நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் தக்கலையிலிருந்து 1 கி.மீ தொலைவில் இருப்பது. கல்குளம் என்ற இந்த ஊரின் பெயர் பத்மநாபபுரம். இது திருவனந்தபுரம் நகரில் குடிகொண்ட சுவாமியின் பெயர்.

மார்த்தாண்டவர்மா என்ற அரசர் காலத்தில் (1729–1756) பத்மநாபபுரம் என்ற பெயர் கொடுக்கப்பட்டது (1744) இந்த நகரம் 1780 வரை திருவிதாங்கூரின் தலைநகராக இருந்தது. அதற்கு முன் ஆய் மன்னர்கள், வேணாட்டரசர்கள் காலத்திலும் சிறப்புடன் இருந்தது.

இவ்வூரைச் சுற்றி 4 கி.மீ நீளமுள்ள கல் கோட்டை உண்டு. கோட்டை மதில் வெளிப்புறம் 20 அடி உயரம் உடையது. கோட்டை வாயிலில் யானை அம்பாரியுடன் செல்லும் அளவுக்கு பெரியது. இந்தக் கோட்டையின் உட்புறம் அரண்மனை, குளங்கள், அருங்காட்சியகம், சிற்பக்கூடம் ஆகியன உள்ளன.

கோட்டைக்குள் 4 அடுக்கு அரண்மனை உள்ளது. 6.1/2 ஏக்கர் பரப்புடையது. அரண்மனைக் கட்டிடம் மட்டும் 3 ஏக்கர் பரப்பு. 3.1/2 ஏக்கர் காட்டுப்பகுதி. இங்கு போர்க்கருவிகள் இருந்தன. படைவீரர்களின் கூடங்களும் இருந்தன. அரண்மனையின் முன் பகுதி பூமுகம் எனப்படும். அரண்மனை முன்பு அன்னதான அறை. 2000 பேர் உண்பதற்குரிய பெரிய கூடம் இது. இங்கு மோர் வைக்கப்பட்டிருந்த கல் தொட்டிகள், ஊறுகாய் வைக்கப்பட்டிருந்த ஆளுயரப் பரணிகளை இப்போதும் பார்க்கலாம்.

அரண்மனை நாலுகட்டுப் பகுதியில் சுரங்க வாசல் உண்டு. இது சாரோடு அரண்மனைக்குச் செல்லுகிறது. தாய் அரண்மனையில் அரசன், அரசி நீராட இரண்டு குளங்கள் உள்ளன. அரண்மனை உட்புறம் உள்ள கோயிலில் சரஸ்வதி விக்கிரகம் உள்ளது. இப்போது வழிபாடு இல்லை. கோயிலின் முன்புறம் கல் மண்டபத்தால் ஆன நடன அரங்கு (நவராத்திரி மண்டபம்). இதன் பின்புறம் கருவூல அறை, நாடக அரங்கு ஆகியன உள்ளன.

அரண்மனை முதலடுக்கில் அரசசபை உள்ளது. இது தர்பார் மண்டபம் எனப்படும். இப்போதும் பழைய அழகு கெடாமல் இருக்கிறது. அடுத்து அந்தப்புறம், ஒப்பனை அறை உள்ளன. 224 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெல்ஜியம் கண்ணாடி இங்கே உள்ளது.

மன்னரின் படுக்கையறையில் 64 வகை மூலிகை மரங்களால் ஆன கட்டில் உள்ளது. மக்கள் குறைகேட்கும் அம்பாரி

மாளிகை, விருந்தினர் மாளிகை (இந்திர விலாசம்) ஆகியன உள்ளன.

அரண்மனையை அடுத்து அருங்காட்சியகம் உள்ளது. 1994ல் திறக்கப்பட்டது. இங்கு அருமையான சிற்பங்கள், 18 ஆம் நூற்றாண்டு துப்பாக்கி, இரும்பு ஆயுதங்கள், விளக்குகள் எனக் கலைப்பொருட்கள் உள்ளன.

இந்த அரண்மனையில் தாளோவியங்களும் சுவரோவியங்களும் உள்ளன. இவை பச்சிலைச் சாற்றால் வரையப்பட்டவை.

பத்மநாபபுரம் அரண்மனையை அடுத்தது மருந்துக் கோட்டை, மையக்கோட்டை, டிலனாய்க் கோட்டை ஆகியன உள்ளன. இவை வரலாற்றுச் சிறப்புடையவை.



பத்மநாபபுரம் அரண்மனை

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250706.



# 43. அருள்மிகு காலகாலர் திருக்கோயில்

## மேலாங்கோடு, கல்குளம் வட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | – | காலகாலர் (சிவன்) |
| தலவிருட்சம் | – | வில்வம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

சிவாலய ஓட்டக்கோயில்களில் எட்டாவது கோயில். ஏழாவது கோயிலான பத்மநாபபுரம் கோயிலிலிருந்து 2 கி.மீ தொலைவில் இருப்பது. நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் இருக்கும் குமாரகோயில் ஊருக்குச் செல்லும் பாதை வழி 2 கி.மீ தொலைவில் மேலாங்கோடு ஊர் உள்ளது. இங்கு குடியிருப்புகள் இல்லை. அக்கா, தங்கை என இரண்டு இசக்கிகளின் கோயில்கள் இங்கே உள்ளன. அக்கா கோயிலின் அருகே இந்தச் சிவன் கோயில் இருக்கிறது. இக்கோயில் வேளிமலை அடிவாரத்தில் பச்சைப் பசேலென்ற வயல்கள், நீர் நிறைந்த சிறு குளங்கள், தென்னை மரங்கள் என இயற்கை எழிலுடன் கூடிய இடத்தில் இருக்கிறது.

மேலாங்கோடு என்னும் பெயர் இரண்டு இசக்கிகளுடன் தொடர்புடையது. இசக்கி கோயிலின் அடையாளம் கேட்டு சிவன் கோயிலுக்குச் செல்லலாம்.

இக்கோயிலுக்கு நாகர்கோவிலிருந்து பேருந்தில் சென்று குமாரகோயில் ஜங்ஷனில் இறங்கி ஆட்டோவில் செல்லலாம். கோயில் முகப்பு வரை வாகனங்கள் செல்லும். இக்கோயிலுக்கு மேற்கு திசையில் மட்டுமே சாலை வசதி உள்ளது. கிழக்கில் குளம் வடக்கில் தனியார் தோட்டங்கள் தெற்கில் இசக்கி கோவில் இருப்பதால் மேற்கு வாசல் வழி மட்டுமே செல்ல முடியும்.

## தலபுராணம்:

இக்கோயில் சிவன் மார்க்கண்டேயன் கதையுடன் இணைத்துப் பேசப்படுகிறார். மிருகண்ட முனிவருக்குக் குழந்தை இல்லை. சிவனிடம் தவமிருந்தார். சிவன் 16 வயது மட்டுமே வாழும் அறிவுள்ள புத்தியுள்ள ஒரு ஆண் வேண்டுமா அல்லது அறிவில்லாத பல குழந்தைகள் வேண்டுமா எனக் கேட்டான். மிருகண்டர் ஒரு குழந்தை போதுமென்றார். குழந்தை பிறந்தது. மார்க்கண்டேயனுக்கு 16 வயது ஆனது. எமன் அவனை நெருங்கிய போது சிவன் கோயிலினுடன் நுழைந்து லிங்கத்தைப் பிடித்தான். சிவன் சூலத்தால் எமனைக் குத்தினான். மார்க்கண்டேயன் பிழைத்தான். எமன் சிறு பாசக்கயிற்றை வீசினான். லிங்கம் சரிந்தது. இதனால் இந்த சிவன் காலனின் காலன் எனப்பட்டான்.

## கோயில் அமைப்பு:

கோயில் மேற்கு திசையில் தோரணவாயில் உண்டு. சிறு புதிய கட்டுமானம். இவ்வாசல் வழி மேற்கு பிரகாரத்தில் நுழைந்தால் கண்ணில் படுவது செழிப்பான மரங்கள் நிறைந்த சிறிய காவு. மேற்கு பிரகாரம் வழிச் சென்று கிழக்கு வாசலுக்குச் செல்ல வேண்டும். வெளிப்பிரகாரம் மேற்கூரையில்லாதது.

கிழக்கு வெளிப்பிரகார வாசலில் பலிபீடம் உள்ளது. இதையடுத்து சிறிய முன்மண்டபம். கல்லால் ஆனது. ஸ்ரீகோயில் திறந்த வெளிகள் பிரகாரங்களையும் சுற்றுமண்டபத்தையும் கொண்டது. உட்பிரகாரத்தின் தென்கிழக்கில் மடப்பள்ளி, ஸ்ரீ கோயில் நந்திமண்டபம், அர்த்தமண்டபம், கருவறை என்னும் மூன்று பகுப்புகளைக் கொண்டது. கருவறை மேல் விமானம். பிற்காலம்; சுதை, உட்கோயில் கட்டுமானப்படி கிபி 15–16 ஆம் நூற்றாண்டினது எனலாம். சுற்றுமண்டபம் 18 ஆம் நூற்றாண்டினது.

## கருவறை மூலவர்:

கருவறை மூலவர் காலகாலர் எனப்படுகிறார். ஆவுடையில் இருக்கிறார். லிங்க வடிவம் 60 செ.மீ உயரம் லிங்கத்தின் உச்சிப் பகுதி சற்றுக் குவிந்த வடிவம்.

## பரிவார தெய்வங்கள்:

உட்பிரகாரம் தென்மேற்கில் விநாயகர் இருக்கிறார். மேலும் நாகர், பூதத்தான் உருவங்கள் வெளிப்பிரகாரத்தில் உள்ளன.

## பூஜை

காலை 6.00 மணிக்கு திருநடை திறப்பு
காலை 6.50 மணிக்கு நிர்மால்ய பூஜை
காலை 9.00 மணிக்கு உச்சிகால பூஜை
மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு சாயராட்சை
மாலை 7.00 மணிக்கு நடை அடைப்பு

## விழா:

இக்கோயிலுக்குரிய ஒரே விழா மகாசிவராத்திரி மட்டுமே. இங்கு நேர்ச்சைக்காக வெடி போடுவதாக வேண்டிக்கொள்ளுகின்றனர்.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250706.



# 44. அருள்மிகு சடையப்ப மகாதேவர் திருக்கோயில்

## திருவிடைக்கோடு, கல்குளம் வட்டம்.

இறைவன் – சடையப்பர்

தலவிருட்சம் – வில்வமரம்

ஆகமம் – தாந்திரீகம்

## அமைவிடம்

திருவிடைக்கோடு சடையப்பர் கோயில் பன்னிரு சிவாலயங்களில் ஒன்பதாக அமைவது. எட்டாவது ஆலயமான மேலாங்கோட்டில் இருந்து திருவனந்தபுரம் நெடுஞ்சாலை வழி தெற்கே 5 கி.மீ தொலைவில் இருப்பது. நாகர்கோவில் திருவனந்தபுரம் நெடுஞ்சாலையில் வில்லுக்குறி பாலத்தின் கிழக்கே ஒரு கி.மீ தொலைவில் உள்ளது. நாகர்கோவிலிலிருந்து தக்கலை செல்லும் பேருந்தில் சென்று வில்லுக்குறி பேருந்து நிறுத்தத்தில் இறங்கி இக்கோயிலுக்கு நடந்து செல்லலாம். ஆட்டோவிலும் செல்லலாம். காரில் செல்பவர் கோயில் முன் பகுதியில் செல்ல வசதி உண்டு. கோயிலும் கோயிலை சுற்றியுள்ள பகுதிகளும் செழிப்பாக உள்ளது. இங்கு நடந்து செல்வது நல்ல அனுபவம்.

## தலபுராணம்:

இக்கோயில் தொடர்பான தலபுராணம் தனியாக எழுதி வைக்கப்படவில்லை. இந்த ஊர் காடாக இருந்த சமயம் நடந்த நிகழ்ச்சியை இந்த கோயிலின் உருவாக்கத்திற்குக் காரணமாக கூறுகின்றனர். ஒருமுறை இரண்டு சிறுவர்கள் அந்த காட்டுவழி வந்தனர். சிறுவர்களில் ஒருவன் வேறு சமபத்தவன். அவர்கள் வில்வமரத்தின் அடியில் சுயம்புவாக நின்ற ஒரு சிவலிங்கத்தைக் கண்டனர். இந்த அதிசயத்தை ஊர் மக்களிடம் தெரிவித்தனர். மக்கள் லிங்கத்தைப் பார்த்தனர். லிங்கத்தின் உச்சியில் சடை தெரிந்தது. ஆதனால் சடையப்பர் எனப்பட்டார்.

திருவிடைக்கோடு ஊரின் வரலாற்றைப் பதினென் சித்தரான இடைக்காடருடன் சார்த்திக் கூறுகின்றனர். இடைக்காடன் என்னும் பெபருள்ள ஒரு சிறுவன் காட்டில் ஆடு மேப்த்துக் கொண்டிருந்தான். அப்போது சித்தர் ஒருவர் அவனிடம் குடிக்க தண்ணீர் கேட்டார். இடையனோ ஆட்டுப்பால் கொடுத்து சித்தரை உபசரித்தான். அவர் இடையனுக்கு ஒரு மந்திரத்தைச் சொல்லிக்கொடுத்து உபதேசம் செய்தார். அந்த சிறுவன் சித்தரின் அருளால் பெரும் சக்தி பெற்றான். இவர் பின்னாளில் இடைக்காடர் என பெயர் பெற்றார். அவர் தன் சக்தியால் நாட்டில் பஞ்சம் வரப்போவதை அறிந்தார். ஆடுகளை எருக்கு இலை தின்னும் படி பழக்கினார். கேழ்வரகு என்னும் தானியத்தை மண்ணுடன் குழைத்து வீடு கட்டினார். ஒருமுறை மழையில்லாத போது ஆடுகள் எருக்கு இலைகளைத் தின்றன. அதனால் ஏற்பட்ட உடல் அரிப்பால் சித்தரின் வீட்டு சுவரில் உடம்பைத் தேய்த்தன. அப்போது சுவரிலிருந்து கேழ்வரகு தானியம் விழுந்தது. அதை அவர் சேகரித்து உண்டு உயிரைக் காப்பாற்றிக்கொண்டார்.

பஞ்சத்தில் சாகாமல் உயிர் வாழ்ந்த இடைக்காடரையும் ஆடுகளையும் பார்க்க நவக்கிரக அதிபதிகள் வந்தனர். இடைக்காடர் அவர்களை உபசரித்து ஆட்டுப்பாலைக் கொடுத்தார். நவக்கிரகங்கள் பாலைக் குடித்ததும் மபங்கி விழுந்தன. இடைக்காடர் அவர்களை மாற்றிக் கிடத்தினார். உடனே மழை

பெய்தது. இப்படியாக பஞ்சத்தைத் தீர்த்த இடைக்காடரின் சமாதியே இக்கோயில் என்ற கதையும் வழங்குகிறது.

இக்கோயிலில் உள்ள நந்தி தொடர்பாகவும் ஒரு கதை உண்டு. இக்கோயில் நந்தி சிற்பம் செதுக்கிய போது அது உக்கிரம் அடைந்தது. அதன் கொம்பை சிற்பி உடைத்தார். அதன் அடையாளம் இப்போதும் தெரிகிறது.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் கருவறை, இடை நாழி, உட்பிரகாரம், சுற்று மண்டபம், சாஸ்தாங்கோயில், நந்தி மண்டபம், முன் மண்டபம் என்னும் பகுதிகளைக் கொண்டது. கோயிலைச் சுற்றி பெரிய மதில் உண்டு. இரண்டு ஏக்கர் பரப்படைய இக்கோயிலின் வெளிப் பிரகாரம் பெரியது. இக்கோயிலைச் சடையப்பர் கோயில், சாஸ்தா கோயில் என இரண்டாக பிரிக்கலாம்.

கோயில் கிழக்கு நோக்கி அமைந்ததாயினும் வடக்கு முன்வாசல் வழியே கோயிலுக்குச் செல்ல முடியும். கோயிலின் கிழக்கே பெரிய குளம் உள்ளது. கிழக்கு பிரகாரத்தில் வடகிழக்கில் கிணறும், சிறு மண்டபமும் உள்ளன. பிரகாரத்தின் கிழக்கு பகுதியில் உள்ள மண்டபச் சுவரில் உள்ள துவாரம் வழி சாஸ்தா கோயிலையும், சிவன் கருவறையும் பார்க்க முடியும்.

தெற்கு வெளிப்பிரகாரம் பாறையில் கல்வெட்டுகள் உள்ளன. மேற்கு பிரகாரம் வழி நடந்து வடக்கு பிரகாரம் வந்து வடக்கு வாசல் வழி கோயிலுக்குச் செல்லலாம். சடையப்பர் கோயில் கருவறை, இடைநாழி, நந்தி மண்டபம், முன்மண்டபம் என நான்கு பகுதிகளை உடையது. கருவறையின் விமானம் நாகர வகை. சுதையால் அமைந்தது. தட்சிணாமூர்த்தி, நரசிம்மன், இந்திரன், பிரம்மா என நால்வரும் அவரவருக்குரிய திசைகளில் இருக்கின்றனர்.

கருவறையை அடுத்த நந்திமண்டபம் பெரியது. கருவறை “ஜகதி, விருத்த, குமுதம்” என்னும் முறைப்படி அமைந்தது. மேல்

பகுதியில் அன்னவரியும் கீழ் சிம்ம வடிவும் உள்ளன. கருவறை சுவரின் மேல்கூட்டின் அமைப்பு கோயிலின் பழைமையைக் காட்டும்.

சடையப்பர் கோயிலுக்கு எதிரே சாஸ்தா கோயில் உள்ளது. இரண்டிற்கும் இடையே பெரிய மண்டபம். நடு மண்டபத்தில் கொடிமரமும் பலிபீடமும் உள்ளன. இந்த கோயிலுக்கு என்று நிரந்தர கொடிமரம் இல்லை.

## கருவறை மூலவர்:

கருவறை மூலவர் சடையப்பர். ஆவுடையில் லிங்க வடிவு. 60 செ.மீ உயரம். லிங்கத்தின் உச்சியில் வெட்டு அடையாளம் உள்ளது.

## பரிவார தெய்வங்கள்:

சாஸ்தா, கணபதி, நாகர் ஆகிய பரிவார தெய்வங்கள் இங்கே உள்ளன. கருவறைக்கு நேர் எதிரே இருப்பது சாஸ்தா கோயில். மேற்கு நோக்கியது. சாஸ்தாவிற்கு உருவம் இல்லை. இக்கோயில் பிற்காலத்தில் கட்டப்பட்டது. இங்கு சாஸ்தா உருவம் இல்லாதவர். பீடம் மட்டுமே உள்ளது. இந்த சாஸ்தாவை இடைக் காட சித்தரின் சமாதி என்கின்றனர். சிலர் இந்த சாஸ்தாவைக் குடும்பதெய்வமாக வழிபடுகின்றனர். இவர்கள் இப்போது மும்பை, சென்னை போன்ற நகரங்களில் வாழ்ந்தாலும் சாஸ்தாவின் விழாவிற்கு வருகின்றனர்.

வெளிப்பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் ஆல், அரசு, வேம்பு மரங்கள் இணைந்து பிணைந்த மரம் உள்ளது. இவை நிற்கும் மேடையில் நாகர், சாஸ்தா, கணபதி சிற்பங்கள் உள்ளன. இந்த சாஸ்தா அமர்ந்த கோலம், யோகப்பட்டம் உடையவர்.

## குளம்:

கோயிலின் கிழக்கே குளம் உள்ளது. கிழக்கு கோயில் சுவரை ஒட்டி வியாபித்து இருப்பது இக்குளம்.

## சிற்பங்கள்:

கருவறை விமானத்தில் சுதை சிற்பங்கள் உள்ளன. இங்குள்ள கோபுரம்தாங்கிப் பொம்மைகள் நல்ல அமைப்புடையவை நந்திமண்டபத்தில் இருந்து இடைநாழிக்குச் செல்லும் வாசலின் இருபுறமும் துவாரபாலகர்கள் சிற்பங்கள் உள்ளன. இவர்கள் சூசி ஹஸ்த முத்திரையையும் அபய முத்திரையையும் காட்டுகின்றனர். இங்குள்ள நந்தி வேலைப்பாடுடையது. சாஸ்தா கோயில் மண்டபத்தூண்களில் சிங்க முக சிற்பங்கள் உள்ளன.

## கல்வெட்டு / வரலாறு:

இக்கோயிலின் பழைமையை அறிய ஒன்பதாம் நூற்றாண்டு கல்வெட்டு உதவுகிறது. அதன் படி இக்கோயில் 7 அல்லது 8 ஆம் நூற்றாண்டில் வழிபாடு பெற்றிருக்கலாம். கோயிலின் கருவறை பகுதி கி.பி. 9 ஆம் நூற்றாண்டிலும் சுற்று மண்டபம் கி.பி. 16 ஆம் நூற்றாண்டிலும் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பது கல்வெட்டுகள் வழி ஊகிக்க முடிகிறது. 16 ஆம் நூற்றாண்டிலேயே இக்கோயில் சடையப்பர் கோயில் என அழைக்கப்பட்டிருக்கிறது.

திருவிடைக்கோடு கோயிலில் 27 கல்வெட்டுகள் உள்ளன. இவை தமிழ் மொழியிலும் வட்டெழுத்து மொழியிலும் அமைந்தவை.

இக்கல்வெட்டுகளில் மிக பழைபது கி.பி. 869 ஆம் ஆண்டினது. கோக்கருநந்தடக்கன் வெளியிட்டது. இது நிபந்தக்கல்வெட்டு. செட்டி ஜாதிக்காரர் ஒருவர் 25 பசுக்களை இக்கோயிலுக்குக் கொடுத்திருக்கிறார். கி.பி. 877 ஆம் ஆண்டு கல்வெட்டும் நிபந்தக்கல்வெட்டு கி.பி. 12ஆம் நூற்றாண்டு கல்வெட்டு அமாவாசை திதியில் பிராமணர்கள் 12 பேர் உணவு உண்டதைக் கூறும். இது போல் ஆனி மாதத்தில் துவாதிசியில் ஒரு சிறப்பு நடந்ததை ஒரு கல்வெட்டு கூறும். கி.பி. 12ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு. நல்லமிளகு பொங்கல், தயிர் சாதம், தயாரிக்க தேவையான நல்லமிளகு, தயிர், தேங்காய், உப்பு அளவைக் கூறும். 1727 ஆம் ஆண்டு கல்வெட்டு இக் கோயில் மூலவரை கோடதீஸ்வரமுடையார் நயினார் எனக் கூறும்

கோடு (மலை) பகுதியில் குடி கொண்ட ஈஸ்வரன் என்னும் பெயரில் புனைபப்பட்டிருக்கலாம்.

## பூஜை

காலை 6.00 மணிக்கு திருநடை திறப்பு
காலை 6.15 மணிக்கு நிர்மால்ய பூஜை
காலை 9.00 மணிக்கு உச்சகால பூஜை
மாலை 6.00 மணிக்கு சாயராட்சை
இரவு 7.00 அர்த்தசாம பூஜை,
இரவு 7.30 மணிக்கு திருநடை சார்த்துதல்

பிற கோயிலில் காணப்படுவது போல மார்கழி திருவாதிரை, கார்த்திகை, ஐப்பசி விழாக்கள் நடக்கின்றன. மகா சிவராத்திரி விழா காலங்களில் 114 படி அரிசி பொங்கி 156 கட்டி சாதமாக படைத்து பக்தர்களுக்கும் ஊழியர்களுக்கும் கொடுக்கின்றனர்.

## விழா:

இக்கோயிலில் மாசி மாதம் கும்பாஷ்டமி, கார்த்திகை மாதம் விருச்சிகாஷ்டமி, பிரதோஷம் போன்ற விழாக்களும், திருவாதிரை, ஆயில்யம் நட்சத்திரங்களில் பூஜைகளும், கிருததாரையும் நடக்கின்றது. பங்குனி, புரட்டாசி நட்சத்திரத்தில் மகாதேவர் கோயிலிலும், விஷ்ணு கோயிலிலும் கொடியேற்று விழா ஆரம்பித்து பத்து நாட்கள் விழா நடக்கிறது.

முந்தைய காலங்களில் தினமும் வேதம் ஓதிய பிராமணர்களுக்காக உணவு வழங்கிய செய்திகள் கல்வெட்டுகளில் உள்ளன. இக்கோயில் சங்கேத வகையில் அடங்கியது. திருவிதாங்கூர் அரசருக்கு சொந்தமான நிலங்களின் வருமானத்தில் செபல்பட்ட கோயில்கள் சங்கேத வகையில் இருந்தன. அப்போது இக்கோயில்களை அந்த நிலங்களைக் கவனித்த குத்தகைதாரரான (மணியங்காரர்) கவனித்தனர். இம்முறை மறைந்த பிறகு இந்த வகை திருக்கோயில்கள் திருவிதாங்கூர் தேவஸ்வத்துடன் இணைக்கப்பட்டன.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250706.



# 45. அருள்மிகு மகாதேவர் திருக்கோயில்

## திருவிதாங்கோடு, கல்குளம் வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மகாதேவர் |
| விமானம் | – | நாகரம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

பன்னிரு சிவாலயங்களில் பத்தாவது கோயில். ஒன்பதாவது ஆலயமான திருவிடைக்கோடு கோயிலிருந்து முக்கிய சாலை வழி வில்லுக்குறி சந்திப்பைக் கடந்து தக்கலை கேரளபுரம் ஊர்களின் வழி தென்மேற்கே 8 கி.மீ தொலைவில் திருவிதாங்கோடு உள்ளது. நாகர்கோவிலிலிருந்து 25 கி.மீ தொலைவு, நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் இருக்கும் தக்கலை என்ற சிறு நகரத்திலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ள ஊர். முக்கிய சாலை ஓரத்தில் கோயில் தோரணவாயில் உள்ளது. அதை அடையாளம் கண்டு இக்கோயிலுக்குச் செல்லலாம்.

## இரு கோயில்களின் அமைப்பு:

ஒன்றரை ஏக்கர் பரப்புள்ள வளாகத்தில் தெற்கே சிவன் கோயிலும், வடக்கே விஷ்ணுகோயிலும் உள்ளன. இரண்டு

கோயில்களில் முன்பகுதியில் செப்புக்கொடிமரங்கள் உள்ளன. இரண்டு கோயில்களுக்கும் இடையே இடைவெளியும், முன் பகுதியில் பரந்த வெளியும், வெளிப்பிரகாரமும், சுற்றிலும் பெரிய மதில் சுவரும் உள்ளது.

கோயில் முகப்பில் சிறு மண்டபம் உண்டு. சிவன் கோயிலின் முகமண்டபம் பத்து தூண்களைக் கொண்ட பெரிய மண்டபம். இங்கே நந்தி உள்ளது. இதை நந்தி மண்டபம் என்கின்றனர். இந்த மண்டபத்தை அடுத்து தெற்கு வடக்காக ஒரு கல்மண்டபம் உள்ளது. இங்கு கலச பூஜை நடக்கிறது. அடுத்து கருவறை. இதற்குச் சோபனப்படி உண்டு. கருவறையைச் சுற்றி உட்பிரகாரம் உண்டு. கருவறை விமானம் வேசரவகை. இதன் அதிஷ்டான அமைப்பு கோவிலின் பழமையைக் காட்டும்.

விஷ்ணு கோயில், சிவன் கோயிலின் வடபகுதியில் உள்ளது. கோயிலின் முன்புறம் கொடிமரமும் பலிபீடமும் உள்ளன. இக் கோயில் முன்புறம் உள்ள மண்டபத்தை அடுத்து தெற்கு வடக்காக சிறிய அரங்கு உள்ளது. இம்மண்டபத்தை அடுத்து நான்கு கால்கள் உடைய சிறுமண்டபமும் கருவறையும் உள்ளன.

விஷ்ணு கோயில் கருவறையைச் சுற்றித் தரை மட்டத்திலிருந்து திருச்சுற்று மண்டபம் உண்டு. இக்கோயில் விமானம் வேசர வகையினது. கூம்பு வடிவம். சுதை. சிவன் கோயிலும், விஷ்ணு கோயிலும் தனித்தனி கோயில்கள் என்றாலும் இரண்டையும் இணைக்கும் முன்பக்கச் சுவர் உண்டு. இது இரண்டையும் ஒரே கோயில் என்றும் பிரமையை உண்டாக்கி விடுகிறது.

## கருவறை மூலவர்:

மூலவர் லிங்க வடிவினர். கருவறை வாசலை விட லிங்கம் பெரிதாகத் தோற்றம் அளிக்கும்படி உள்ளது. தாய்ப்பாறையில் கொத்தப்பட்ட லிங்கம் இது. பிரதிஷ்டை செய்யப்படவில்லை.

விஷ்ணு கோயில் கருவறை உயரமானது. விஷ்ணு சங்கு, சக்கரம் ஏந்தி பிற இரு கைகளில் கதை ஆயுதமும் தாமரை மலரும் ஏந்தியிருக்கிறார்.

இங்கு பரிவார தெய்வங்களாக சாஸ்தா, நாகர், கணபதி போன்றோர் உள்ளனர்.

## கல்வெட்டு / வரலாறு:

திருவிடைக்கோடு கோயிலில் 27 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை தமிழ் மொழியிலும் வட்டெழுத்திலும் அமைந்தன. கல்வெட்டுகள் தவிர இக்கோயில் தொடர்பாக 13 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மலையாள ஓலை ஆவணம் ஒன்றும் கிடைத்துள்ளது. கல்வெட்டுகளில் காலத்தால் முற்பட்டது. கி.பி 9 ஆம் நூற்றாண்டினது. கோக்கருநந்தடக்கன் என்ற அரசன் காலத்தது. கி.பி 809, 877 ஆகிய இரு ஆண்டுகளில் உள்ள இக்கல்வெட்டுகள் நிபந்தக் கல்வெட்டுகளே. இதனால் இக் கோயில் கி.பி. 9 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்று தெரிகிறது.

இக்கோயில் கல்வெட்டு ஒன்று மூலவரை ஈசான சிவன், ஆலமரப்பொந்தில் இருப்பவர் எனக் கூறும். நம்பூதிரிகள் மூலவரை பரிதிபாணி என்றும் குறிக்கின்றார்.

## சிற்பங்கள்:

திருவிதாங்கோடு சிவன் கோயிலைப் பிற பதினொரு சிவாலயங்களிலிருந்தும் குமரி மாவட்டத்தில் உள்ள பிற கோயில்களிலிருந்தும் பிரித்துக் காட்டும் அம்சம் இங்குள்ள சிற்பங்கள்தாம். குறிப்பாக வெளிப்பிரகாரத்தில் உள்ள விளக்குப் பாவைகள்.

சிவன் கோயில் முகப்பு மண்டபத்தில் முகப்பு தூண்களில் துவாரபாலகர்கள், அர்ஜுனன், கர்ணன், ஆளுயரச் சிற்பங்கள் உள்ளன. இவற்றின் மீது முழுதுமாய் சூரியஒளி படுவதே இதன் சிறப்பு. இங்கு உள்ள மன்மதன் சிற்பம் கரும்பு வில்லுடன் உள்ளது. இம்மண்டபத்தில் அருமையான பல சிற்பங்கள் உள்ளன.

விஷ்ணு கோயிலின் வடபகுதியிலிருந்து வெளிப்பிரகாரம் சுற்றிலும் வெளியே பல்வேறு வடிவங்களை உடைய பாவை

விளக்குச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இவற்றைத் தீப லெட்சுமிகள் எனக் கூறுவது இங்கு வழக்கம். பெண்ணின் பல்வேறு வயதுகளைக் காட்டும் வேறுபட்ட சிற்பங்கள், யாளிகள், உள்ளன. இவை எல்லாமே 16 அல்லது 17 ஆம் நூற்றாண்டின.

## பூஜை

காலை 5.00 மணிக்கு நடைதிறப்பு
காலை 5.30 மணிக்கு அபிஷேகம்
காலை 6.00 மணிக்கு பூஜை
காலை 10.00 மணிக்குத் தீபாராதனை
காலை 10.30 மணிக்கு நடையடைப்பு
மாலை 5.00 மணிக்கு நடைதிறப்பு
மாலை 6.30 மணிக்கு பூஜை
மாலை 7.30 மணிக்கு நடையடைப்பு

இக்கோயிலின் விழாக்களில் மார்கழித் திருவிழாவும், சிவராத்திரி திருவிழாவும் முக்கியமானது. சிவன், விஷ்ணு கோயில்களின் ஒரே நாளில் திருவிழா ஆரம்பமாகி பத்து நாட்களிலும் நடக்கிறது.



**கிரித தாரை வழிபாடு**

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 46. அருள்மிகு மகாதேவர் திருக்கோயில்

திருப்பன்றிக்கோடு, கல்குளம் வட்டம்.

இறைவன் – மகாதேவர்

ஆகமம் – தாந்திரீகம்

## அமைவிடம்

சிவாலய ஓட்டக்கோயில்களில் பதினோராவது கோயில். பத்தாவது ஆலயமான திருவிதாங்கோடு மகாதேவர் ஆலயத்தின் மேற்கே இருப்பது. நாகர்கோவிலிலிருந்து வடமேற்கு திசையில் 20 கி.மீ தொலைவில் உள்ளது. நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் உள்ள தக்கலையிலிருந்து 5 கி.மீ தொலைவில் அமைந்தது. நாகர்கோவிலிலிருந்து பள்ளியாடி செல்லும் பேருந்தில் சென்று பள்ளியாடி பேருந்து நிறுத்தத்தில் இறங்கி ஆட்டோவில் செல்லலாம். பள்ளியாடியிலிருந்து 2 கி.மீ தொலைவில் இருப்பது. திருப்பன்றிக்கோடு கோயில் இருக்கும் பகுதியில் நெருங்கிய குடியிருப்புகள் இல்லை. தோட்டங்களும் வயல்களும் நிறைந்த இடத்தில் கோயில் உள்ளது. உணவு விடுதி பள்ளியாடியில் மட்டுமே உள்ளது. திருப்பன்றிக்கோடு கல்குளம் வட்டம் பள்ளியாடி பஞ்சாயத்தின் கீழ் வருவது.

## தலபுராணம்:

இக்கோயில் தொடர்பான கதை மகாபாரதம் அர்ஜுனன் தபசுடன் தொடர்புடையது. அர்ஜுனனுக்கும், சிவனுக்கும் நடந்த சண்டையில் அர்ஜுனன் தோற்றான். அப்போது சிவனை அர்ஜுனன் அடையாளம் கண்டான். தசாவதார கதையில் ஒன்றான வராக அவதாரக்கதையுடனும் இக்கோயில் புராணத்தை இணைத்துக் கூறுகின்றனர்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் கிழக்கு நோக்கியது. ஆனால் பக்தர்கள் பெரும்பாலும் தெற்குவாசல் வழிச் செல்லுகின்றனர். கோயிலைச் சுற்றி பெரிய மதில் உண்டு. வெளிப்பிரகாரம் மரங்கள் நிறைந்தது. இங்கே பலிபீடமும் கொடிமரமும் உள்ளன. முன்வாசலை அடுத்து நீண்ட அரங்கு. இதை அடுத்து நமஸ்கார மண்டபம். கருவறையைச் சுற்றி பெரிய மதில் உண்டு. வெளிப்பிரகாரம் மரங்கள் நிறைந்தது. இங்கே பலிபீடமும் கொடிமரமும் உள்ளன. முன்வாசலை அடுத்து நீண்டஅரங்குஇதைஅடுத்துநமஸ்காரமண்டபம்கருவறையைச்சுற்றி உட்பிரகாரமும் சுற்று மண்டபத்தையும் காணலாம்.

கருவறை வட்ட வடிவில் ஆனது. உள்பகுதி சதுர வடிவிலானது. மேற்கூரை கூம்பு வடிவினது. இது மரத்தால் ஆனது செம்புத்தகடு வேயப்பட்டது.

## மூலவர்:

சிவன் லிங்க வடிவினர். ஆவுடையில் பிரதிஷ்டை.

## பரிவார தெய்வங்கள்:

உட்பிரகாரம் தென்மேற்கு மூலையில் கணபதி. மேற்கு திருச்சுற்று மண்டபத்தில் அம்மன். நின்ற கோலம். உள் சுற்று வட பகுதி நிர்மால்ய தேவரும் சாஸ்தாவும் உள்ளனர். மேலும் ஐயப்பன், முருகன், நாகர் போன்ற தெய்வங்களும் உள்ளன.

## குளம்:

கோயிலுக்கு வெளியே சிறிய குளம் உள்ளது. கோயிலுக்குச் சொந்தமான இக்குளம் குளிப்பதற்குரியது.

## கல்வெட்டுகள் / வரலாறு:

இக்கோயிலில் மூன்று கல்வெட்டுகள் உள்ளன. 1276 ஆம் ஆண்டு கல்வெட்டு இக்கோயில் 13 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்பதற்கு சான்று. இக்கோயில் கருவறைப்பகுதி கி.பி 12 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது. திருச்சுற்று மண்டபம் கூட இதே காலத்தது. இதற்கு கல்வெட்டுச்சான்றுகள் உண்டு.

## பூஜை

காலை 6.00 மணிக்கு திருநடை திறப்பு
காலை 6.30 மணிக்கு அபிஷேகம்
காலை 7.00 மணிக்கு தீபாராதனை
காலை 9.00 மணிக்கு தீபாராதனை
மாலை 5.30 மணிக்கு நடை திறப்பு
மாலை 6.30 மணிக்கு தீபாராதனை
மாலை 7.30 மணிக்கு நடை அடைப்பு

## விழா:

கார்த்திகை அஷ்டமி விழா, மாசி சிவராத்திரி விழா முக்கியமானது.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 250039.



# 47. அருள்மிகு சங்கரநாராயணர் திருக்கோயில்

## நட்டாலம், விளவங்கோடு வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | சங்கரநாராயணர் |
| தலவிருட்சம் | – | வில்வமரம் |
| ஆகமம் | – | தாந்திரீகம் |

## அமைவிடம்

பன்னிரு சிவாலயங்களில் நிறைவான சிவாலயம். பதினோராவது சிவாலயமான திருப்பன்றிக்கோடு ஆலயத்திலிருந்து மேற்கே 4 கி.மீ தொலைவில் உள்ளது. நாகர்கோவிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் சாலையில் இருக்கும் மார்த்தாண்டம் ஊரிலிருந்து கருங்கல் சாலையில் 8 கி.மீ தொலைவில் உள்ளது. நாகர்கோவிலிலிருந்து 38 கி.மீ தொலைவில் இருப்பது.

## கோயில் அமைப்பு:

நட்டாலத்தில் இரண்டு கோயில்கள் உள்ளன. ஒன்று மகாதேவர் கோயில். இன்னொன்று சங்கரநாராயணர் கோயில். இரண்டிற்கும் இடையே பெரிய குளம் உள்ளது. முதலில் இருப்பது சங்கர நாராயணர் கோவில் இதன் பின்னே குளம். இதை அடுத்து

மகாதேவர் கோயில் இதுவே சிவாலய ஒட்டக்கோயிலாகக் கருதப்படுவது.

ஒரு ஏக்கர் பரப்புள்ள இக்கோயில் பலிபீடம் முன் பகுதியில் ஒட்டுப்பணி அரங்கு, நமஸ்கார மண்டபம், திறந்த வெளிப்பிரகாரம், கருவறை என அமைந்தது.

## கருவறை:

நட்டாலம் கருவறை மூலவரை அர்த்த நாரீஸ்வரர் என்றும் வாய்மொழி வழக்கில் குறிப்பிடுகின்றனர். இதற்கு பழைய ஆவணங்களில் சான்று இல்லை. சேக்கிழாரின் பெரியபுராண கண்ணப்ப நாயனாருடனும் இணைத்து மூலவரை அழைக்கின்றனர்.

கருவறை வட்டவடிவமாய், கூம்பு வடிவில் ஓரடுக்கில் அமைந்தது. தேக்கு மரப்பலகையால் மூடப்பட்டு செம்பு வேயப்பட்டது. கருவறை உள்பகுதி நீள் சதுரமானது. கருவறை, அர்த்தமண்டபம் எனப்பகுப்புடையது. சிவன் லிங்க வடிவினர்.

## பரிவார தெய்வங்கள்:

தெற்கு வெளிப்பிரகாரத்தில் நமஸ்கார மண்டபத்தின் வடக்கில் நின்ற கோலமாய் இரு கைகளை ஏந்திய படி நிர்மால்ய மூர்த்தி நிற்கிறார். கல்படிமம் மூலவருக்கு அணிவித்த மாலையை இவருக்கும் போடுகின்றனர். இவரைச் சண்டேஸ்வர மூர்த்தியாகவே கருதலாம். கோயில் கன்னி மூலையில் விநாயகர் இருக்கிறார்.

## வரலாறு:

இக்கோயிலில் கல்வெட்டுகளோ வேறு ஆவணங்களோ கிடைக்கவில்லை. கட்டுமான அமைப்பின் படியும் நட்டாலம் ஊரில் கிடைத்த ஒரு கல்வெட்டு வழியும் கிபி 16 அல்லது 17 ஆம் நூற்றாண்டு இக்கோயில் கட்டப்பட்டது எனக் கருதலாம்.

## பூஜை

காலை 5.00 மணிக்கு திருநடை திறப்பு

காலை 5.30 மணிக்கு அபிஷேகம்

காலை 6.30 மணிக்கு தீபாராதனை

காலை 8.00 மணிக்கு தீபாராதனை

பகல் 11.00 மணிக்கு உச்ச பூஜை,

மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு

மாலை 6.30 மணிக்கு தீபாராதனை

இரவு 8.00 திருநடை சார்த்துதல்

மகா சிவராத்திரி விழா மட்டும் சிறப்பாக நடக்கிறது.

## சங்கரநாராயணர்கோயில்:

சிவாலய ஓட்டம் தொடர்பான மகாதேவர் கோயிலின் முன்னே இருக்கும் குளத்தின் முன் சங்கர நாராயணர் கோயில் உள்ளது. இக்கோயில் முன் ஒட்டுப்பணி அரங்கு. செப்புத்தகட்டில் பொதியப்பட்ட கொடிமரம், வெளிப்பிரகாரம், நமஸ்கார மண்டபம், வட்ட வடிவமான கோயில், பிரகார சுற்றாலை மண்டபம் என அமைந்தது.

கருவறையில் லிங்க வடிவ சங்கரநாராயணர் இருக்கிறார். இக்கோவில் சுற்றாலை மண்டபத் தூண்களிலும் நமஸ்கார மண்டபத்தூண்களிலும் சிற்பங்கள் உள்ளன. இவை அரச குடும்பத்தினரின் சிற்பங்கள். இச்சிற்பங்களின் அடிப்படையில் வேணாட்டு அரசர்களின் நன்கொடை இக்கோயில் எனக் கருதலாம்.

## விழா:

இக்கோயிலில் மாசி மாதம் கும்பாஷ்டமி. கார்த்திகை மாதம் விருச்சிகாஷ்டமி, பிரதோஷம் போன்ற விழாக்களும் திருவாதிரை, ஆயில்யம் நட்சத்திரங்களில் பூஜைகளும் கிருததாரையும் நடக்கின்றது. பங்குனி, புரட்டாசி நட்சத்திரத்தில் மகாதேவர் கோயிலிலும், விஷ்ணு கோயியிலும் கொடியேற்று விழா ஆரம்பித்து பத்து நாட்கள் விழா நடக்கிறது.

தொடர்பு தொலை பேசி எண் : 04651 – 261928.



# செங்கோட்டை வட்டக் கோயில்கள்

திருநெல்வேலி மாவட்டத்தின் ஒரு பகுதியாக இருக்கின்ற செங்கோட்டை வட்டத்தில் உள்ள 92 கோயில்களும் கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்கள் நிர்வாகத்தின் கீழ் அடங்கியபவையாகும். செங்கோட்டை வட்டம் 1956 வரை திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் (கேரளம்) ஒரு பகுதியாக இருந்தது. திருவிதாங்கூரிலிருந்து தென்திருவிதாங்கூர் பகுதி பிரிக்கப்பட்டு கன்னியாகுமரி மாவட்டம் என்ற புதிய மாவட்டம் உதயமான போது (1956) செங்கோட்டை வட்டம் திருநெல்வேலி மாவட்டத்துடன் இணைக்கப்பட்டது.

திருவாங்கூர் நிர்வாகத்தின் கீழ் செங்கோட்டை வட்டம் கோயில்கள் இருந்ததால் கன்னியாகுமரி மாவட்ட நிர்வாகத்தின் கீழ் இக்கோயில்கள் இயங்க வேண்டும் என்ற அரசு ஆணைப்படி இயங்கின. இதனால் செங்கோட்டை வட்டம் திருநெல்வேலி மாவட்டத்தின் ஒரு பகுதியாக இருந்தாலும், இங்குள்ள கோயில்கள் கன்னியாகுமரி மாவட்ட திருக்கோயில்கள் நிர்வாகத்தில் இருப்பதால் இக்கோயில்கள் பற்றிய விபரங்கள் இணைக்கப்பட்டுள்ளன.

செங்கோட்டை வட்டத்தில் அரிகரன் ஆறு, குண்டாறு இரண்டும் பாய்கின்றன. இந்த ஊரின் அருகே நல்லூரில் கெங்க மரபினனாகிய ஒரு சிற்றரசன் இருந்தான். குழந்தையில்லாத அவனுக்கு இறைவன் குழந்தை வரம் கொடுத்தார். அதனால் மகிழ்ந்த கெங்கனன் தான் இருந்த இடத்தில் ஒரு கோட்டை கட்டினான். அது செங்கோட்டை எனப்பட்டது. அப்பெயரால் இவ்வூர் வழங்கியது.

செங்கோட்டை வட்டத்தில் மதுநாதசுவாமி திருக்கோயில், அழகிய மணவாளப்பெருமாள் திருக்கோயில், குலசேகரநாதசுவாமி திருக்கோயில், சதாசிவமூர்த்தி திருக்கோயில் பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில், ஜமதக்னீஸ்வரர் திருக்கோயில், திருமூலநாதர் திருக்கோயில் ஆகிய 7 கோயில்கள் பற்றிய விபரங்கள் தரப்பட்டுள்ளன.



**குற்றாலம் ஐந்தருவி**



# 48. அருள்மிகு சதாசிவமூர்த்தி திருக்கோயில்

## புளியறை, செங்கோட்டை வட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | – | சதாசிவமூர்த்தி |
| இறைவி | – | சிவகாமி |
| தீர்த்தம் | – | ஜடாமகுட தீர்த்தம் |
| தலவிருட்சம் | – | புளியமரம் |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |

## அமைவிடம்

திருநெல்வேலி மாவட்டம் செங்கோட்டை வட்டத்தில் உள்ள செங்கோட்டையிலிருந்து 8.00 கி.மீ. தொலைவிலும், குற்றாலத்திலிருந்து 15 கி.மீ., திருநெல்வேலியிலிருந்து 67 கி.மீ. தொலைவிலும் இருப்பது இக்கோயில். புளியறை சிறு கிராமம். பஸ் வசதி குறைவு. செங்கோட்டையில் தங்கிவிட்டு காரில் இங்கு வரலாம். கோயில் முகப்பில் வாகனம் நிறுத்த வசதி உண்டு. இந்த ஊர் கேரள எல்லையில் அமைந்தது. இங்கிருந்து அச்சன்கோயில் 6.00 கி.மீ. தொலைவு.

இக்கோயில் இயற்கையான சூழலில் இருப்பது. கோயில் எதிரே குளம், தெற்கில் மூங்கில் சோலை, குளம், பசுமையான வயல்கள், தோட்டம். கோயில் எதிரே கண்ணுக்கு எட்டிய அளவு

மரங்கள், வயல்கள். இக்கோயிலில் முன்னின்று இயற்கை வெளியை பார்ப்பதே நல்ல அனுபவம்.

இக்கோயில் உருவானது தொடர்பாக இரண்டு கதைகள் வழங்குகின்றன. இக்கோயிலைப் பற்றி சங்கர சதாசிவ மாலை என்ற நூல்,

*நடமாடும் தில்லைவளர் நாதர் சிதம்பரனார்*
*இடமாயிப்புளியில் முளைத்தெழுந்த புண்ணியனே*
*மடமாலையஞ் சிறக்குமா நிலத்திலே யதிகம்*
*தடம்வாவி சூழ் புளிகை சங்கர சதாசிவமே...*

எனக்கூறும். இப்பாடலில் கோவில் உருவான கதை உள்ளது.

ஒரு காலத்தில் தில்லை சிதம்பரம் கோயிலுக்கு அவைதீக மதத்தினரால் தீங்கு வந்தது. தில்லை தீட்சிதர் மூலவரை அவைதீகர் திருடிச்செல்வரோ என அஞ்சினர். அதனால் கருவறை படிமத்தை எடுத்துக்கொண்டு தென்திசை நோக்கி வந்தனர். அவர்கள் பொதிகைமலையைக் கடந்து சேரநாட்டு எல்லைக் காட்டுக்கு வந்தனர்.

அந்த காடு மூங்கில் மரங்களும், புளியமரங்களும் நிறைந்தது. பகலிலும் இருள் சூழ்ந்த அந்தக் காட்டில் நடராஜரின் படிமத்தை மறைத்து வைக்க விரும்பினர். அப்போது வானத்தில் ஒரு கருடன் வட்டமிட்டது. அதை அடையாளமாக வைத்து ஒரு புளியமரத்தை தெரிவு செய்தனர். அம்மரத்தில் இருந்த பொந்தில் தில்லை மூலவர் படிமத்தை மறைத்து வைத்தனர். பின் தங்கள் இடம் சென்றனர்.

அந்த மரம் இருந்த பகுதி தனிப்பட்ட ஒருவருக்கு உரியது. அவர் மரத்திலிருந்த படிமத்தைக் கண்டு மகிழ்ந்து அப்படியே வைத்து வழிபட்டார். ஆண்டுகள் பல சென்றன. தில்லையில் பகை நீங்கியது. தீட்சிதர்கள் மூலவரைத் தேடி தென்திசை வந்தனர். அதை வைத்த இடம் தெரியவில்லை. அவர்கள் மனம் வருந்தி தில்லை நோக்கி கைகூப்பி னர்.

இச்சமயத்தில் அசரீரி ஒலித்தது. சாரை சாரையாய் எறும்பு செல்லும் வழி செல்லுங்கள் எனக் கேட்டது. தீட்சிதர்களும்

அப்படியே சென்றனர். தங்களின் நாயகன் மரப்பொந்தில் வழிபடு கோலமாய் இருப்பதைக் கண்டனர். கண்ணீர் மல்க அதை எடுத்துச்சென்றனர். சில நாட்கள் கழிந்தன. அந்த புளியமரத் தோட்டத்தின் உடையவர் வந்தார். தான் வழிபட்ட நடராஜனைக் காணாமல் திகைத்தார். அழுதார், தான் கண்டதை ரகசியமாய் வைத்ததால் இப்படி ஆனதோ என நெகிழ்ந்தார்.

இந்த நேரத்தில் அவர் நின்ற இடத்தில் பூமி அசைந்தது. அதிலிருந்து சுயம்புலிங்கம் தோன்றியது. அவர் பரவசமானார். இச்செய்தி எங்கும் பரந்தது. அப்போது அப்பகுதியை ஆண்ட அச்சன்கோயில் அரசனும் அறிந்தான். அவனது கனவில் சிவன் தோன்றி அங்கே கோயில் கட்டப் பணித்தார். அவனும் அங்கு சிறுகோயில் கட்டினான்.

இதுபோல் இன்னொரு கதையும் வழங்குகிறது. கேரளம் கொட்டாரக்கரை அரசனுக்கு பலநாட்கள் குழந்தை இல்லை. அவன் சிவனை வேண்டினான். கனவில் சிவன் தோன்றி புளியறை காட்டில் தான் சுயம்புவாக தட்சிணாமூர்த்தியாக இருப்பதைக் கூறி கோயில் எடுக்க கட்டளையிட்டார். அரசனும் அப்படியே செய்தான். புளியமரத்தின் அடியில் தோன்றியவன் ஆதலால் புளியறை ஆயிற்று.

## கோயில் அமைப்பு:

தரைமட்டத்திலிருந்து சுமார் 9 மீட்டர் உயர மேட்டுப்பகுதியில் இருப்பது இக்கோயில். நான்கு ஏக்கர் பரப்புடையது. 27 படிகள் (27 நட்சத்திரங்கள்) ஏறி இக்கோயிலுக்கு செல்லவேண்டும்.

சிவனுக்கும் அம்பாளுக்கும் தனித்தனி சன்னதிகள். இரண்டுக்கும்இடையேதிருக்கல்யாணமண்டபம்.புதியகட்டுமானம். இரண்டும் கிழக்கு நோக்கியவை. சிவனின் கோவில் வடபுறமும், அம்பாள் தென்புறமும் இருக்கிறாள். சிவன் சன்னதி முன்னே தட்சிணாமூர்த்தி கோயில். தட்சிணாமூர்த்தியையும், சிவனையும் ஒன்றாக தரிசிக்கலாம். கோயிலைச்சுற்றிய வெளிப்பிரகாரம். கோயில் முன்பாக பிற்கால மண்டபம் உண்டு.

சிவன் சன்னதி கருவறை, அந்தராளம், அர்த்தமண்டபம் என அமைந்தது . அர்த்தமண்டபத்தில் நந்தி இருப்பதால் நந்தி மண்டபம் எனவும் படுகிறது. சிவன் கருவறை முன் உள்ள மண்டபத்தில் நடராஜர், சிவகாமி செப்புப்படிமங்கள் உள்ளன. நந்திமண்டபத்தில் துவாரபாலகர், கங்காள நாதர், பூதம், அனுமன் என சில சிற்பங்கள் உள்ளன.

## கருவறை மூலவர்:

மூலவர் லிங்க வடிவினர். சுயம்புவாக எழுந்தவர். ஆவுடை உண்டு. அம்மன் கல்படிமம். நின்ற கோலம், இரு கரங்கள். ஒன்று மலர் தாங்கியது, இன்னொன்று லோலாஹஸ்தம்.

இக்கோயிலின் மூலவராகவும் தட்சிணாமூர்த்தியைக் கொள்ளலாம். சிவன் சன்னதி முன் இவரது சிறு கோயில் உள்ளது. தெற்கு நோக்கியது. அமர்ந்த கோலம்; சின்முத்திரை அபயம்.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலில் கணபதி, சுரதேவர், நாகராஜா, முருகன், வள்ளி, தெய்வானை, சண்டிகேஸ்வரர், சனீஸ்வரர், சப்தகன்னியர், பஞ்சகன்னியர், சந்திரன், காலபைரவர், மாடன், மாடத்தி, சின்னத்தம்பி, யட்சி, வேடன், வேடத்தி ஆகிய தெய்வங்கள் உள்ளனர்.

வடக்குப்பிரகாரத்தில் சுரதேவர் இருக்கிறார். மூன்று தலைகள் மூன்று கைகள், மூன்று கால்கள். ஒரு கால் தூக்கிய நிலை. கைகளில் சூலம், அபயம் காட்டுகிறது. தென்பிரகாரத்தில் சனீஸ்வரர் உள்ளார். நின்றகோலம், கல்படிமம். இவரின் காகத்தின் அலகு கிழக்கு நோக்கியது.

கோயிலின் வெளியே சற்று தொலைவில் தெற்கில் நவநீத கிருஷ்ணன் கோயில் உள்ளது. இது சதாசிவன் கோயிலுக்கு உட்பட்டது. இக்கோயில் கருவறை அந்தராளம், அர்த்தமண்டபம் என அமைந்தது. கருவறையில் கல் படிமம். நவநீதிகிருஷ்ணனின் இருகைகளிலும் வெண்ணை; கிழக்குநோக்கியது. இதே கோயிலில் சங்கர நாராயணன், விஸ்வசேனர் ஆகியோர் உள்ளனர்.

## பூஜை

காலை 6.00 மணிக்கு திருநடை திறப்பு

காலை 6.00 மணிக்கு தீபாராதனை

காலை 10.30 மணிக்கு தீபாராதனை

மாலை 6.00 மணிக்கு தீபாராதனை

இரவு 8.00 மணிக்கு தீபாராதனை

வியாழக்கிழமை காலை 4.30 மணி முதல் 2.00 மணிவரையிலும், மாலை 4.30 மணி முதல் இரவு 9.00 மணிவரையிலும் கோயில் திறந்து இருக்கும்.

## விழா:

தை மாதம் உத்திர நட்சத்திரம் தொடங்கி பத்து நாட்கள் திருக்கல்யாண விழா நடக்கும். குருப்பெயர்ச்சி விழா மிக பிரபலமானது. ஏராளமான பக்தர்கள் கூடுகின்றனர். இக்கோயிலுக்கு வியாழக்கிழமை கிரகதோஷம் உள்ளவர் செல்லலாம். குருவாரம்தோறும் படிபூஜை செய்து குரு வழிபாடு செய்வது முக்கியமாக கருதப்படுகிறது.

தொடர்பு தொலை பேசி எண் : 04633 – 233493.



# 49. அருள்மிகு அழகியமணவாளப்பெருமாள் திருக்கோயில்

## செங்கோட்டை, செங்கோட்டை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | அழகியமணவாளப்பெருமாள் |
| இறைவி | – | பூதேவி, ஸ்ரீதேவி |
| ஆகமம் | – | வைகாசனம் |

### அமைவிடம்

செங்கோட்டை பேருந்து நிலையத்திலிருந்து அரை கி.மீ தொலைவு. மக்கள் வாழும் இடத்தின் நடுவில் கோயில் உள்ளது. இக்கோயிலுக்குப் பேருந்து நிறுத்தத்திலிருந்து நடந்தே செல்லலாம். செங்கோட்டை நகரியம் அருகில் தங்கும் வசதி உண்டு. கோயில் அருகே நல்ல சைவச்சிற்றுண்டி விடுதி உண்டு.

### தலபுராணம்:

இக்கோயில் இருக்குமிடம் முன்பு காட்டுப்பகுதியாக இருந்தது. வேணாட்டு அரசன் ஒருவன் இந்தக் காட்டுவழி குதிரையில் வரும்போது குதிரை நின்றது. அரசன் அதைப் போகும் படி சமிக்ஞை கொடுத்தும் அசையவில்லை. அரசன் குதிரை

மேலிலிருந்து இறங்கினான். குதிரை நின்ற இடத்தில் திருமாலின் சக்கர அடையாளம் தெரிந்தது. அரசன் அதே காட்டில் ஒரு கோயில் கட்டினான்.

## கோயில் அமைப்பு:

முகப்பில் ஒரு மண்டபம். அடுத்து மகாமண்டபம். இதில் கருடன், கொடிமரம், பலிபீடம் உள்ளன. இதை துவஜஸ்தம்ப மண்டபம் என்கின்றனர். கருவறை. அந்தராளம் என அமைந்தது. அர்த்தமண்டபம் மிகச்சிறியது. கோயிலைச்சுற்றி வெளிப்பிரகாரம் உண்டு. கருவறைப்பகுதி கட்டுமானம் பழையது. முகப்பு மண்டபத்தில் மலையாள வருஷம் 1064ல் (1889) கட்டப்பட்டது என்ற கல்வெட்டு உள்ளது. இதன் படி திருவிதாங்கூர் அரசர் மூலந் திருநாள் (1885–1924) இதைக் கட்டியிருக்கலாம் என்று தெரிகிறது.

## கருவறை மூலவர்:

கருவறைத் தெய்வமான அழகிய மணவாளப்பெருமாள்/ சுந்தரராஜன் நின்ற கோலம். கிழக்கு பார்த்த கோலம். சதுர்புஜம், சங்கு, சக்கரம், அபய, வரத ஹஸ்தம்; கிரீடாமகுடம்; இரு மருங்கும் ஸ்ரீதேவி, பூதேவியர், நின்ற கோலம்; தாமரை, லோலாஉறஸ்தம்; தாங்கியவர்கள். அற்புதமான கல்படிமங்கள்.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயில் கருவறையில் நவநீத கிருஷ்ணன், சக்கரத்தாழ்வார் திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், சேனை முதல்வர் ஞானப்பட்டர் ஆகியோரின் செப்புப்படிமங்கள் உள்ளன.

வெளிப்பிரகாரம் மடப்பள்ளியில் அன்னபூரணி இருக்கிறாள். நான்கு கரங்கள். அபய வரத ஹஸ்தம் பிற கைகளில் தாமரை மலர்கள் அமர்ந்த கோலம். மேலும் கருடன் சனீஸ்வரன், கிருஷ்ணன், நரசிம்மன் ஆகிய தெய்வங்களும் உள்ளன.

## பூஜை

காலை 5 மணி திருநடைதிறப்பு

6.00 மணி தீபாராதனை

11.00 மணி உச்சக்கால பூஜை

மாலை 5 மணி திருநடைதிறப்பு

6.30 மணி சாயராட்ச பூஜை

8.30 மணி அர்த்தசாம பூஜை

விழா – ஆடித்திருவிழா சித்திரை வசந்த விழா, நவராத்திரி விழா ஆடி உத்திரம் தேர் திருவிழா. இங்கு 11 நாட்கள் விழா 11 ஆம் திருநாள் தீர்த்தவாரி (ஆறாட்டு) ஆடி மாதம் 8 ஆம் திருவிழா திருமங்கையாழ்வாருக்கு நம்மாழ்வார் பிறப்பு நாள் நிகழ்வு. வைகுண்ட ஏகாதசி சிறப்பு நிகழ்ச்சி.



தொடர்பு தொலை பேசி எண் : 04633 – 233493.



# 50. அருள்மிகு குலசேகரநாதசுவாமி திருக்கோயில்

செங்கோட்டை, செங்கோட்டை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | குலசேகரநாதசுவாமி |
| இறைவன் | – | தர்மஸம்வர்த்தினி (அறம் வளர்த்த அம்மன்) |

## அமைவிடம்

செங்கோட்டையில் மக்கள் வாழும் முக்கிய பகுதியில் உள்ள கோயில். பேருந்து நிறுத்தத்திலிருந்து நடந்து செல்லலாம். அழகியமணவாளப்பெருமாள் கோயிலைத் தரிசித்து விட்டு அருகே உள்ள குலசேகரநாதசுவாமி கோயிலுக்குச் செல்லலாம்.

## தலபுராணம்:

குலசேகரப் பாண்டியன் பெயரால் அமைந்த கோயில். இந்தப் பாண்டியன் குதிரையில் வேட்டைக்குச் சென்றபோது பூமியில் சுயம்புவாகத் தோன்றிய சிவனைக்கண்டு கோயில் கட்டினான். இக்கோயில் இறைவியைப் படிக்காசு அருளிய தேவி என்றும் கூறுகின்றனர்.

## கோயில் அமைப்பு:

சுவாமி, அம்மன் இருவருக்கும் தனித்தனியே சன்னதிகள் உண்டு. இரு கோயில்களும் கருவறை அந்தராளம், அர்த்த

மண்டபம் என அமைந்தது. அந்தராள மண்டபத்தில் விழாப் படிமங்கள் உள்ளன. இரு கோயில்களின் முன் உள்ள மகா மண்டபத்தின் தெற்கே திருக்கல்யாண மண்டபம் உள்ளது. இது வாகன மண்டபமாகவும் உள்ளது.

## கருவறை மூலவர்:

மூலவர் லிங்க வடிவினர். ஆவுடையில் உள்ளார். அம்மன் நின்ற கோலம். இரு கைகள். ஒன்றில் தாமரை, இன்னொன்று லோலாஹஸ்தம், கல்படிமம்.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலில் உள்ள பரிவார தெய்வங்கள் விநாயகர், சண்டிகேஸ்வரர், சண்டிகேஸ்வரி, சேரமான் பெருமாள், அப்பர், சுந்தரர், சம்பந்தர், நடராஜர் சிவகாமி கங்காள நாதர், சந்திரசேகரர், சரஸ்வதி, ஈஸ்வரர் சுப்பிரமணியர் வள்ளி தெய்வானையுடன் சனீஸ்வரர் ஆகியோர்.

## சிற்பங்கள்

இக்கோயில் முகமண்டபத்திலும் திருக்கல்யாண மண்டபத்திலும் சில சிற்பங்கள் உள்ளன. ஒப்பனை செய்யும் பெண் வில்வளைக்கும் ராமன், இளவரசியைத் தூக்கிச் செல்லும் குறவன் கேடயத்தையும் வாளையும் தாங்கிப் போர் செய்யப் புறப்படும் வீரன் பசுபதீஸ்வரர் ஆகியோர் புடைப்பு சிற்பங்கள் உள்ளன.

## பூஜை

காலை மணி 6 முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதுல் 8 மணி வரை

ஆறு கால பூஜை

விழா – தை மாத பூசை 10 நாட்கள் நிகழும் 9 ஆம் நாள் தேரோட்டம் திருக்கல்யாண விழா கந்தசஷ்டி.

தொடர்பு தொலை பேசி எண் : 04633 – 233493.



# 51. அருள்மிகு ஜமதக்னீஸ்வரர் திருக்கோயில்
## கிளாங்காடு, செங்கோட்டை வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | ஜமதக்னீஸ்வரர் |
| இறைவி | – | நல்லமங்கை |
| தீர்த்தம் | – | அருட்பாரதி |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |
| தலவிருட்சம் | – | வில்வம் |

### அமைவிடம்

தென்காசி–மதுரை சாலையில் இரண்டு கி.மீ தொலைவில் கிளாங்காடு அமைந்துள்ளது. இவ்வூர் பஸ் நிறுத்தத்திலிருந்து கோயிலுக்கு நடந்து செல்லலாம். வாகனங்ளைக் கோயில் முன் நிறுத்த வசதி உண்டு. சிறிய ஊர். அதனால் தென்காசியிலிருந்து ஆட்டோவில் வந்து செல்லலாம்.

### தலபுராணம்:

கிளாக்காய் மரம்/கிளா மரம் நிறைந்த காட்டுப்பகுதி கிளாங்காடு ஆனது. கிளா – கிளாமரம். இக்கோயிலில் மூலவரைப் பரசுராமரின் தந்தை ஜமதக்னீஸ்வருடன் தொடர்புபடுத்திப் பேசுகின்றனர். ஒருமுறை அரசனொருவன் இவ்வூர் வழி

குதிரையில் சென்றான். அப்போது குறிப்பிட்ட இடத்தில் குதிரை கால் தடுக்கி விழுந்தது. அரசனும் குதிரையிலிருந்து விழுந்தான் அந்த இடத்தைப் பார்த்தான். ஒரு சிவலிங்கம் தென்பட்டது. இது ஜமதக்னீஸ்வரன் வழிபட்ட சிவன் என ஒரு அசரீரி கேட்டது. அரசன் அந்த இடத்திலேயே கோயில் எடுத்தான்.

இந்த ஊரின் வடகிழக்கே ஒரு காளி கோயில் உண்டு. அக்காளி கங்கைக்கு வாய்த்த அம்மன். நல்லமங்காள் எனவும் அழைக்கப்படுகிறார். ரேணுகாதேவி ஜமதக்னியின் மனைவி. இவள் நதியில் நீர் எடுக்கக் குடம் கொண்டு செல்லமாட்டாள். நீரைப் பந்துபோல் உருட்டி எடுத்து வருவாள். அது அவளது கற்பின் சிறப்பால் நடப்பது. ஒருமுறை ஆகாபத்தில் சென்ற கந்தர்வன் ஒருவனைப் பார்த்ததால் கற்பு தவறியவளாகக் கருதப்பட்டாள். இதனால் ஜமதக்கினி அவளை வெட்டுமாறு தன் மகன் பரசுராமரிடம் சொன்னார். அவர் அப்படியே செய்தார். ஜமதக்னியிடம் மகன் தாயை மறுபடியும் எழுப்பித்தரும்படி கேட்டார். ஜமதக்னி அவளைக் காளியாக்கி இவ்வூரில் பிரதிஷ்டை செய்தார் என்பது ஒரு கதை.

சங்கு சேர்வைக்காரர் என்ற குறுநில மன்னன் தான் வேண்டியது நடந்ததால் இக்கோயிலின் சில பகுதிகளைக் கட்டினார். கோயிலுக்கு நிறைய நிலங்களும் கொடுத்தார் என்ற வாய்மொழிச் செய்தியும் உண்டு.

## கோயில் அமைப்பு:

கோயிலின் முன் சிறுமண்டபம்; அடுத்து கல் மண்டபம், இது வித்தியாசமான அமைப்புடையது. ஓட்டுக்கூரை அமைப்புடையதாய் அமைந்தது.நீண்ட வரிக்கற்கள் செங்குந்தாய் அமைந்து விளங்குவது இதன் சிறப்பு. இக்கோயிலில் சிவன், அம்மன் இருவருக்கும் தனித்தனியே சந்நிதி உண்டு.

சிவன் சன்னதி கருவறை, அந்தராளம் நந்தி மண்டபம் என்ற அமைப்புடையது. நந்தி மண்டபத்தின் வடக்கே நடராஜர், சிவகாமி, சம்பந்தர் ஆகியோரின் செப்புப்படிமங்கள் உள்ளன. இவை தெற்கு நோக்கியவை. இறைவியின் கோயிலும் கருவறை, அந்தராளம்,

அர்த்த மண்டபம் என அமைந்தது. அர்த்த மண்டபத்தின் வடக்கே பள்ளியறை உள்ளது. இவ்விரு தனிக்கோயில்களைச் சுற்றியும் வெளிப்பிரகாரம் உண்டு. இரு கோயில்களுக்கு முன்பு ஒரு மண்டபம் உண்டு.

## மூலவர்:

ஜமதக்னீஸ்வரர் லிங்க வடிவினர். கல் படிமம். ஆவுடையில் உள்ளது. விழாப்படிமம். சோமஸ்கந்தர் இறைவியுடன் செப்புப் படிமமாய் உள்ளார். இறைவி கல் படிமம். நின்ற கோலம். இரண்டு கைகள். ஒரு கையில் குவளை மலர். மறு கை லோலாஹஸ்தம்.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலில் உள்ள பரிவார தெய்வங்கள் மேற்கு பிரகாரத்தில் தர்மசாஸ்தா, கன்னி விநாயகர், வடக்கு சுப்பிரமணியர், சனீஸ்வரர், சண்டேஸ்வரர், சூரியன், சந்திரன் பைரவர் ஆகியோர்.

## பூஜை

காலை மணி 6 முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

ஆறு கால பூஜை

விழா – பங்குனி மாதம் 10 நாட்கள் திருவிழா. புரட்டாசி பாரிவேட்டை, ஐப்பசி திருக்கல்யாணம், தை பாரிவேட்டை, சிவராத்திரி

தொடர்பு தொலை பேசி எண் : 04633 – 233493.



# 52. அருள்மிகு பாலசுப்ரமணியசுவாமி திருக்கோயில்

## ஆயக்குடி, தென்காசி வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | பாலசுப்பிரமணிய சுவாமி |
| தலவிருட்சம் | – | அரசு (இடதுபுறம்) |
| | | வேம்பு (வலதுபுறம்) |
| | | மாவிலங்கு (வலதுபுறம்) |
| | | மாதுளை (வலதுபுறம்) |
| | | கறிவேப்பிலை (வலதுபுறம்) |
| ஆகமம் | – | சிவாச்சாரியார் மரபு |

## அமைவிடம்

தென்காசியிலிருந்து இடைக்கால் சாலை வழி வடக்கே 6 கி.மீ தொலைவில் ஆயக்குடி உள்ளது. தென்காசி பேருந்து நிலையத்திலிருந்து பேருந்து வசதி உண்டு. கோயிலின் வடக்கே அனுமன் கால் ஓடுகிறது. ஆயக்குடி வரலாற்றுசிறப்புமிக்க உள்ள ஊர். இரண்டாயிரம் ஆண்டுகள் பாரம்பரியம் உடையது. பழைய சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படும் திதியன், நாஞ்சில் பொருநன் போன்றோர்கள் ஆண்ட நாட்டின் தலைநகராக ஆயக்குடி இருந்தது என்பது வரலாறு. கி.பி. 7, 8, 9 ஆம் நூற்றாண்டுகளில் செங்கோட்டையும், ஆயக்குடியும் முக்கியமான இடங்களாக இருந்தன.

## தலபுராணம்:

இக்கோயில் பற்றிய கதை வாய்மொழி வடிவில் உள்ளது. மிகப்பல ஆண்டுகளுக்கு முன் ஆயக்குடியின் கிழக்குப் பகுதியில் பச்சேரிமேரு என்ற இடத்தில் ஒரு பண்ணை இருந்தது. அங்கே மல்லவன் என்பவர் இருந்தார். அவர் தன் பண்ணையின் மேட்டில் பாலசுப்பிரமணியனின் அழகிய முகத்தினைக் கண்டார். அதை எடுத்து அனுமன் நதிக்கரை ஓரத்தில் பிரதிஷ்டை செய்தார். அவரது காலத்திற்கு பிறகு வல்லாளர் கண்டன் என்பவர் ஒரு அரச மரத்தின் அருகில் அந்த மூர்த்திபை வைத்து வழிபட்டார். முருகனுடன் தான் வழிபட்ட அம்பிகையையும் வைத்திருந்தார்.

இப்படி இருக்கும்போது ஆயக்குடி ஊர் மக்கள் அந்த மூர்த்திக்கு கோயில் எடுக்க விரும்பினர். ஜோதிடர் ஒருவரிடம் ஆலோசனை கேட்டனர். அவர் அனுமன் நதி அருகே ஒரு சித்தர் வீரசமாதியாகி இருக்கிறார். அவர் குமர கடவுளுடன் ஐக்கியமாய் உள்ளார். அங்கேயே இந்த மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்புங்கள் என்றார். அவர் சொன்ன படி ஒரு நல்ல நாளில் அங்கு பாலசுப்பிரமணியனைப் பிரதிஷ்டை செய்தனர்.

வைகாசி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் புதிதாக கட்டப்பட்ட கோயிலுக்குக் கும்பாபிஷேகமும் செய்தனர். அங்கு சமாதியான சித்தபுருஷர் கோயிலின் பின்புறம் புற்று ஒன்றில் சர்ப்ப ரூபத்தில் வாழ்கிறார் என்பது ஐதிகம். 20—ஆம் நூற்றாண்டு ஆரம்பம்வரை இக்கோயில் கருவறை தென்னங்கீற்றால் வேயப்பட்ட குடிசையாகவே இருந்தது. திருவிதாங்கூர் அரசர்களே இக் கோயிலைக் கட்டினர். 1931—ல்தான் இக்கோயில் கருவறை கட்டப்பட்டது. இந்த ஆண்டில்தான் சித்திரை திருநாள் பாலராமவர்மா திருவிதாங்கூர் அரசராக பொறுப்பேற்றார். அவரே தன் 16—வது வயதில் இக்கோயிலைக் கட்டுவித்தார்.

## கோயில் அமைப்பு:

கோயிலின் முன்மண்டபத்தில் வலப்புறம் வடக்கில் அலுவலர் அறை உள்ளது. முன் வாசலில் சிற்ப வேலைப்பாடு உடைய மரக்கதவு உண்டு. அடுத்து இருப்பது முன்மண்டபம். 12 தூண்கள்

கொண்ட இம்மண்டபத்தை மணி மண்டபம் என்கின்றனர். அடுத்து அர்த்த மண்டபம், 4 தூண்கள் கொண்ட இம்மண்டபத்தில் மயில் வாகனம் உள்ளது. இந்த மண்டப வாசலின் இருபுறமும் வீரபத்திரர், வீரமகேந்திரர் ஆகிய இரு துவாரபாலகர்களாக உள்ளனர். கருவறை சிறியது. அந்தராளத்தில் விழாப்படிமங்கள் உள்ளன.

## மூலவர்:

பாலசுப்பிரமணியன் ஆன மூலவர் கல் படிமம். நின்றகோலம், மயில் வாகனத்துடன் உள்ளார். நான்கு கைகள் இருகைகளில் வஜ்ராயுதமும் சக்தி ஆயுதமும் உள்ளன. பிற இரு கைகள் அபயரவரத ஹஸ்தம் காட்டுகின்றன. ஒரே கல்லாலான படிமம்.

## பரிவார தெய்வங்கள்:

இக்கோயிலில் சூரியன் (இது பக்கமாக உள்ளது), பைரவர், நாகரம்மன், விநாயகர், சிவன், நவநீதகிருஷ்ணன், சண்டிகேஸ்வரர் ஆகிய பரிவார தெய்வங்கள் உள்ளனர். விழாப்படிமமான பாலசுப்பிரமணியர் முத்துக்குமாரசுவாமி எனப்படுகிறார். இது செப்புப்படிமம்.

## சிற்பங்கள்:

முகப்பு மண்டபத் தூண்களில் துர்க்கை, ஒப்பனை மங்கை, இடும்பன் ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன. கோயில் தூண்களில் இடும்பனைக் காட்டுவது அபூர்வம் இக்கோயிலில் உள்ளது. கோயில் முகமண்டப வாசல் மரக்கதவிலும், மரச்சிற்பங்கள் உள்ளன. பசுபதீஸ்வரர், நடராஜர், நந்தி, பார்வதி ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன. ஐந்து தலையும், பத்து கைகளும் கைகளில் ஆயுதங்கள் இரண்டு கைகளில் ஒரு காவடி அதன் இரு நுனியிலும் தூக்கம். அவற்றில் ஒன்றில் ஒரு முனிவர், இன்னொன்றில் பிரம்மா பிற கைகளில் ஆயுதங்களும் உடுக்கு போன்ற கருவிகளும் உள்ளன. இப்படி ஒரு அபூர்வ சிற்பம் உள்ளது.

## பூஜை

காலை மணி 6.00 முதல் 12.00 வரை

மாலை மணி 5.00 முதல் 8.00 வரை ஆறுகால பூஜை

## விழா:

சித்திரைமுதல் நாள், வைகாசி விசாகம், புரட்டாசி பாரிவேட்டை, தைப்பூசம், தைப்பாரி வேட்டை, தைகிருத்திகை, மாசி மகம், ஐப்பசி கந்தசஷ்டி விழா 6 நாட்கள் நடக்கிறது. முதல் நாளில் அன்னக்கொடி ஏற்றுகின்றனர். இந்த கொடிப்பட்டம் காவி நிறத்தில் நீண்டு இருக்கும். இதில் படம் இருக்காது.

இக்கோயில் கந்தசஷ்டி விழா மிக முக்கியமானது. இது போன்ற வித்தியாசமான விழா தென் மாவட்டங்களில் நிகழவில்லை. இக்கோயில் பக்தரான ஒருவர் குழந்தைவேண்டி நேர்ச்சை செய்தார். அவர் வேண்டியது பலித்ததால் தங்க வேல் ஒன்றைக் கொடுத்திருக்கிறார். வேல் இலைப்பகுதியில் நடுவில் பச்சைக்கல், சுற்றிலும் வைரம் பதிக்கப்பட்டுள்ளது. கந்தசஷ்டி அன்று இந்த வேலை சுப்பிரமணியர் வைத்திருப்பார்.

இக்கோயில் கந்தசஷ்டி விழா முதல் நாளில் ஆயக்குடி மல்லபுரம் ஏரியின் அருகில் உள்ள அனுக்ஞா கணபதியின் அனுமதி பெறுகின்றனர். இதன் பின் கொடியேற்று நடக்கும். சூரசம்ஹார விழா ஆயக்குடி சௌந்தர்ப நாயகி சமேத காலகண்டேஸ்வரர் கோயிலின் அருகில் உள்ள வளாகத்தில் நடக்கிறது. இது யுத்த களமாக கொள்ளப்படுகிறது.

மூன்று ஆண்கள் சிங்கமுகன், மகாசூரபத்மன், பத்ம கோபன் வேடந்தாங்கி இருப்பர். சேனைகுலத்தாருக்கு இந்த விழாவில் முக்கிய பங்கு உண்டு. இவர்கள் வீரபாகுவின் வம்சத்தினராகவே கருதப்படுகின்றனர்.

## நேர்ச்சை:

குழந்தை இல்லாதவர்கள் இக்கோயில் அருகே உள்ள அனுமன் நதியில் உள்ள பாறையில் பாயாசம் படைத்து நேர்ச்சை செய்தால் பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கை உள்ளது.

தொடர்பு தொலை பேசி எண் : 04633 – 233493.



# 53. அருள்மிகு மதுநாதசுவாமி திருக்கோயில்

## இலத்தூர், செங்கோட்டை வட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | – | மதுநாதசுவாமி (தேனீஸ்வரர்) |
| இறைவி | – | அறம்வளர்த்த நாயகி (தர்மஸ்தவர்த்தினி) |
| தலவிருட்சம் | – | புளியமரம் |
| ஆகமம் | – | காமிகம் (சிவாச்சாரிய மரபு) |
| விமானம் | – | துவிதளம் |

## அமைவிடம்

தென்காசியிலிருந்து நேர்வடக்கு 6 கி.மீ தொலைவில் உள்ளது. செங்கோட்டையிலிருந்தும் 6 கி.மீ தொலைவில் உள்ள ஊர். இலத்தூரில் தங்கும் வசதியில்லை. தென்காசியிலிருந்து இக்கோயிலுக்கும் பிற கோயில்களுக்கும் செல்லலாம். செங் கோட்டையிலும் தங்கலாம். கோயிலின் எதிரே உள்ள தெப்பக்குளம் தீர்த்தமாகவும் கருதப்படும். அனுமனாற்றங் கரையின் அருகில் உள்ள இக்கோயில் இயற்கை எழில் சூழ்ந்த இடத்திலிருப்பது.

## தலபுராணம்:

சிவனுக்கும் பார்வதிக்கும் திருமணம் நடந்த போது கயிலாய மலை சமனின்றி உயர்ந்தது. அதை சமன் செய்ய சப்தரிஷிகளில் ஒருவரான அகத்தியரைத் தென்திசை செல்லும் படி சிவன் அனுப்பினான். அகத்தியர் பொதிகைமலை வந்தார். ஒரு நாள் மாலை வேளை இலத்தூருக்கு வந்தார். அவர் சிவனை வணங்கும் நேரம் அது. அனுமனாற்றில் இறங்கி மண்ணைக்குழைத்து சிவ லிங்கம் ஆக்கினார். அவர் இருந்த இடத்தில் ஒரு புளியமரம் நின்றது. இம்மரத்திலிருந்து மணல் லிங்கத்தின் மேல் தேன் சொட்டியது. அத்தேன் சொட்டச்சொட்ட லிங்கம் கட்டியான கல்லானது. இதைப் பார்த்த அகத்தியர் தேனீஸ்வரர் மதுநாதர் என அழைத்தார்.

அகத்தியரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பஞ்ச கோயில்களில் இதுவும் ஒன்று. இறைவி தேன் சிந்திய ஊர் இலத்தூர்ஆனது என்றும் இலவஞ்சோலையாக இருந்த இவ்விடம் இலவத்தூர் என வழங்கப்பட்டு இலத்தூர் ஆனது என மருவியதாகவும் கூறுகின்றனர்.

இவ்வூரில் ஓடும் அனுமன் நதி உருவானதற்கும் ஒரு கதை உண்டு. ராம லக்குவர் வானரப்படையுடன் இலங்கை செல்ல இவ் வழி சென்றனர். அப்போது இராமனுக்குத் தாகம் ஏற்பட்டது. அனுமனைப் பார்த்தார். அவன் இராமா எனக் கூறி வாலைத் தரையில் அடிக்க ஒரு நதி தோன்றியது. அந்நதி அனுமன் பெயரால் அழைக்கப்பட்டது.

இங்கு சனீஸ்வரனுக்குத் தனிக்கோயில் உண்டு. சனியின் ஆட்சிக்குச் சிவன் கூடத் தப்பவில்லை. விஷத்தை அருந்தியதை யடுத்து ஒரு முறை சிவனை அஷ்டமத்துச்சனி பிடித்துக்கொள்ள சிவன் கடுங்குவளை மலரில் ஏழரை நாழிகை மறைந்திருந்தானாம். அச்சனித்துன்பம் போக இலத்தூர் குளத்தில் நீராடினார் என்பதும் ஒரு கதை. அகத்தியர் சனி பிடித்ததால் பொதிகை மலையில் அலைந்து திரிந்தார். அதன் சக்தி குறைய இலத்தூர் வந்து

இங்குள்ள குளத்தில் நீராடி வடக்கு நோக்கி சனியை வழிபட்டார். அதனால் இக்கோயிலில் சனீஸ்வரர் தெற்கே பார்த்து இருக்கிறார்.

## கோயில் அமைப்பு:

கோயில் முன்மண்டபம், மகா மகாமண்டபம், இரண்டு கருவறைகள், தனித்தனி பிரகாரம், வெளிப்பிரகாரம், பரிவாரக் கோயில்கள். நந்தி மண்டபம் என அமைந்தது. முகப்பு மண்டபத்தின் இடதுபுறம் கோயில் அலுவலக அறை இம்மண்டபத்தை அடுத்து இருப்பது பெரிய மகா மண்டபம். இம்மண்டபத்தில் கிழக்கு நோக்கி தெற்கில் சிவன் சன்னதியும் வடக்கில் அம்பாளும் உள்ளனர். எதிரே பலிபீடம், நந்தி, பைரவர் முதலிய பரிவார தெய்வங்கள் உள்ளன.

சிவன் சன்னதி, கருவறை, அந்தராளம் அர்த்த மண்டபம் என அமைந்தது. அர்த்த மண்டபம் வடக்கில் நடராஜர் சிவகாமியுடன் தெற்கு நோக்கி இருக்கிறார். இதே மண்டபம் தென்மேற்கு அறையில் விழாப்படிமங்கள் உள்ளன. அந்தராளத்தின் முன் வாசலில் இருபுறமும் துவாரபாலகர்கள் சிற்பங்கள் உள்ளன. அதிக வேலைப்பாடில்லாதவை.

அறம்வளர்த்த நாயகியான தர்மஸ்தவர்த்தினியின் கோயிலும் சுவாமி சன்னதி போன்று கருவறை அந்தராளம் அர்த்த மண்டபம் என அமைந்தது. இங்கும் அர்த்தமண்டபம் தென் மேற்கில் அனுக்கிரக விநாயகர் இருக்கிறார்.

சுவாமி சன்னதியையும் அம்மன் சந்நிதியையும் சுற்றி வரமுடியும். இரு சன்னதிகளின் வெளியே ஒரு பிரகாரம் உண்டு. கோயிலைச் சுற்றி கருங்கல்லால் ஆன கோட்டை மதில் உண்டு.

## கருவறை மூலவர்:

மூலவரான தேனீஸ்வரர் என்னும் மதுநாதர் லிங்க வடிவினர். ஆவுடையில் பிரதிஷ்டை, சுயம்புலிங்கம் என்பது ஐதீகம். அகத்தியர் தன் இரு கைகளால் மண்ணால் லிங்கத்தை அமைத்தார் என்னும் அடையாளம் இப்படிமத்தில் உள்ளது. அர்த்தமண்டப வாசலில் தெற்கில் தலபுராணம் தொடர்பான சிற்பம் உண்டு. இதில் ஒரு

மரபுழும் அதன் கீழே சிவலிங்கம், அகத்திபர் காட்டப்பட்டுள்ளனர். இம்மரத்தில் இலை கூட நுட்பமாக உள்ளது.

அறம் வளர்த்த நாயகியான தர்மஸ்தவர்த்தியின் வடிவம் கல்லால் ஆனது. நின்றகோலம். வலது கையில் தாமரை, இடது கை லோலாஹஸ்தம், கழுத்தில் தாலிக்கயிறு இருப்பது போன்று கல்லில் காட்டப்பட்டுள்ளது.

## பரிவார தெய்வங்கள்:

சுவாமி, அம்மன் இரு சன்னதிகளிலும் அனுக்கிரக விநாயகர் இருக்கிறார். சதுர்புஜம் சுவாமி சன்னதியின் அர்த்த மண்டபத்தின் வடக்கே நடராஜர் சிவகாமியுடன் இருக்கிறார். இது செப்புப்படிமங்கள். இங்கு மாணிக்கவாசகர் காரைக்கால் அம்மையார் வள்ளி தெய்வானையுடன் முருகன், சனீஸ்வரர் ஆகியோர் உள்ளனர். எல்லாம் செப்புப்படிமங்கள்.

மகாமண்டபம் வடக்கில் பைரவர் தெற்கு நோக்கி இருக்கிறார். இங்கே மடப்பள்ளியின் அன்னபூரணி வழிபாடு பெறுகிறாள். மேற்கு நோக்கியது. கல் படிமம் நின்ற கோலம் 2 கைகள் ஒன்று லோலாஹஸ்தம்; இன்னொன்றில் அகப்பை.

மகாமண்டபத்தில் உள்ள நந்தி மண்டபத்தில் ஸ்ரீ தர்மலிங்க சாஸ்தா கிழக்கு நோக்கி இருக்கிறார். லிங்கத்தின் முகப்பில் யானை மேல் சாஸ்தா வில் அம்புடன் வேட்டை கோலம். லிங்கத்தில் சாஸ்தா அபூர்வமானது. இம்மண்டபத்தில் சிவன் மேற்கு பார்த்து உள்ளார்.

வெளிப்பிரகாரத்தில் வலம்புரி விநாயகருக்குத் தனிக்கோயில் உள்ளது. கருவறையை ஒட்டிய சுவரில் தட்சணாமூர்த்தி கோயில். தெற்கு பார்த்தது. இது மேற்கு பிரகாரத்தில் உள்ளது. இதே பிரகாரத்தில் சண்முகநாதன், வள்ளி தெய்வானையுடன் இருக்கிறார். கல்படிமம். 12 கைகள் 6 முகங்கள்; திருவாச்சி காட்டப்பட்டுள்ளது.

வடக்கு பிரகாரத்தில் சனி பகவானுக்குத் தனிக்கோயில் உள்ளது. கருவறையில் சனி நின்ற கோலம் 2 கைகள் அபயம், வரதம்

காட்டுவது. காக வாகனத்தின் முகம் கிழக்கு பார்த்து அமைந்தது. இது பொங்கு சனி. கல்படிமம் கால பைரவர் சன்னிதியிலிருந்து இந்த சனியைத் தரிசிக்கலாம்.

சண்டிகேஸ்வரர், சண்டிகேஸ்வரி ஆகிய இருவருக்கும் தனிக்கோயில்கள் உள்ளன. சண்டிகேஸ்வரி அமர்ந்த கோலம்.

இக்கோயில் பந்தளத்து (கேரளம்) அரசர் ஒருவர் கட்டினார் என்பது வாய்மொழி வரலாறு. இக்கோயில் கல்வெட்டுகளின் காலம் 16 ஆம் நூற்றாண்டு வரை செல்லுகிறது. மகாமண்டபம் பிற்காலப்பாண்டியர்கள் கட்டியது.

## பூஜை

| | |
|---|---|
| காலை | 5 மணி நடைதிறப்பு |
| | 6 மணி தீபாராதனை |
| | 11 மணி திருநடையடைப்பு |
| மாலை | 5மணி திருநடைதிறப்பு |
| | 6.30 மணி தீபாராதனை |
| | 8.00 மணி தீபாராதனை |
| | 9.00 மணி திருநடையடைப்பு |

சனிக்கிழமைகளில் காலை 5–1 மணி வரையிலும் மாலை 4 – 8.30 மணி வரையிலும் கோவில் திறந்திருக்கும்.

## விழா:

ஆடிப்பூரம், ஆவணி விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, கந்தசஷ்டி, தை மாத திருக்கல்யாணம், பத்து நாள் விழா, மாசி சிவராத்திரி.

தொடர்பு தொலை பேசி எண் : 04633 – 233493.



# 54. அருள்மிகு ஸ்ரீமூலநாதர் திருக்கோயில்

சாம்பவர்வடகரை, தென்காசி வட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | – | ஸ்ரீமூலநாதர் |
| இறைவி | – | ஸ்ரீமதுரவாணி |
| ஆகமம் | – | மகுடாகமம் (வைதீக மரபு) |
| தலவிருட்சம் | – | வில்வம் |

## அமைவிடம்

தென்காசியிலிருந்து வி.கே.புதூர் சுரண்டை வழிச்செல்லும் சாலையில் 15 கி.மீ தொலைவில் அனுமன் நதியின் கரையில் இருப்பது சாம்பவர்வடகரை ஊர். அதனால் தென்காசியில் தங்கி விட்டு இக்கோயிலுக்கு வரலாம். கோயிலின் முன் பகுதி வரை வாகனங்கள் செல்லும். திருநெல்வேலியிலிருந்து வி.கே.புதூர் செல்லும் பேருந்திலும் இவ்வூருக்கு வரலாம்.

## தலபுராணம்:

இக்கோயில் இருந்த இடம் வில்வமரக் காடாய் இருந்தது. அது ஒரு பொது வழி. அடுத்த கிராமத்திற்குப் பால் தயிர் கொண்டு செல்லும் பாதை. ஒரு நாள் பாண்டிய மன்னனின் கனவில் சிவன் தோன்றி அந்த வில்வ மரக்காட்டில் நான் சுயம்புவாக இருக்கிறேன்.

எனக்குக் கோயில் எடு எனக் கட்டளை இட்டான். பாண்டியன் அந்த இடத்திற்குச் சென்றான். சுயம்புலிங்கத்தைக் கண்டான். அவ்விடத்தில் கோயில் கட்டினான். சுவாமிக்கு ஸ்ரீமூலநாதர் என்றும், அம்பாளுக்கு மதுரவாணி என்றும் பெயர் கொடுத்தான். இங்கு இறைவி சுவாமியின் வலது பக்கம் வீற்றிருக்கிறாள்.

இக்கோயிலின் பரிவார தெய்வமாக உள்ள சதியன் தம்புரான் (பிரம்மஹத்தி) பற்றியும் ஒரு கதை உண்டு. பாண்டியன் மன்னனுக்கு பிரம்மஹத்தி தோஷம் பிடித்துக்கொண்டது. அவன் ஸ்ரீமூலநாதரைப் பணிந்தான். சுவாமி அவன் கனவில் தோன்றி சதியன் தம்புரான் என்பவன் இக்கோயிலில் வீற்றிருக்கிறான். அவனைப் பணிந்தால் உன்னைப் பிடித்திருக்கும் தோஷம் நிவர்த்தி ஆகும் என்று சொன்னார். பாண்டியனும் சதியன் தம்புரானை வணங்கினான். அவன் தோஷம் நீங்கியது.

சதியன் தம்புரான் இக்கோயில் வாசலில் நின்று கொண்டு வருகின்ற பக்தர்களைத் துன்புறுத்தினான். அதனால் சதியனுக்கு ஒரு பீடம் அமைத்துக் கொடுத்தனர். அப்போது சதியன் தம்புரான் இக்கோயிலில் நடக்கும் பத்து நாள் விழாவில் எனக்கு முதல் பூஜை நடத்த வேண்டும் என வேண்டிக்கொண்டார். சுவாமியும் அவன் கேட்ட வரத்தைக் கொடுத்தார். இதன் படியே சித்திரை பவுர்ணமி திருநாள் கொடியேற்றும் நிகழ்ச்சிக்கு முந்திய நாள் மாலையில் சதியன் தம்புரானுக்கு பூஜை நடக்கிறது. இதன் பிறகு தான் சிவாச்சாரியார்கள் காப்பு கட்டுவார்கள்.

## கோயில் அமைப்பு:

இக்கோயில் அமைப்பு வித்தியசமானது. கோயிலின் முன்வாசலைக் கடந்ததும் முகப்பு மண்டபம் உள்ளது. அதை அடுத்து மகாமண்டபம். இதில் வடக்கில் நடராஜர், சிவகாமி, மாணிக்கவாசகர் ஆகியோரின் செப்புப்படிமங்கள் உள்ளன. தெற்கில் விழாப்படிமங்கள். இதை அடுத்து இருப்பது அர்த்தமண்டபம் இது நந்தி மண்டபம் எனவும்படும். இம் மண்டபத்தில் அனுக்கிரக விநாயகர் இருக்கிறார். இதையடுத்தது கருவறை. இது போலவே இறைவியின் கோயிலும் கருவறை

அந்தராளம் அர்த்த மண்டபம் என அமைந்தது. கோயிலினுள் ஒரு பிரகாரமும் வெளிப்பிரகாரமும் சுற்று மதிலும் உண்டு.

## மூலவர்:

சுயம்புலிங்கம், கல் படிமம், கருவறை முன் நந்தி உண்டு. இறைவி நின்ற கோலம். இரண்டு கைகள். ஒன்று மலர் ஒன்று லோலா உறஸ்தம்.

## பரிவார தெய்வங்கள்:

சுவாமி கோயிலின் நந்தி மண்டபத்தின் முன்னே உள்ள மண்டபத்தில் வடபுறம் நடராஜர், சிவகாமி, மாணிக்கவாசகர் உள்ளனர். தென்பகுதியில் விழாப்படிமங்கள் எல்லாம் செப்புப்படிமங்கள். இவற்றில் சுந்தரார், ஞானசம்பந்தர், விஷ்ணு, கங்காள நாதர் என்னும் அருமையான செப்புப்படிமங்கள் உள்ளன.

தெற்கு பிரகாரத்தில் சுரதேவர், வீரபத்திரர், நாக கன்னி, அரசாழ்வார் (விநாயகர்) தட்சணாமூர்த்தி, சப்தமாதாக்கள் ஆகியோர் உள்ளனர். மேற்கு பிரகாரத்தில் கன்னி விநாயகர், காசி விசுவநாதர், சுப்பிரமணியர், சண்டேஸ்வரர், சனீஸ்வரர் உள்ளனர். கிழக்கு பிரகாரத்தில் சூரியன், சந்திரன், அதிகார நந்தி, சாஸ்தா ஆகியோரும் உள்ளனர்.

## பூஜை

காலை மணி 6 முதல் 11 மணி வரை

மாலை மணி 5 முதல் 8 மணி வரை

6 வேளை பூஜை

## விழா:

வைகாசி விசாகம், கந்தர்சஷ்டி, மார்கழித்திருவாதிரை, மாசி சிவராத்திரி.

தொடர்பு தொலை பேசி எண் : 04633 – 233493.

# முக்கியமான தொலைபேசி எண்கள்

| | |
|---|---|
| இணை ஆணையர்/செயல் அலுவலர் தலைமை அலுவலகம், சுசீந்திரம் | 04652 241270 |
| அருள்மிகு பகவதியம்மன் திருக்கோயில், கன்னியாகுமரி | 04652 246223 |
| அருள்மிகு தாணுமாலையசுவாமி திருக்கோயில், சுசீந்திரம் | 04652 241421 |
| அருள்மிகு நாகராஜா திருக்கோயில், நாகர்கோவில் | 04652 232420 |
| அருள்மிகு பகவதியம்மன் திருக்கோயில், மண்டைக்காடு | 04651 222596 |
| அருள்மிகு குமாரசுவாமி திருக்கோயில், வேளிமலை | 04651 250706 |
| அருள்மிகு அழகிய மணவாளப் பெருமாள் திருக்கோயில் செங்கோட்டை | 04633 233493 |

| திருக்கோயில் தொகுதி | வட்டம் | தொலைபேசி எண்கள் |
|---|---|---|
| நாகர்கோவில் | அகஸ்தீஸ்வரம் | 04652 231270 |
| பூதப்பாண்டி | தோவாளை | 04652 282495 |
| பத்மனாபபுரம் | கல்குளம் | 04651 250039 |
| குழித்துறை | விளவங்கோடு | 04651 261928 |
| செங்கோட்டை | செங்கோட்டை | 04633 233493 |

## சுசீந்திரம் – கோபுர சுவரோவியம்



இலட்சுமணன் இந்திரஜித் போர்



தாடகை வதம்

## சுசீந்திரம் – கோபுர சுவரோவியம்



அகலிகை சாபவிமோசனம்



முப்பெருந்தேவியர் – அனுசூயை

## சுசீந்திரம் – கோபுர சுவரோவியம்



இராமலட்சுமணர் சுக்கிரீவர்



மான் மழுவுடன் சிவன்

## சுசீந்திரம் – கோபுர சுவரோவியம்



நாரதரும் முனிவர்களும்



பிரம்மலோகம்

## திருவட்டாறு கோயில் கருவறை சுவரோவியம்







## கோயில் சிற்பங்கள்



கங்காளநாதர்



துவாரபாலகர்



ஊர்த்துவதாண்டவம்



இசைக்கலைஞர்

## கோயில் சிற்பங்கள்



உமாசகித சந்திரசேகரர்



துர்க்கை



திருவிக்கிரமன்



குறவன் – இளவரசி

# கோயில் சிற்பங்கள்



விஷ்ணு சிவன் பிரம்மா



லட்சுமிநாராயணன்



ரதி



ஒப்பனைப்பெண்

## கோயில் சிற்பங்கள்



கங்காளநாதர்



பிரம்மா சாவித்திரி சரஸ்வதி

# கோயில் சிற்பங்கள்



வேணுகோபாலன்



இராவணஸ்வர அனுக்கிரக மூர்த்தி

ஆதிகேசவர் கோவில் மரச்சிற்பம்





கிருஷ்ணன் கோபியர் மரச்சிற்பம்

## நவராத்திரி விழா



கேரளத்திற்கு சரஸ்வதி அம்மன் எழுந்தருளல்
(Inter State Festival)



# திருக்கோயில்கள் வழிகாட்டி வரைபடம்

## பூதபாண்டி தொகுதி

### தோவாளை வட்டம்

N

W

S



# திருக்கோயில்கள் வழிகாட்டி வரைபடம்

## செங்கோட்டை தொகுதி

செங்கோட்டை மற்றும் தென்காசி வட்டம்








| வ.எண். | அன்னதானத் திட்டம் நடைமுறையிலுள்ள திருக்கோயில்கள் விவரம் | பயனாளிகள் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | அருள்மிகு பகவதியம்மன் திருக்கோயில், கன்னியாகுமரி | 150 |
| 2 | அருள்மிகு தாணுமாலயசுவாமி திருக்கோயில், சுசீந்திரம் | 150 |
| 3 | அருள்மிகு நாகராஜா திருக்கோயில், நாகர்கோவில் | 100 |
| 4 | அருள்மிகு பகவதி அம்மன் திருக்கோயில், மண்டைக்காடு | 100 |
| 5 | அருள்மிகு குமாரசுவாமி திருக்கோயில், வேளிமலை | 100 |
| 6 | அருள்மிகு நீலகண்டசுவாமி திருக்கோயில், பத்மனாபபுரம் | 100 |
| 7 | அருள்மிகு ஆதிகேசவப்பெருமாள் திருக்கோயில், திருவட்டாறு | 100 |
| 8 | அருள்மிகு மகாதேவர் திருக்கோயில், திற்பரப்பு. | 100 |

